KALKI 31.10.2004 ரூ.6.00

# கல்கி

"நான் சண்டைக் கோழியா?"

-மீரா ஜாஸ்மின்



திர்பார்ப்பு...
மாற்றம்..!

-ஷோபனா



# "அரசியலில் தாக்குப் பிடிக்க முடியாது"

சுஜாதா–கனிமொழி **24**



# "அவருக்கு கடவுள் பக்தி அதிகம்!"

- விஜயகுமார் மனைவி

**90**




கல்கி

31.10.2004

# வட்டமேஜை

✉ என்னது... கதையிலே இந்த வாரம் கொலை பண்ணினா, அடுத்த வாரம் ரேட்டிங் ஏறுமா? டி.வி சீரியல் இயக்குனர் நாகா சொல்வதே சிதம்பர ரகசியமாய் இருக்கிறதே!
சென்னை - 91, அய்யாறு வாசுதேவன்.

✉ 'கடன் வாங்குவது ஏன்?' என்ற கேள்விக்கு மிக அழகாக விளக்கம் அளித்துள்ளார் வி. கோபாலன்.
திருச்சி - 14, ராஜிராதா.

✉ தீ தழுவிய பட்டாசுத் திரி கனன்று சிறி வெடித்தாற் போலல்லவா 'பட்...பட்..' எனப் பதில்களை வெடித்திருக்கிறார் த்ரிஷா!
கோவில்பட்டி-2, எஸ்.ஏ. கேசவன்.

✉ 'தன் புத்தி கூர்மையால் கம்ப்யூட்டரைப் படைத்த மனிதன், அதைக் கட்டி ஆளும் பணியில், அதே புத்தியை மழுங்க அடித்துக்கொள்ளும் ஆபத்தான போக்கை 'ஆசிரியர் பக்கம்' மூலம் அறிந்து அதிர்ந்தோம்!
பொன்மலை, ஆர். பிரகாஷ்.

✉ ரஜினி ஸ்டைலில், ஆந்திர முதல்வர் தன்னுடைய மகனின் அரசியல் பிர வேசம் பற்றிக் கூறியதை, தராக தெலுங்கிலேயே தெலுசின விதம் சால பாக உந்தி!
அயன்புரம்,
த. சத்தியநாராயணன்.

✉ பி.பி.சி பேட்டியில் ஜெயலலிதாவுக்குத் தண்ணி காட்டிய கரன்தாபரை, மடக்கி மடக்கி கல்கி கேள்வி கேட்டது நச்!
மேல்பட்டி, எல். மாறன்

✉ பிரதமர் ஒருவர், சூப்பர் பிரதமர் நால்வர் என்பதை, நாசூக்காகச் சுட்டிக் காட்டிய கார்ட்டூன் கச்சிதம்!
ஸ்ரீரங்கம், எஸ். கௌரிலக்ஷ்மி

✉ தேங்காய், மாங்காய், பட்டாணி சுண்டல் போன்ற போஸ்ட்கார்ட் கதை, நெஞ்சுன் தாளித மணத்துடன் கமகமக்கிறது!
கு. கழுகாசலபுரம், எஸ்.ஏ. கேசவன்

✉ அரசியலில் ஆதாயம் தேடுவதற்கு நீதித்துறை மட்டும் விதிவிலக்காக இருக்க முடியுமா? டெஹல்கா பந்தாடல், அரசியல் விழிப்புணர்ச்சியின் விளைவு தான் என்பதை தலையங்கம் உணர்த்தியது. நம் அரசியல்வாதிகள் என்றுதான் மக்கள் நலனுக்காகப் போராடுவார்களோ?
திருச்சி, ஆ. அனீஸ்

✉ 'தொடரும் பொடா; கதறும் கிராம'த்தின் நிலை கண்டு மனசு ரொம்பவும் சங்கடப்பட்டது.
மதுரை - 16,
பி. ராஜசேகரன்.

✉ 'சாக்லெட் கண

## சால பாக உந்தி!








வர்' என்று தன் காதல் கணவர் பற்றி திரு மதி கங் கூலி கூறியது திக் திப்பாக இருந்தது!
பருத்திக்கோட்டை, ராஜ செந்தில்.

✉ தராசு கேள்வி-பதிலில் தீவிர வாதத் தடுப்புச் சட்டம் தங்கள் மீதும் பாயக்கூடும் என வி.ஹெச்.பி. தலைவர் சொன் னதன் அர்த்தம், தங்களை தீவிரவாத அமைப்புகள் எனப் பொய்யான முத்திரை குத்தி, நடவடிக்கை எடுக்கக்கூடும் என்றுதான். நீங்கள் கூறியது போல அவர்கள் இப்போதே தீவிரவாத இயக்கங்கள் என்று பொருளல்ல! தேவை யில்லாத ட்விஸ்ட்டிங்!
ஸ்ரீரங்கம், வெ. கிருஷ்ணமூர்த்தி.

✉ கிரிக்கெட் போர்டு தலைவர் தேர்தல் பற்றி 'மேட்ச் ஃபிக்ஸிங்' என்று 'தராசு' அளித்த பதில், சரியான மட்டையடி!
வேலூர் - 6, வே.ந. கதிர்வேல்.

✉ 'இதென்ன கலாட்டா?' சித்திரக் கதை, தொலைக்காட்சியால் நாம் தொலைத்து விட்டவைகளை அருமையாய்ச் சித்திரித் தது.
திருநெல்வேலி-11, வி. கல்யாணி

✉ கொ(ல்)லுன்னு சிரிங்க! சும்மா சொல்லக் கூடாது! கொன்னுட்டீங்க!
சென்னை - 88, வே.முருகேசன்.

✉ முன்னாள் சிறைக் கைதிகளுக்கு வேலை கொடுத்து, சமுதாயத்தில் புது மனிதனாக வாழ சந்தர்ப்பம் கொடுக்கும் 'ஸ்பெக்ட்ரா சர்வீஸஸ்' நிறுவனத்தின் செய்கையை எவ்வளவு பாராட்டினாலும் தகும்.
மதுரை -1, என். பாலகிருஷ்ணன்

✉ 'குறு'ந்தொகை பக்கம் நல்ல பதிவு. இலக் கியச் சாரல் இனிதே தொடரட்டும்.
வயலூர், இரா.பார்த்திபன்.




கல்கி

பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட்டிற்காக பரதன் அச்சகத்தில் அச்சிட்டு வெளியிடுபவர் : கி.ராஜேந்திரன்

கல்கி பில்டிங்க்ஸ், 47-N.P., ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 32

ஆசிரியர் :
சீதா ரவி

ஆசிரியர் குழு :
அனுராதா சேகர்
ஆர்.சி. ஜெயந்தன்

வடிவமைப்பு :
எஸ். ஸ்டீஃபன்
பி.ஆர். ராஜன்

தொலைபேசி :
22345622, 23, 24
தொலைநகல் :
044 - 22345621

மின்னஞ்சல் :
ஆசிரியர் குழு :
kalki@kalkiweekly.com
சந்தா பிரிவு :
subscription@kalkiweekly.com
பிற தகவல்களுக்கு :
info@kalkiweekly.com
கல்கி இன்டர்நெட் முகவரி :
www.kalkionline.com

சந்தா விவரம் :
உள்நாடு :
ஒரு வருடம் : ரூ.330/-
ஆறு மாதம் : ரூ.165/-
வெளிநாடு (விமானத்தபால்) :
ஒரு வருடம் : 62 யு.எஸ். டாலர்
இலங்கை : ரூ.2000/-

Bharathan Publications Private Limited,
Kalki Buildings,
47-NP, Jawaharlal Nehru Road,
Ekkaduthangal, Chennai - 600 032.

ஒவ்வொரு இதழும் உங்கள் மேன்மைக்கு

சென்ற வருடத்துக்கான சிறந்த ஆங்கிலப் படத்துக்கான தேசிய விருது பெற்றிருக்கிறது 'டான்ஸ் லைக் எ மேன்' என்கிற படம். பமேலா ரூக்ஸ் என்ற பெண் இயக்குனர் இயக்கிய இந்தப் படம், இந்தியாவின் முன்னணி நாடக ஆசிரியரான மகேஷ் தத்தானி எழுதிய நாடகத்தின் திரை வடிவம். பரதநாட்டியத்தைச் சுற்றி பின்னப்பட்ட கதை. எனவே,

# "எதிர்பார்ப்புகள் ஏமாற்றம் தருகின்றன!"

டைரக்டர் பமேலா ரூக்ஸ், நாடகத்தைத் திரைப்படமாக எடுப்பது என்று முடிவு செய்தவுடனேயே, பிரதான பாத்திரத்தில் நம் ஊர் நடிகை ஷோபனாதான் நடிக்க வேண்டும் என்று முடிவு செய்துவிட்டார். ஷோபனாவுக்கும் இந்தப் படத்தில் நடித்ததில் மிகவும் திருப்தி. படத்தில் நடனம் பயிலும் ஷோபனாவின் மகளாக நடித்திருப்பவர், பிரபல சிதார் மேதை பண்டிட் ரவிசங்கரின் மகளான அனுஷ்கா சங்கர். படம் வெளியாகி திருப்தியான பதில்கள் வந்து கொண்டிருக்கும் இந்த நேரத்தில், நாம் ஷோபனாவிடம் பேசினோம்...

**சினிமாவில் நடிப்பதையே தவிர்த்து வந்த நீங்கள், இந்தப் படத்தில் நடிக்க ஒப்புக்கொண்டதற்கு என்ன காரணம்?**




''சினிமாவில் நடிப்பதில்லையென்று நான் முடிவேதும் எடுக்கவில்லை. வழக்கமாய் வந்து, கொஞ்சம் அழுதுவிட்டு, செண்டிமென்ட் பேசிவிட்டு, இரண்டு டூயட்களுக்கு ஆடிவிட்டுப் போகிற ரோல்களை நானும் பண்ணி இருக்கிறேன். ஆனால், அது எனக்குப் போரடித்துவிட்டது. எனக்கென்று இல்லை... ஒரு கால கட்டத்துக்குப் பின் யாருக்குமே அப்படித்தான் தோன்றும்.

இந்தப் படத்தைப் பொறுத்தவரை கதை எனக்கு ரொம்பப் பிடித்திருந்தது. என் திறமையை வெளிப்படுத்த, சவால் நிறைந்த காட்சிகளுக்கும் பஞ்சமில்லை. இவை தவிர, ஒரு நடிகை என்கிற அளவில் மட்டுமின்றி, ஒரு டான்ஸர், நடன அமைப்பாளர், இசை என்று இன்னும் பல விஷயங்களிலும் என்னால் பங்களிக்க முடியும் என்று தோன்றியது. எனவேதான் ஒப்புக் கொண்டேன்.

**மகேஷ் தத்தானியின் நாடகம்தான், திரைப்படமாகியுள்ளது. எனவே உங்கள் கதாபாத்திரம் பற்றி தெரிந்துகொள்ள அந்த நாடகத்தைப் பார்த்தீர்களா?"**



• படத்தில்...

"இல்லை. அதற்கு இரண்டு காரணங்கள். அந்த நாடகம் இங்கே நடைபெறவில்லை. ஒருவேளை இங்கே நடை



பெற்றிருந்தாலும் நான் அதைப் பார்க்கப் போயிருக்க மாட்டேன். ஏனென்றால், நான் படத்தில் ஏற்ற கேரக்டரை மேடையில் பார்த்து, அதன் இலேசான பாதிப்பு கூட என்னுள் ஏற்பட்டுவிடக் கூடாது என்பது என் கருத்து. இனிமேல், வாய்ப்பு கிடைத்தால், ஒரு ரசிகை என்ற முறையில் கட்டாயம் அந்த நாடகத்தைப் பார்ப்பேன்."



**படத்தின் ஸ்கிரிப்டைப் படித்தபோது ஏற்பட்ட மனநிறைவு, படத்தில் நடித்தபோதும் ஏற்பட்டதா?**

"நான் எதிர்பார்ப்புகள் வைத்துக்கொள்வது இல்லை. எதிர்பார்ப்புகள் பெரும்பாலும் ஏமாற்றத்தையே அளிக்கும். நான் எந்தப் படத்தில் நடிப்புக்காக தேசிய விருது நிச்சயம் கிடைக்கும் என்று எதிர்பார்த்தேனோ, அப்போது கிடைக்கவில்லை. எதிர்பார்க்காதபோது தேசிய விருது கிடைத்தது. எனவேதான் மனதுக்குப் பிடித்ததை செய்கிறபோதே முழு ஈடுபாட்டுடன் செய்து, அதில் சந்தோஷம் அடைய வேண்டும் என்பது என் பாலிசி. அந்த விதத்தில், நான் எப்படியெல்லாம் பங்களிக்க முடியும் என்று நம்பினேனோ, அது மாதிரி எல்லாம் பங்களிக்க முடிந்தது. அதில் திருப்தியும் சந்தோஷமும் ஏற்பட்டது. அதற்கு மேல் விருதுகள் வந்தால், கூடுதல் சந்தோஷத்துடன் ஏற்றுக் கொள்வேன்."

**படத்தைப் பார்த்துவிட்டு வந்த விமர்சனங்களில், முக்கியமானவை எவை?**

"இரண்டு விதமாகவும், ரியாக்ஷன் வந்தது. உதாரணமாக, மணிரத்னம், நன்றாக இருப்பதாகப் பாராட்டு தெரிவித்தார். ஆனால் ராஜீவ்மேனன், படம் கொஞ்சம் நாடகத்தனமாக இருப்பதாகக் கருத்து தெரிவித்தார்."

-ஷோபனா

**மலையாளபடம் ஒன்றில் நடிப்பதாகக் கேள்விப்பட்டோமே!**

"ஆமாம்! ஜோஷி டைரக்ஷனில் மாம்பழத்துக் காலம் என்ற படத்தில் நடித்திருக்கிறேன். ஹீரோ மோகன்லால். டைரக்டர் ஜோஷியின் யூனிட்டை எனக்குப் பிடிக்கும். மோகன்லாலுடன் நடித்து வெகுநாளாகிவிட்டது-அதற்கும் மேலாக ஒரு பெண் திடீரென்று காணாமல் போய் விடுகிறாள். பத்து வருடங்களுக்குப் பின் ஒரு குழந்தையுடன் வருகிறாள். பத்து வருடங்கள் அவள் என்ன செய்து கொண்டு இருந்தாள்? அந்தக் குழந்தை எப்படி வந்

தது? என்று போகிற கதை. அனுபவித்து நடிக்க முடிந்தது. விரைவில் அந்தப் படம் ரிலீஸ் ஆகிறது. இன்னொரு மலையாளப் படம் ஜெயராஜ் டைரக்ஷன். பிளாட் பாரத்தில் வசிக்கும் மனநிலை பாதிக்கப் பட்ட பெண்மணி. அவளுக்கு ஒரு குழந்தை. அதை எப்படி வளர்க்கிறாள் என்று கதை."

**தமிழில் நடிக்கும் எண்ணமுண்டா?**

"மலையாளம் மாதிரி நல்ல கேரக்டர்கள் அமைந்தால் ஓ.கே!"

**நடனம் எப்படிப் போய்க் கொண்டு இருக்கிறது?**

"வருடம் முழுவதும் புரோகிராம்கள் கொடுத்துக் கொண்டு இருக்கிறேன். வரும் டிசம்பர் சீசன் நிகழ்ச்சிகளுக்காக மாணவிகளைத் தயார் பண்ணிக் கொண்டு இருக்கிறேன். அதன் மூலம் என்னையும் தயார் பண்ணிக் கொள்ளுகிறேன்.

**- சந்திரமௌலி**

# "ஒரு புது அனுபவம்!"

'டான்ஸ் லைக் எ மேன்' திரைப்படத்துக்கு இசையமைத்திருப்பவர்கள் வயலின் இரட்டையர்களான கணேஷ் - குமரேஷ். அந்த அனுபவம் குறித்து நம்மிடம் பகிர்ந்து கொண்டார்கள்.

"நாங்கள் ஷோபனாவுடன் இணைந்து நிறைய பணியாற்றி இருக்கிறோம். எனவே, ஷோபனா மூலம்தான் இந்த வாய்ப்பு கிடைத்தது. இந்த ஆங்கிலப் படத்துக்கு இசையமைத்தது எங்களுக்கு ரொம்ப புதிய அனுபவம். நடிகர், நடிகையர்க்குத் தருவது போல, படத்தின் ஸ்கிரிப்டை எங்களுக்கு முதலிலேயே கொடுத்து விட்டார் டைரக்டர் பமேலா ரூக்ஸ். எனவே அதை ஊன்றிப் படித்து, மனத்திரையில் காட்சிகளைக் கற்பனை செய்து கொண்டோம். அதற்கேற்ப என்னென்ன காட்சிகளுக்கு எப்படி பின்னணி இசை சேர்ப்பது என்று திட்டமிட்டுக் கொண்டோம்.

படம் மொத்தம் ஒன்றரை மணி நேரம். அதில் சுமார் நாற்பது நிமிடத்துக்கு வரும் காட்சிகளுக்கு, படப்பிடிப்புக்கு முன்னதாகவே இசை அமைத்து விட்டோம். டைட்டில் காட்சிகள், ஒத்திகை, அரங்கேற்றம் மற்றும் இதர நடனக் காட்சிகள், கிளைமாக்ஸ் போன்ற காட்சிகள் இதில் அடங்கும். பரத நாட்டியம் சம்பந்தப்பட்ட கதை என்பதால், பழைய பாணியை மட்டுமே கடைப்பிடிக்காமல், நவீன பீட்களையும் பயன்படுத்தியது ஒரு புது முயற்சி. கர்நாடக இசையை மட்டுமின்றி ஃபியூஷன் இசை, இந்துஸ்தானி, மேற்கத்திய பாப் வரை, இடத்துக்கு ஏற்ப, காட்சியின் தேவைக்கு ஏற்ற இசையை வழங்கி இருக்கிறோம். ஒரு தில்லானாவுக்கு தாய் ஆடும் நடனத்தையும், மகள் ஆடும் நடனத்தையும் இசையிலேயே வேறுபடுத்திக் காட்டி இருக்கிறோம். கிளைமேக்ஸ் காட்சியில் வயலின் பயன்படுத்தப்பட்டுள்ள விதத்தை பலரும் பாராட்டினார்கள். படத்தின் முழு பின்னணி இசையும் ஒரு சி.டி.யாக விற்பனை செய்யப்படுகிறது."



• கணேஷ், குமரேஷ்

**- மானஸா**

# ஆசிரியர் பக்கம்

# குற்றத்தின் நிழலில் குழந்தைகள்...

**வீ**ரப்பனின் மகள் பிரபா, கடலூர் புனித வளனார் பள்ளியிலிருந்து நீக்கப்பட்டதும், மீண்டும் சேர்க்கப்பட்டதும், பரபரப்பு மிக்க செய்திகளாக்கப்பட்டிருக்கின்றன.

ஒரு சராசரி குழந்தைப் பருவம் அவளுக்கு அமைய வேண்டும் என்று, அவள் தாய் எடுத்துக் கொண்ட முயற்சிகள் நொறுங்கிப் போய்விட்டன.

குற்றவாளியின் குழந்தைகளாக அவளையும், அவள் சகோதரியையும் பார்க்கிற சமுதாயம், சில முன் தீர்மானங்களின் அடிப்படையில்தான் அவர்களை எடை போடும்.

உண்மையில், வீரப்பன் தனது தலை மறைவு வாழ்க்கையில் அனுபவித்த துன்பங்களைக் காட்டிலும், இந்தக் குழந்தைகள் சமூக வெளிச்சத்தில் அடையக் கூடிய துன்பங்கள்/துயரங்கள் மிக அதிகமாக இருக்கும். இவர்களை ஏற்கும் பள்ளிகளின் பொறுப்பு மிகுதியானது; பணி மிகச் சவாலானது.



சமூக நீரோட்டத்தில் சேராமல் அலாதியான வாழ்க்கையைத் தேர்ந்தெடுப்போரும் சரி, சமூக விரோதிகளாக மாறி வாழ்வோரும் சரி... 'குறைந்த பட்சம் குழந்தைகளைப் பெற்றுக் கொள்ளாமல் இருக்கக் கூடாதா!' என்ற ஆதங்கம் ஏற்படுகிறது.

ஆனால், குடும்ப உறவின் உணர்வு ரீதியான பாதுகாப்புக்கு ஏங்கி, அவர்களும் திருமணம் செய்து கொள்கிறார்கள். வயது வந்த பிறகு அவர்கள் விரும்பித் தேர்ந்தெடுத்த கொடிய வாழ்க்கையின் கரிய நிழல், ஒரு பாவமும் அறியாத அவர்களுடைய சின்னஞ்சிறு குழந்தைகளின் வாழ்வில் இருள் சூழச் செய்கிறது.

தாயின் அரவணைப்பும், தந்தையின் அன்பு தரும் பாதுகாப்புணர்வும், குழந்தைப் பருவத்தின் சுவாசக் காற்று. இவை இல்லாமல் வளர்வதே பெரிய பாதிப்பை ஏற்படுத்தும். போதும் போதாததற்கு, வீரப்பன் இறந்ததையொட்டி மீடியாவும், பொதுமக்களும், அரசும் ஓர் அரக்கனை வீழ்த்திய கொண்டாட்டத்தில் உள்ளனர்.

அதிரடிப் படையின் வெற்றிக் கொண்டாட்டம் பற்றியோ கேட்கவே வேண்டாம். தமிழக அரசின் பாராட்டும் பரிசும் தாராளமாகக் கிடைத்திருப்பதோடு, மீடியாவின் கவனமும் முழுமையாக அதன் பக்கம் திரும்பியிருக்கிறது. அப் படையின் வீரமும் சாகசமும், விதவிதமாக வர்ணிக்கப்படுகின்றன. அதிரடிப்படையின் மோப்ப நாய்களைப் படைத் தலைவர் கொஞ்சி மகிழ்கிறார். அனைவருக்கும் முதல்வர் விருந்து படைக்கிறார்.

இதையெல்லாம் பார்க்கும்/அறியும் போது வீரப்பனின் குழந்தைகள் எவ்வாறு உணர்வார்கள்?

தங்கள் தந்தை கொடூரமான முடிவைச் சந்தித்ததை உலகமே கொண்டாடுகிறது என்னும்போது பிஞ்சு மனங்களில் எழக்கூடிய பாதுகாப்பின்மை ஆழமான வடுக்களை ஏற்படுத்தும்.

அதிரடிப்படைத் தலைவர் டி.ஜி.பி. விஜயகுமார் தமது பணி செவ்வனே முடிந்ததற்காக நேர்த்திக்கடன் செலுத்தியிருக்கிறார்... அந்த உணர்வை நாம் மதிக்கிறோம். ஆனால் அவருக்கும் இந்த அரசுக்கும் இன்னும் கடன் பாக்கியிருக்கிறது - வீரப்பனின் குழந்தைகள் வடிவில்.

மனித உரிமை இயக்கங்கள் குழந்தைகளுக்கு உதவ முன் வரக்கூடும். எனினும், அரசின் ஆதரவும், வீரப்பனை முடித்த அதிரடிப்படையின் அன்பும் அவர்களுக்கு உண்டு என்பது உணர்த்தப்பட்டால்தான், உலகமே தங்களை விரோதிக்கிறது என்கிற நடுக்கத்திலிருந்து அவர்கள் விடுபட இயலும். வீரப்பனின் மனைவியும், அக் குடும்பத்தின் இதர பெரியோர்களும்கூட இதற்கு ஒத்துழைத்து, அக் குழந்தைகளின் வாழ்வை அர்த்தமுள்ளதாக்க வேண்டும். ○

அடுத்த இதழ் **கல்கி**

## தீபாவளி இரட்டைச் சிறப்பிதழ்...

முத்தான மூன்று தொடர்கள் ஆரம்பம்...



**முக்கூர்** எழுதும்

# குறையொன்றுமில்லை

ஏழாம் பாகம்



தெம்பக்கு தென்கச்சி...



சிரிப்பக்கு சின்னான் செய்திகள்...



வம்பக்கு அமி...

# எங்க ஊர் பிள்ளையார்



விநாயகருடன் வாசகர்கள்
பங்கேற்கும் பகுதி



ஏவி.எம்.சரவணன் எழுதும்
திரையுலக அனுபவத் தொடர்

# அந்த நாள் ஞாபகம்



பணத்துக்கு
பங்கு மார்க்கெட்
டிப்ஸ்...



டேஸ்ட்டுக்கு
மைக்ரோவேவ் மாமி...

இன்னும்... இன்னும்...

## பட்டான இணைப்பு;
## பட்டுப் புடவை பரிசு!

அலசல்

# மீண்டும் அத்வானி!

எல்.கே. அத்வானி பா.ஜ.க.வின் தலைவராக மீண்டும் பொறுப்பேற்றிருக்கிறார். வெங்கய்யா நாயுடு தலைவர் பதவியிலிருந்து விலகியதற்கு பலவித காரணங்கள் கற்பிக்கப்படும் சூழலில், பா.ஜ.க.வின் இல. கணேசனிடம் இது குறித்து கேட்டோம். அப்போதுதான் டெல்லியிலிருந்து திரும்பியிருந்தவர், பயணக் களைப்பையும் மீறி நம்மிடம் கருத்துக்களைப் பகிர்ந்துகொண்டார்.

***பாராளுமன்றத் தேர்தல் தோல்வி என்ற பேரிடியிலிருந்து சமாளித்து எழுந்திருப்பதற்கு முன்பாகவே, மறுபடி மகாராஷ்டிரத்தில் ஒரு அடி விழுந்திருக்கிறதே!***

"மகாராஷ்டிர மாநிலத்தில் எங்களால் ஆட்சி அமைக்க முடியாமல் போய்விட்டது என்பது உண்மை. ஆனால் எங்களுக்குப் படுதோல்வி என்று சொல்வதை ஏற்றுக் கொள்வதற்கில்லை. அதேபோல காங்கிரஸ் அமோக வெற்றி பெற்றிருப்பதாகவும், அந்தப் பெருமை சோனியா காந்திக்குரியது என்றும் கலைஞர் உட்பட பலரும் புகழ்கிறார்கள். உண்மையில் பார்த்தால், காங்கிரஸுக்கு வாக்கு எண்ணிக்கையும், சீட்டு எண்ணிக்கையும் குறைந்துள்ளன."

***மீண்டும் மீண்டும் மக்கள் பி.ஜே.பியை நிராகரிப்பதற்கு என்ன காரணம்?***

"பல காரணங்கள் உண்டு. அவை விரிவாக கட்சியால் ஆராயப்படுகின்றன. கூட்டணிக் கட்சியான சிவசேனாவின் சில நிலைப்பாடுகளை ஒரு காரணமாகச் சொல்லலாம்."

***தமிழகத்தில் தோல்விக்கு அ.தி.மு.க. தான் காரணம் என அத்வானியே சொல்லிவிட்டார். இப்போது, மகாராஷ்டிரா தோல்விக்கு சிவசேனா காரணம் என்கிறீர்கள். அப்படியென்றால், கூட்டணிக் கட்சிகள் பி.ஜே.பி.க்கு பலமா? பாரமா?***

"காங்கிரஸ் கட்சியை, மற்ற எந்தக் கட்சியும், தனித்து நின்று எதிர்த்து, வெற்றி பெற முடியாது என்ற நிலையில், எதிர்கட்சிகள் ஒன்று சேர்ந்து காங்கிரஸ் கட்சியைத் தோற்கடித்தன. அன்று காங்கிரஸ் கட்சி இருந்த நிலையில் பா.ஜ.க இன்று இருக்கிறது. இருந்தாலும், தனித்துப் போட்டியிட்டு, பெரும்பான்மை பெற இயலாத சூழ்நிலையில், கூட்டணி அமைத்துக்கொள்ள முன்வந்தது பா.ஜ.க. ஆதர்சமான நிலை என்பது கூட்டணி என்கிற பாரம் இல்லாத தனித்த ஆட்சி தான். ஆனால் நாட்டு நிலைமை கருதி, கூட்டணி அமைத்துக் கொள்ள வேண்டி இருக்கிறது. நிறையக் கட்சிகள் கூட்டணியில் இடம் பெற்றிருந்தாலும், ஒருமித்த கருத்தை ஏற்படுத்தி, ஐந்தாண்டு காலம் முழுமையாக ஆட்சி நடத்த பா.ஜ.க.வால் முடிந்தது. ஆனால் இன்றைய நிலைமை என்ன? மத்திய அரசை தினம் தினம் கம்யூனிஸ்ட்டுகள் மிரட்டிக் கொண்டு இருக்கிறார்களே!"

***சமீப காலமாக, பா.ஜ.க. தலைவர்கள் முழுமையாக இரண்டாண்டு காலம் பதவி வகிக்க முடியாமல் போனது ஏன்?***

"பங்காரு லட்சுமணன் (டெஹல்கா

விவகாரத்தில்) தார்மிகப் பொறுப்பு ஏற்று பதவி விலக நேரிட்டது. ஆட்சியின் வேகத்துக்கு ஈடு கொடுக்கும்படியாக உழைக்கக் கூடிய தலைவர் தேவைப்பட்டதால், (ஜனா கிருஷ்ணமூர்த்திக்குப் பதிலாக) வெங்கய்யா நாயுடுவைக் கொண்டு வந்தார்கள். அவர் கட்சி வளர்ச்சிக்காக இந்தியா முழுவதும் சுற்றுப் பயணம் செய்தார். கடுமையாக உழைத்தார். ஆனால், அவரது மனைவி, கடந்த

# அவசியமென்ன?

## - இல.கணேசன் பேசுகிறார்

ஏழெட்டு மாதங்களாக மிகவும் நோய் வாய்ப்பட்டு இருக்கிறார். அவருடன் இருந்து கவனிக்க தேவையான நபர்கள் இல்லை. ஆகவே, வெங்கய்யா நாயுடு பதவி விலக முன் வந்தார். அவரது ராஜினாமாவுக்கும், தேர்தல் தோல்விக்கும் எந்த சம்பந்தமும் இல்லை."

***மீண்டும் அத்வானியையே கட்சித் தலைவராக்க என்ன அவசியம்?***

"சில மாநிலங்களில், கட்சியில் பிரச்னைகள் உள்ளன. இந்தச் சூழ்நிலையில், இடைக்கால ஏற்பாடாக அத்வானி போன்ற மூத்த தலைவர் தலைமை ஏற்று வழி நடத்திச் சென்றால், நல்லது என்று கருதி எடுக்கப்பட்ட முடிவு இது. அவர் தலைமையில் கட்சி புதிய உத்வேகம் பெற்றுள்ளதை நான் கண்கூடாகப் பார்க்கிறேன்."

***திருநாவுக்கரசர் தவிர உங்கள் கட்சியில் மற்றவர்கள் அ.தி.மு.க.வையும், ஜெயலலிதாவையும் கடுமையாக விமர்சனம் செய்வதில்லையே... ஏன்?***

"பா.ஜ.க.வில் தலைவர்கள் கூடிப் பேசி, முடிவுகள் எடுக்கப்படுகின்றன. அவற்றை அடிப்படையாகக் கொண்டே பல தலைவர்களும் அறிக்கைகள் வெளியிடுகிறார்கள். வார்த்தைகள் வேறாக இருந்தாலும், சிந்தனை ஒன்றுதான். எந்த விஷயமானாலும் பிரச்னையின் அடிப்படையில் தமிழ்நாட்டு அரசை நாங்கள் விமர்சிக்கிறோம். வீராணத்தைக் கொண்டு வந்ததும், வீரப்பனைக் கொன்றதும் ஜெயலலிதாவுக்குப் புகழ் சேர்ப்பவை. அவற்றை மற்ற அரசியல் கட்சிகள் சொந்தக் காரணங்களுக்காக பாராட்டவில்லை. நாங்கள் பாராட்டத் தயங்கவில்லை. அவசியமானபோது கண்டிக்கவும் தயங்க மாட்டோம்."



***"சரி, பா.ஜ.க. - அ.தி.மு.க கூட்டணி இருக்கிறதா? முறிந்து விட்டதா?***

"கூட்டணி என்பது இரண்டு சந்தர்ப்பங்களில்தான் இருக்கும். ஒன்று தேர்தலின்போது, இரண்டு ஆட்சியில் இருக்கிறபோது. இப்போது இரண்டுமே இல்லை என்பதால், கூட்டணி என்பதே இல்லை."

**- எஸ். சந்திரமௌலி**



இயற்கையின் எழிலால்
படைக்கப்பட்டது..
பெண்மைக்கு ஓர்
அன்பளிப்பு...
குமரன்
சில்க்ஸ்
பட்டு கனவுகள் 1955 முதல்
12, நாகேஸ்வரன் சாலை,
(பனகல் பார்க் எதிரில்)
தியாகராய நகர், சென்னை – 17.
போன் : 24343544, 24343727, 24343757.
Website : www.kumaransilks.com
e-mail : kumaransilks@vsnl.com

## வீரப்பன் சகாப்தம் உணர்த்தும் பாடம்!

இருபது வருடங்களாக தென்னகத்தை ஆட்டிப் படைத்த வீரப்பனின் சகாப்தத்தை வெற்றிகரமாக முற்றுப்பெறச் செய்த அதிரடிக் காவல் படையினர், முழுமையான பாராட்டுக் குரியவர்கள். அவர்களுடைய கரங்களையும் செயல்பாடுகளையும் பலப்படுத்தி இயங்க அனுமதித்த தமிழக முதல்வரும் பாராட்டுக்குரியவர். கர்நாடக அதிரடிப் படை மற்றும் அரசின் பங்களிப்பையும் குறிப்பிட வேண்டும்.

இத்தனை வருடங்களாக விதவிதமாக முயற்சி செய்தும் வீரப்பனைப் பிடிக்க முடியவில்லை. அவன்தான் கடத்தலில் ஈடுபட்டு யானைகளைக் கொன்றதுடன் பல்வேறு நபர்களைப் பிடித்துக் கொன்றான். வி.ஐ.பி.க்களைப் பிணைக் கைதி களாக்கிப் பணம் சம்பாதித்தான். நாகப்பாவை ஈவு இரக்கமின்றிக் கொன்றான். காவல் துறையும் அதிரடிப் படையும் பல்வேறு விதங்களில் முயன்று தோற்றன. விஜயகுமார் தலைமையிலான அதிரடிப் படை மட்டும் எவ்வாறு வெற்றிபெற்றது...?

வீரப்பன் தளர்ச்சியுற்று இருந்தான்; அவனுக்கு மருத்துவ உதவி அத்தியாவசியமாகத் தேவைப்பட்டது. காலப்போக்கில் அவன் கையில் கலபமாகப் பணம் புரள ஆரம்பிக்க, சில பல சௌகரியங்களுடன் காட்டுக்கு மத்தியிலேயே வாழத்




கல்கி



2004 அக்டோபர் 31
தாரண ஐப்பசி 15
மலர் : 63
இதழ் : 14




தொடங்கினான்.

இந்தக் காரணங்களால் அவனது எச்சரிக்கை உணர்வு குறைந்து சிறிதளவு அலட்சியப் போக்குக் கூட ஏற்பட்டிருக்கக் கூடும்.

அவனது உடல்நலக் குறைவையும் அலட்சியப் போக்கையும்தான் தமிழக அதிரடிப்படை சாதகமாக்கிக் கொண்டது. சூழ்நிலை கனிந்து வந்த நேரத்தில் சிறப்பாகத் திட்டமிட்டது.

பத்து மாதங்கள் திட்டமிடப்பட்டு முக்கால் மணி நேரத்தில் முற்றுப்பெற்ற நாடகத்தைத் தீட்டிய எஸ்.டி.எஃப்பின் தலைவர் விஜயகுமார், பிரத்யேக வாழ்த்துக்குரியவர். ஆனால், இந்த நாடகத்தின் கதாநாயகர்கள், உயிரைப் பணயம் வைத்து வீரப்பன் குழுவினரை 'ஆம்புலன்ஸ்' வடிவ போலீஸ் வேனில் ஏற்றிவந்த ஓட்டுனர் சவரணனும் அவரது சகா குமரேசனும்தான். வீரப்பன் குழுவுக்குள் ஊடுருவி, அவர்களுடைய கூட்டாளி போல் நடித்து, அதிரடிப்படைக்கு உளவு சொல்லி உதவியவர் குமரேசன். இவர்கள் இருவரும் எள்முனை அளவு சந்தேகிக்கும்படி நடந்து கொண்டிருந்தாலும் வீரப்பன் குழுவினர் அந்தக் கணமே அவர்களை வெட்டிச் சாய்த்திருப்பார்கள்.

'ஆம்புலன்ஸ்' வண்டியை ஓட்டிச் சென்ற சரவணன், தன்னைக் காப்பாற்றிக் கொள்ள குதித்து ஓடிய கணத்தில்கூட சுடப்பட்டு இறந்துபோக வாய்ப்பிருந்தது.

அதிரடிப்படையால் சுற்றிச் சூழப்பட்ட வீரப்பன் குழுவை உயிரோடு கைப்பற்ற அப்படை ஏன் முயற்சி செய்யவில்லை என்ற கேள்வி எழவே செய்கிறது.

வெற்றிக் கொண்டாட்டத்திலும் நீண்ட நாள் தொல்லை ஒன்று தீர்ந்த நிம்மதியிலும் இக்கேள்வி மறக்கப்படும் அல்லது பின்னுக்குத் தள்ளப்பட்டுவிடும்.

ஆனால், காவல்துறையும் 'என்கவுண்ட்டர்' நிபுணராகப் பெயர் பெற்றுவிட்ட கூடுதல் டி.ஜி.பி. விஜயகுமாரும் இக்கேள்வியை ஒதுக்கிவிட முடியாது.




பல்வேறு அரசியல் பிரமுகர்களுடன் வீரப்பனுக்கு இருந்த தொடர்பும் அவன் சடலத்தோடு சேர்ந்து அடக்கம் செய்யப்பட்டுவிட்டன.

மறுக்கவோ, மறைக்கவோ முடியாமல் தெளிவாகியிருப்பது வீரப்பனுக்குத் தீவிரவாத தமிழ் விடுதலை இயக்கங்கள் சிலவற்றுடன் இருந்த தொடர்புதான். ஆரோக்கியமற்ற இந்த இயக்கங்கள், நல்ல அரசியல் இயக்கங்களாக மாறி, தமிழ்ச் சமுதாயத்துடன் இணைய இது ஒரு நல்ல சந்தர்ப்பம். ஆனால், அவ்வாறு செய்யாமல், இன்னொரு வீரப்பனை உருவாக்க அவ்வியக்கங்கள் முயன்றால் ஆச்சர்யப்படுவதற்கில்லை. எனவே, வீரப்பனின் மரணத்துடன் காவல் துறையின் பொறுப்போ, அரசின் பொறுப்போ முடிந்துவிடவில்லை.

தொடர்ந்து விழிப்புடன் இருந்து, வீரப்பன்கள் உருவாகக்கூடிய சூழல் நிலவும் பின் தங்கிய மாவட்டங்களை கவனமாகக் கண்காணிக்க வேண்டும்.

இத்தகைய பின்தங்கிய மாவட்டங்களை முன்னேற்றுவதற்கான முயற்சிகளை அரசு பிரத்யேகமாக எடுக்க வேண்டும்.

வீரப்பன் மரணத்தை அவன் வாழ்ந்த பகுதி கிராமத்து மக்களுள் ஒரு சிலர் மகிழ்ச்சியுடன் கொண்டாடுகின்றனர். ஆனால் வேறு பலர், அவனுடைய 'ராபின்ஹுட்' பாணி சாகசங்களில் மயங்கி அவனைக் கொண்டாடவே செய்கின்றனர். வனப்பகுதியை ஒட்டி வாழும் மக்களின் ஆதரவில்தான் வீரப்பன்கள் வளர்கிறார்கள்.

மீடியாகூட, வீரப்பனை காவல் துறைக்குக் கடுக்காய் கொடுக்கும் 'ஹீரோ'வாகத்தான் சித்திரித்து வந்தது. இந்தப் புகழ்ச்சி - பட்டத்தில் அவனது சமூக விரோத செயல்கள் எல்லாம் இரண்டாம்பட்சமாகிவிட்டன.

ஏழ்மை ஒழிந்து, கல்வியும் வேலைவாய்ப்புகளும் பெருகினால் மட்டுமே இத்தகைய 'ராபின்ஹுட்' வில்லன்கள் மதிப்பும் ஆதரவும் இழப்பார்கள்.

அதற்கான முயற்சிகளை தமிழக அரசு உடனடியாக எடுக்கட்டும். ●

# சேனல்

புடைவை அல்லது சுடிதாருக்கு மேட்சிங்காக, அதே கலரில் ஒரு பெண் வளையல், கம்மல் அணிந்து செல்வதைப் பார்த்திருக்கிறோம். ஆனால் 'இன்றைக்கு வெள்ளை நிறப் புடைவையா... எடு நோக்கியா 7600,' 'ப்ரௌன் நிறமா, ஒரு சோனி எரிக்சன் 0682' என்று ட்ரெஸ்ஸுக்கு மேட்சிங்காக செல்ஃபோன் எடுத்துச் செல்லும் அதிசயப் பெண்ணைப் பார்த்ததுண்டா?

தமிழ்நாட்டில் எந்த வி.வி.ஐ.பி.யிடமும் இல்லாத அளவிற்கு, சன் டீ.வி தொகுப்பாளினி

# செல்ஃபோன் பெண்ணே...

ஃபேடிமா ஹனிடியூவிடம் மட்டும் பதினைந்திற்கும் மேற்பட்ட வண்ண வண்ண வசதியான செல்ஃபோன்கள் உண்டு. தன் வசம் ஒரு செல்ஃபோன் கதையே வைத்திருக்கிறார் இவர்.

"99ல நான் ஸ்டெல்லா மேரிஸ்ல படிக்கும்போது, வீட்டுக்கே தெரியாம எரிக்சன் செல் வைச்சிருந்தேன். அப்போ காலேஜ்ல செல்ஃபோன் வைச்சுக்கறது அவ்வளவு பந்தாவா இருக்கும். கடைசியில என் செல்லுலேயே போன் போட்டு அம்மா காச்மூச்னு கத்த, அதோட அதுக்கு முடிவு வந்தது. அப்புறம் சன் டீ.வியில சேர்ந்த புதுசுல, ஆறு மாசம் செல்ஃபோனே இல்லாம இருந்தேன். அப்புறம் ரிலையன்ஸ் போன், நோக்கியா 3310 எல்லாம் வாங்கினேன். அப்புறமா குவைத்துல இருக்கிற என் கஸின் சுபா, அங்கிருந்து விதவிதமா செல்ஃபோன் பரிசா தர ஆரம்பிச்சா. அதுக்கப்புறம் குவைத்துல செல்போன் கடைகளிலேயே லேட்டஸ்டா ஏதாவது மாடல் வந்தா, 'மேடம், ஃபேடிமாவுக்கு பிடிக்கும்'னு அவகிட்டயே சொல்ல ஆரம்பிச்சுட்டாங்க. என்கிட்ட இருக்கிறது பெரும்பாலும் குவைத்திலிருந்து வந்ததுதான்'' என்கிறார்.

இவர் வைத்திருக்கும் பேனாசோனிக் G70 செல்ஃபோனின் விலை 58,000 ரூபாய் (அம்மாடியோவ்!) இதில் வீடியோ வசதி இருப்பதால், எதிரிலிருப்பவர் இவரது முகத்தைப் பார்த்துக்கொள்ள முடியும். கம்ப்யூட்டருடன் இணைத்தால் இன்டர்நெட் கனெக்ஷன் கிடைக்கிறது. குங்குமச் சிமிழ் வடிவ போன், முகம் பார்க்கும் கண்ணாடி உள்ள போன் என்று ஒவ்வொன்றும் வடிவத்திலும் சிறப்பு வசதிகளிலும் அசத்துகின்றன. டஜன் கணக்கில் வைத்திருந்தும், கையில் ஒன்று தான் வைத்துக் கொண்டு வெளியே கிளம்புகிறார்.

"ஒரு செல்ஃபோனை இரண்டு மாதத்திற்கு மேல் உபயோகப்படுத்த மாட்டேன்'' என்று ஏதோ டிடர்ஜெண்ட் சோப் பற்றிப் பேசுவதைப் போல அசால்டாகப் பேசுகிறார்.

"எனக்கு நாளுக்கு நாள் ஆர்வம் அதிகமாயிட்டேயிருக்கு. நாளைக்கு எனக்கு கல்யாணம் நடக்கும்போது கிஃப்ட், மொய் தருவதற்குப் பதிலா, எல்லோரும் செல்ஃபோனையே பரிசா கொடுத்துருங்கன்னு சொல்லிடப் போறேன்'' என்று அத்தனை செல்ஃபோன்களையும் ஆசையாக வாரிக் கொஞ்சுகிறார்.

- கன்

படங்கள்: ராஜன்




உங்கள் மனங்கவர் 'கல்கி' தீபாவளி மலரை இலவசமாகப் பெற இனிய வாய்ப்பு!

'கல்கி'க்கு ஒன்றரை ஆண்டு சந்தா ரூ.495/- கட்டுங்க. ரூ.80/- பெறுமானமுள்ள 'கல்கி' தீபாவளி மலர் அன்பளிப்பாகப் பெறுங்க. இந்த அறிவிப்புக்குப் பிறகு வரும், அல்லது நீட்டிக்கப்படும் சந்தாக்களுக்கு மட்டுமே இந்த அரிய சலுகை!

முந்துங்க! முந்துங்க!

கடைசித் தேதி : 30.10.04

சந்தாத் தொகையை டி.டி/ எம்.ஓ/ காசோலை மூலம் 'கல்கி' என்ற பெயருக்கு அனுப்ப வேண்டும். வெளியூர் காசோலைகளுக்கு ரூ.30/-சேர்த்து அனுப்ப வேண்டும்.

மேலும் விவரங்களுக்கு :
சர்க்குலேஷன் மேனேஜர்,
கல்கி,
47-NP, ஜவாஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல்,
சென்னை - 600 032.

# கல்கி
# தீபாவளி மலர் - 2004

# சிரிப்பு




"அப்படி என்ன பிரமாதமான யோசனை?"

"'கிரிக்கெட்' ஆடற சச்சினுக்கு 'டென்னிஸ் எல்போ' எப்படி வந்ததுன்னுதான்!"

- வெ. சீதாராமன்



"சினிமாவா பார்த்துட்டு திரிஞ்சியே.. பரீட்சைல எத்தனை மார்க்குடா வாங்கியிருக்கே?"

"பத்துக்குள்ள நம்பர் ஒண்ணு சொல்லு!"

- வசந்தி வள்ளுவன்





"என்னங்க இது, உங்க ஒய்ஃபும், உங்கம்மாவும் ஆளுக்கொரு 'ஸ்கேலை' கைல வெச்சுக்கிட்டு இருக்காங்க?"

"'சரிகை' அகலத்துல ரெண்டு பேருக்கும் வித்தியாசம் வந்துடக் கூடாதுன்னுதான்!"

- வெ. சீதாராமன்

அன்னபூரணியை ஆராதியுங்கள்! அவள் அருளுக்கு பாத்திரமாகுங்கள்!

# அன்னம் கொடுக்கும் ஸ்ரீ அன்னபூரணி க்ஷேத்ரமான காசியில் தீபாவளி அமாவாசை நாளில் (12-11-04) கங்கையில் தீபம் ஏற்றி அன்னதானம் செய்வோம்

ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகளின் அருளாசியுடன் புண்ணிய க்ஷேத்ரமான காசியில் தீபாவளி அமாவாசை நாளில் அன்னதானம் செய்வதில் நீங்களும் பங்கேற்கலாம்...

**"ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்" 6 ஆண்டுகளுக்கு மேலாக தொடர்ந்து நடத்தும் அன்னதான சேவை!**

பேரன்புடையீர்! வணக்கம். அருள்மிகு 'ஸ்ரீ அன்னபூரணி அன்னை' தங்களுக்கு அனைத்து நலன்களையும் தந்தருளப் பிரார்த்திக்கிறோம். [illegible] ஸ்ரீ அன்னபூரணி [illegible] "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்" மூலம் [illegible] ஸ்ரீ அன்னபூரணி அருளால் வாழ்நாள் முழுவதும் உணவு [illegible] "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்" மூலம் அன்னதானம் செய்ய அன்புடன் அழைக்கிறோம்.

**தாங்கள் அளிக்கும் நன்கொடை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்ளப்படும்.**

- ரூ. 500 - அனுப்பும் அன்பர்களுக்கு, **ஆன்மீகம் மாத இதழ்** மூன்று மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ. 1000 - அனுப்பும் அன்பர்களுக்கு, **ஆன்மீகம் மாத இதழ்** ஆறு மாதத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ. 2000 - அனுப்பும் அன்பர்களுக்கு, **ஆன்மீகம் மாத இதழ்** ஒரு வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.
- ரூ. 5000 - அனுப்பும் அன்பர்களுக்கு, **ஆன்மீகம் மாத இதழ்** ஐந்து வருடத்திற்கு அனுப்பி வைக்கப்படும்.

காசி, கயா, பிரயாகை (திரிவேணி சங்கமம்) ஆகிய இம்மூன்று பித்ரு க்ஷேத்ரங்களிலும் புண்ணிய காரியங்கள், பித்ரு காரியங்கள், பிண்டம் போடுதல், தர்மங்கள், சிரார்த்தம், திவசம், தர்ப்பணம் போன்றவற்றை அவரவர் விருப்பப்படி அன்னதானக் கைங்கர்ய அன்பர்களுக்கு செய்து தரப்படும்.

**குடும்பத்தில் தாய் தந்தையர்கள், மூதாதையர்களுக்கு பிண்டப்பிரதானம் மற்றும் தர்ப்பணம் காசியிலும், கயாவிலும், பிரயாகையிலும் நேரில் சென்று செய்ய முடியாதவர்களுக்காக, சாஸ்திரிகளைக் கொண்டு "ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்" மூலம் செய்யப்படுகிறது.**

பித்ருக்களுக்கு பிண்டப்பிரதானம் செய்ய காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று பித்ரு க்ஷேத்ரங்களுக்கும் தனித்தனியாக ரூபாய் 1000 அனுப்பும் போது யாருக்கு சிரார்த்தம் செய்ய விரும்புகிறீர்களோ அவரின் பெயர், திதி மற்றும் கோத்ரம் போன்ற விபரங்களையும் அவசியம் தெரிவிக்குமாறு கேட்டுக்கொள்கிறோம். பிண்டப்பிரதானத்திற்காக ரூ. 5000 - அனுப்பும் அன்பர்கள் சார்பாக தொடர்ந்து வருடத்திற்கு ஒருமுறை ஐந்து ஆண்டுகளுக்கு மூன்று பித்ரு க்ஷேத்ரங்களிலும் எந்த இடத்தில் யாருக்கு சிரார்த்தம் செய்ய விரும்புகிறீர்களோ அவர்களுக்கு சிரார்த்தம் செய்யப்படும். பித்ரு காரியங்களுக்கு பணம் அனுப்பும் அன்பர்களுக்கு காசி, கயா, பிரயாகை ஆகிய மூன்று இடங்களிலும் உள்ள தெய்வீக ஆதாரமான 'அக்ஷய வடத்தின்' படமும், கயாவில் உள்ள விஷ்ணு பாதத்தின் படமும் அனுப்பி வைக்கப்படும். நம் வீட்டில் செய்யும் சிரார்த்தத்திற்கு தாய், தந்தையர், உறவினர்கள் மட்டுமே பங்குகொள்ள வாய்ப்புண்டு. மூன்று பித்ரு க்ஷேத்ரங்களில் ஏதாவது ஒரு அக்ஷய வடத்தில் (ஆலமரம்) பிண்டப்பிரதானம் செய்தால் ஏழு தலைமுறைக்கு பித்ருக்கள் கட்டாயம் முக்தி அடைவதுடன் பித்ரு தோஷங்களும் நிவர்த்தியாகும்.

அன்னதானத்திற்கு நன்கொடையை அனுப்புவோர் தங்களுடைய வேண்டுதலையும், பிரார்த்தனையையும் தெரிவித்தால் அதற்கேற்ப நீங்கள் விரும்பும் அமாவாசை தினத்தில் காசியில் அன்னதானம் செய்கிறோம். அன்னதானத்திற்கு நன்கொடையாக ரூ.1000, ரூ.2000, ரூ.5000 அனுப்பும் அன்பர்களுக்கு காசி ஸ்ரீ விஸ்வநாதர் திருக்கோவிலில் பூஜிக்கப்பட்ட சாலிகிராமம், கங்கா தீர்த்தத்துடன் கூடிய காசி செம்பும், ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் விக்கிரகமும் ஸ்ரீ அன்னபூரணி அன்னையின் வண்ணப்படமும், சிறிய அளவில் சிவபுராண புத்தகமும் அனுப்பி வைக்கப்படும்.

அன்னதானத்திற்கு ரூ. 5000- அனுப்பும் அன்பர்களுக்கு ஐந்து வருடங்களுக்கு ஆன்மீகம் மாத இதழும் 1024 பக்கங்களுடன் கூடிய பெரிய அளவில் உள்ள ஸ்ரீமத் பகவத்கீதை புத்தகத்தையும் (தமிழில்) அனுப்பி வைக்கிறோம்.

அன்னதான சேவையிலும் கங்கைக்கு தீபம் ஏற்றும் பணியிலும் ஈடுபட விரும்பும் அன்பர்கள் தங்கள் நன்கொடையை Cheque / D.D/M.O. மூலம் Sri Annapoorani Annadhana Seva Trust, Chennai 4 என்ற பெயருக்கு எடுத்து கீழ்கண்ட முகவரிக்கு அனுப்பி கங்கா மாதாவின் புண்ணியமும், அன்னபூரணி அன்னையின் அருளையும் பெறுமாறு அன்புடன் வேண்டுகிறோம்.



**நன்கொடைகளுக்கு 80G பிரிவின் படி வரி விலக்கு உண்டு.**

Cheque / D. D/ M. O. அனுப்ப வேண்டிய முகவரி

## ஸ்ரீ அன்னபூரணி அன்னதான சேவா டிரஸ்ட்

SRI ANNAPOORANI ANNADHANA SEVA TRUST (Regd.)
68, Nadu Street,(Opp. Sri Kapaleeswarar Temple) Mylapore, Chennai - 600 004.
**TEL : 24959302, 24617378. Fax : 044 - 5206 6525. E-mail:sivasiva @ vsnl.net**



"காசியில் தீபாவளி அமாவாசையன்று கங்கா மாதாவுக்கு தீபமேற்றி நிறைந்த ஆயுளையும் குன்றாத ஆரோக்கியத்தையும் பெறுவோம்"

# நடனம்

ஒழுங்காய் நடப்பதற்கே சிரமப்படுவார்கள் சிலர். இன்னும் சிலர் வாழ்க்கை துரத்தும் வேகத்திற்கு ஓடிக்கொண்டிருப்பார்கள். அவர்களைப் பார்த்து, "என்னய்யா! காலில் சக்கரத்தைக் கட்டிக் கொண்டு ஓடுகிறீர்?" என்போம். ஆனால் காலில் நிஜமாகவே சக்கரத்தைக் கட்டிக்கொண்டு ஒருவர் ஆடிக்கொண்டிருக்கிறார் என்றால், நம்புவீர்களா? மீட்!

மிஸ் ஸ்வேதா. இந்த இருபத்து இரண்டு வயது ஆந்திர அழகு, இரண்டாயிரம் மேடைகளில் கலக்கியிருக்கிறது. நாட்டியத்தில் டிப்ளமோ, தெலுங்கில் முனைவர், தேசிய ரோலர் ஸ்கேட்டிங் - சக்கர விளையாட்டுப் போட்டிகளின் நடுவர், லிம்கா - கின்னஸ் சாதனையாளர், அவுட் ஸ்டாண்டிங் யங் இந்தியன் என்று சிறிய வயதிலேயே சிகரத்தை தொட்டிருக்கும் இவர், காலில் சக்கரத்தைக் கட்டிக்கொண்டு, பரதம் மட்டும் ஆடவில்லை... சிரமமான நர்த்தன அசைவுகள் கொண்ட குச்சிப்புடியிலும் கலக்குகிறார். குச்சிப்புடியில் நாம் பாளத் தட்டின் விளிம்பில், சக்கரக் கால்களுடன் பேலன்ஸ் செய்து, தலையில் ஒரு மெழுகுவர்த்தி ஏற்றிய சொம்புடன் ஆடும்போது, கேட்கவே வேண்டாம்!

தொடக்கத்தில் இவரது சாதனைக்கு ஏகப்பட்ட எதிர்ப்பு. பிறகு எதிர்த்தவர்களே பாராட்ட, மருத்துவம் படித்துக்கொண்டே உலக மேடைகளில் சுழல, விமானத்தில் பறந்தபடி இருக்கிறார்.

எப்படி சாதித்தார் இந்தப் புதுமையை?

"சிறுவயது முதலே நடனம், ஸ்கேட்டிங் இரண்டையும் தனியே தான் கற்று வந்தேன். வீட்டில் பயிற்சியின் போது ஒருநாள் திடீர்ப் பொறி. அந்தக்கணமே சக்கரத்தைக் கட்டி நடனப் பயிற்சியைத் தொடங்கினேன். 'இது நடக்காத காரியம்' என்றார்கள். நான் விடவில்லை. இன்று நடனத்திற்கும், விளையாட்டுக்கும் பாலம் அமைத்து விட்ட சந்தோஷத்தோடு பயணம் தொடர்கிறது" என்று சொல்லும் ஸ்வேதா, "ஸ்ரீ சாய்பாபாவின் எழுபத்து ஏழாவது பிறந்தநாளில் அவர் முன்பு ஆடியது, முப்பத்தொன்பது நாடுகளின் தொலைக்காட்சிகளில் லைவ்வாக ஒளிப்பரப்பானது பெரிய சந்தோஷம்" என்கிறார்.



- ஸ்ரீ

படம் உதவி: **பெண்ணே நீ**



- துபாயில் அதிகமா வெயில்?
  கேள்வி கேட்டோர் கவனம் எல்லாம்
  அவன் இறக்கி வைத்த பையில்.
- அழுதான் நம்ம அப்பு
  காந்தி சிலையைக் கட்டிப் பிடிச்சு
  போதலையாம் தண்ணி மப்பு
- பேசுவதில்லை யாரும் ;
  வீட்டில் பேசிக்கொள்ளும் பொம்மைகள்
  நிலைமை எப்போது மாறும்?



# கவிதை

நீங்கள் சுடச்சுடப் படித்து ரசித்திருக்கும் இந்த மூன்ற குறுங்கவிதைகளும் எந்த வகையைச் சார்ந்தவை? 'ஹைக்கூ' என்று பதில் சொன்னால் பப்பி ஷேம்! இது ஹைக்கூ இல்லை. ஆனால் ஹைக்கூ மாதிரி. அதாவது 'லிமரைக்கூ'. இந்தப் புதிய வகை கவிதைகளைப் படைத்து, தமிழ்கூறும் நல்லுலகத்துக்கு முதன்முதலாக அறிமுகப் படுத்தியிருக்கும் அந்தக் கவிஞர், ஈரோடு தமிழன்பன். அதுமட்டுமல்ல... 'சென்னிமலைக் கிளியோப்பாத் ராக்கள்' என்ற தலைப்பிட்டு, ஏராளக் கவிதைகளோடு தமிழின் முதல் 'லிமரைக்கூ' நூலையும் வெளியிட்டிருக்கிறார். அது என்ன லிமரைக்கூ?

லிமரிக் (Limeric) என்பது பதினோராம் நூற்றாண்டில் முகம் காட்டி, பதினேழாம் நூற்றாண்டில் தட்டிக் கொடுத்து வளர்க்கப்பட்ட, ஐந்து வரி ஆங்கிலக் கவிதை. ஐந்தே வரிகள் என்றாலும் அதற்குள் அத்தனை பாய்ச்சல்! வேடிக்கை, விநோதம், நகைச்சுவை, அங்கதம் தான் லிமரிக்கின் உயிர்மூச்சு. முக்கியமாக, யாப்பு முறையில் லிமரிக்கின் சூப்பர் சிறப்பு அதன் இயைபுத் தொடைச்சந்தம். அதாவது இரண்டாவது மற்றும் இறுதி வரிகளின் கடைசி சொல்லின் ஒத்திசைச் சந்த ஒலி.

ஜப்பானிய ஹைக்கூ பற்றி நமக்குத் தெரியும்! 5,7,5 என்னும் அசையமைப்பு கொண்ட மூன்றடிக் கவிதை. ஆனால் லிமரிக் போல இயைபுத் தொடை சந்தொலி இல்லாத குறுங் கவிதை. லிமரைக்கும் ஹைக்கூவும் சேர்ந்த ஒரு கலப்பினக் கவிதை வடிவத்தை, டெட்பாக்கர் (Tedpauker) என்பவர், ஆங்கிலத்தில் முதன்முதலாக உருவாக்கினார். அது தான் 'லிமரைக்கூ'. இந்த ஃப்யூஷன் கவிதைக்கு உலகம் முழுவதும் வரவேற்பு. லிமிரிக்கின் சந்தம், ஹைக்கூவின் வரிமைப் போடு தமிழில் சாதித்திருக்கிறார் தமிழன்பன். நீங்களும் கூட முயற்சிக்கலாம்.

- ஜெ



# கம்ப்யூட்டர்

வில்லியம்மாவுக்கு அறுபத்தைந்து வயது. மூத்த மகன் அமெரிக்காவில் சிஸ்டம்ஸ் இன்ஜினியர். ஆயிரக்கணக்கில் டாலர்களை அனுப்பி வைத்தாலும், மகன் அருகில் இல்லையே என்ற கவலை வாட்டியது. இப்போது அந்தக் கவலையை விரட்டியடித்து விட்டார், எட்டாம் வகுப்பு வரையே படித்திருக்கும் இந்த பாசத் தாய். எப்படி?

எல்லாம் 'பி.சி. நோட்ஸ் மேக்கர்' என்ற எலெக்ட்ரானிக் பேனா செய்திருக்கும் மாயம்! இந்தச் சாதனம் ஒரு 'பி.சி இன்புட் டிவைஸ்.' வில்லி வீட்டில் ஒரு பர்சனல் கம்ப்யூட்டர் இருந்தது. நெட் கனெக்ஷனும் இருந்தது. ஆனால் அவருக்கு மகனோடு சாட் செய்யத் தெரியவில்லை. காரணம், கீ போர்டில் டைப் செய்யத் தெரியாது. இப்போதோ, சாதாரணக் காகிதத்தில் பி.சி. நோட்ஸ் மேக்கர் பேனா வைத்து அவர் எழுத எழுத, அப்படியே கம்ப்யூட்டர் திரையில் அவரது முத்து முத்தான கையெழுத்துகள் மின்னுகின்றன. கடிதம் எழுதி முடித்ததும், விண்டோஸ் 98 மென்பொருள் மூலம் உடனே மகனுக்கு அனுப்புகிறார். அம்மாவின் கையெழுத்தை ஆயிரமாயிரம் மைல்களுக்கு அப்பால் இருக்கும் மகன் படித்துவிட்டு, அவரும் தமிழிலேயே எழுதி அனுப்புகிறார். இப்போது வில்லி அடிக்கடி 'சாட்' செய்கிறார். காலையில் மகன் சாப்பிட்ட பிரேக்ஃபாஸ்ட் என்னவென்பதுகூட தெரிந்து விடுகிறது.



■ சாட் செய்கிறார் வில்லி...

வில்லி போன்ற அம்மாக்கள், இல்லத் தலைவிகள் மட்டுமல்ல, ஃபேஷன் டிசைனர்கள், விரைவாக டிசைன்களை வரைந்து க்ளையண்டுகளுக்கு அனுப்ப, பல துறை ஆராய்ச்சியாளர்கள், ஆராய்ச்சியின் வளர்ச்சியை வரைபடங்களாக விரைந்து பகிர்ந்து கொள்ள, பத்திரிகையாளர்கள், எழுத்தாளர்கள் தங்கள் செய்தியையும், படைப்பையும் உடனுக்குடன் பகிர்ந்து கொள்ள என்று இந்த எலெக்ட்ரானிக் பேனாவின் பயன்பாடு விரிவடைந்திருக்கிறது. இதற்கு மொழி தடையல்ல. முத்தாய்ப்பாக ஆங்கிலத்தில் எழுதினால், திரையில் ஃபாண்ட் அச்செழுத்துகள் தோன்றும் சாஃப்ட்வேரும் இணைக்கப்பட்டுள்ளது.



■ ஜான்சன்

இந்தச் சாதனத்தை பெங்களூரைச் சேர்ந்த ஹைடெக் சொல்யூஷன் நிறுவனம் இறக்குமதி செய்து, தமிழகம் முழுமைக்கும் விநியோகிக்கும் உரிமையை, ஈபுரோ என்ற சென்னை நிறுவனத்துக்கு வழங்கியிருக்கிறது. "சாஃப்ட்வேர் உட்பட இதன் விலை வெறும் ஏழாயிரத்து இருநூறு மட்டும்தான்" என்கிறார் ஈபுரோவின் தலைமைப் பிரதிநிதி ஜான்ஸன். இனி சாட், ஈ-மெயில் ஜமாய்தானா?

- ஜோ

எச்.ஐ.வி. போலவே மனிதகுலத்தை மிரட்டி வரும் மற்றொரு நோய் மஞ்சள் காமாலை. இதில் ஹெபடைடீஸ் ஏ, பி, சி, டி, ஈ ஆகிய ஐந்து கொடிய வகை உள்ளன. இவற்றில் 'பி'க்கு மட்டுமே தடுப்பூசி உள்ளது. எஞ்சிய நோய்களை எதிர்த்துப் போராட, அலோபதி மருத்துவ சிகிச்சைக்கு, மூன்று முதல் ஐந்து லட்சம் வரை செலவிட வேண்டும். இதில் வைரஸ்களை ஓரளவு கட்டுப்படுத்த முடியுமே தவிர, முற்றிலுமாக ஒழிக்க முடியாது. பக்க விளைவுகளுக்கும் பஞ்சமில்லை. என்ன காரணம்?



# மருத்துவம்

இத்தகைய கொடிய வைரஸ்கள், உடலில் உள்ள செல்களின் இதயம் போன்ற நியூக்ளியசில் போய் ஒட்டிக்கொள்கின்றன. இதனால் சாப்பிடும் மருந்துகள் செல்லின் உள்ளே சென்று வேலை செய்ய முடிவதில்லை. இந்நிலையில் சிறுநீரகவியல் சிறப்பு மருத்துவரான டாக்டர் பி. ரவிச்சந்திரன், ஹெபடைடீஸ் வைரஸ்களால் அவதிப்பட்டு வந்த முப்பத்தாறு சென்னைவாசிகளுக்கு, ஹெர்பல் டயாலிஸ் முறையின் மூலம் இரத்தச் சுத்திகரிப்பு செய்து, வைரஸ்களை முற்றிலுமாக ஒழித்துகாட்டி சாதனை படைத்திருக்கிறார். கையோடு தமது கண்டுபிடிப்பை, சிங்கப்பூரில் நடந்த உலக டிரான்ஸ்பிளான்டேஷியா 2004 மாநாட்டில் முழுமையான ஆய்வறிக்கையாக சமர்ப்பித்து, பாராட்டையும் அள்ளி வந்திருக்கிறார். அலோபதியையும் ஆயுர்வேதத்தையும் இணைத்திருக்கிறது இவரது புதிய மருத்துவ சிகிச்சை.

"அலோபதி மருத்துவ உலகில் பெரும் புரட்சியை ஏற்படுத்தியுள்ள மெமரன்ஸ் (அதிநுண்ணிய நேனோ டெக் வடிகட்டி) தொழில் நுட்பம்தான் இதற்கு அடிப்படை" என்று கண்டுபிடிப்பை விளக்குகிறார்.



• புதிய ஹெர்பல் டயாலிசிஸ் இயந்திரம்...

"ஆயுர்வேதம் மற்றும் அலோபதியில் வைரஸ்களை ஒழித்துக்கட்டும் என்று நிரூபிக்கப்பட்ட கீழாநெல்லி, துளசி, வேம்பு ஆகிய மூலிகைச் சாறுகளை நேரடியாக இரத்தத்தில் செலுத்த முடியாது. காரணம், மூலிகையில் உள்ள புரதங்கள் இரத்தத்தில் சேராது. ஆனால் மெமரன்ஸ் வடிகட்டி மூலம் இரத்தத்தில் செலுத்தும் போது, மூலிகைச் சாற்றில் உள்ள ஹைட்ரோ கெமிக்கல் (இரசாயன உயிர் சத்துக்கள்) மட்டும் இரத்தத்துடன் கலந்து வைரஸ்களை முற்றாக ஒழித்துக்கட்டுகிறது" என்று சொல்லும் இவர், ஹெர்பல் டயாலிசிஸ் மூலம் ஹெபடைடிஸ் வைரஸ்களை ஒழித்துக்கட்ட மூன்றாயிரம் முதல் ஐயாயிரம் ரூபாய் போதுமானது என்று வியக்க வைக்கிறார். - ஜி

'எழுத்தாளர் சுஜாதாவை சந்தித்துப் பேச வேண்டும்' என்று நாம் கேட்டதும் உடனடியாக ஒப்புக் கொண்டார் கவிஞர் கனிமொழி. கடந்த வாரத்தின் ஒரு மாலைப்பொழுதில் கல்கிக்காக இருவரும் சந்தித்துப் பேசினார்கள். அவர்களின் உரையாடலிலிருந்து...

# "அரசியலில் தாக்குப்

**கனிமொழி:** அடிப்படையில நீங்க ஒரு கதாசிரியர். ஆனா அதையும் தாண்டி, உங்களுக்குக் கவிதைகள் மேல தனி காதலே இருக்கு. கவிதைகளின் மீது உங்களுக்கு இத்தனை ஈடுபாடு வந்தது ஏன்?

**சுஜாதா:** சின்ன வயசுலேர்ந்தே எனக்கு மரபுல நல்ல ஈடுபாடு உண்டு. நல்ல தமிழாசிரியர்கள் இருந்தாங்க. கவிதையை அழகா சொல்லிக் கொடுத்தாங்க. யாப்பைக்கூட ரொம்ப சுவாரஸ்யமா சொல்லிக் கொடுப்பாங்க. அதுலேர்ந்து கவிதை மேல ஈடுபாடு வந்தது. அப்புறம் கொஞ்சம் கொஞ்சமா புதுக்கவிதைப் பக்கம் கவனம் போனது. இருந்தாலும் நானொரு வெண்பா நண்பன்; மரபு நேசன்ங்கறதுல மாற்றமில்லை. மரபுல சில குறைபாடுகள் இருக்குங்கிறதை நான் ஒப்புக்கறேன். சில எல்லைகள் இருக்கு. நல்ல கருத்தைச் சொல்றதுக்கு அது தடையா கூட இருக்கு. அதனால மரபை மீறுவதில் தப்பிருக்கிறதா எனக்குத் தெரியலை. ஆனா மரபைப் பத்தி எல்லாரும் தெரிஞ்சிக்கணும். சிறுகதை எழுத்தாளரா இருந்து, ஏன் கவிதையை ரசிக்கிறீங்கன்னு கேட்டீங்க... நான் ஒண்ணு கேட்கறேன்... அப்பா அரசியல்ல இருந்தும் நீங்க ஏன் வரலை?





**கனி:** நீங்க ஏன் அரசியலுக்கு வரலை?

**சுஜாதா:** என் அப்பா அரசியல்வாதி இல்ல!

**கனி:** உண்மையைச் சொல்லுங்க...

**சுஜாதா:** அரசியல்ல ஒரு அளவுக்கு மேல என்னால தாக்குப் பிடிக்க முடியும்னு தோணலை.

**கனி:** அதே காரணம்தான் எனக்கும். மேலும் என்னை வெளிப்படுத்திக்க அரசியல் ஒண்ணுதான் வழின்னு நான் நினைக்கலை.

**சுஜாதா:** ரொம்ப நாள் கழிச்சு அப்பா 'கண்ணம்மா' படம்

பண்றார்... அது என்ன உங்க கதையா? நீங்கதான் கண்ணம்மாவா?

**கனி:** ஐயய்யோ... கண்ணம்மா நானில்ல. அது என்னோட கதையும் இல்ல. எங்கிட்ட அவர் கதை எதுவும் சொல்லலை.

**சுஜாதா:** 'கண்ணம்மா' ஸ்கிரிப்ட் எழுத களுக்கெல்லாம் இந்த முறை நிச்சயம் நல்ல தீர்வா இருக்கும்.

'அந்நியன்'ல விக்ரமுக்கு மிக அருமையான பாத்திரம். ரொம்ப சாலஞ்சிங்கா பண்ணி

# பிடிக்க முடியாது"

அவர் ஊருக்குப் போயிருந்தப்போ, நீங்களும்கூடப் போயிருந்தீங்க இல்லையா?

**கனி:** ஆமா. அவர் எழுதிட்டிருப்பார். நான் வெளியில இருப்பேன். 'கண்ணம்மா' இருக்கட்டும். உங்களோட 'அந்நியன்'ல என்ன விசேஷம்?

**சுஜாதா:** அந்நியன்ல முக்கியமா நாம ரெண்டு மூணு விஷயம் கவனிக்கணும். முதன்முதலா ஒரு தமிழ்ப் படத்துக்கு IDBI லோன் கொடுத்திருக்காங்க. இந்திப் படத்துக்கெல்லாம் கொடுக்கறாங்க. ஆனா தமிழ்ப் படத்துக்குத் தரப்படறதில்ல. அதுக்குச் சில விதிமுறைகளும் இருக்கு. தயாரிப்பாளர்கள் எவ்வளவு முதலீடு பண்ணணும்னு நிர்ணயிக்கிறாங்க. இன்ஷூரன்ஸ் பண்ணியிருக்கணும். ஸ்கிரிப்ட் இருக்கணும். படத்தைக் குறிப்பிட்ட டயத்துக்குள்ள ரிலீஸ் பண்ணணும். இந்த மாதிரி விதிமுறைகளை வெச்சுட்டு லோன் தர்றாங்க. எஸ்டாபிளிஷ்ட் கம்பெனிகள் இதுக்கு அப்ளை பண்ணலாம். இதுல முக்கியமான விஷயம், குறைஞ்ச வட்டிக்கு அவங்க லோன் தர்றதுதான். தயாரிப்பாளர்கள் அதிக வட்டிக்குப் பணம் வாங்கிட்டு, திருப்பிக் கட்ட முடியாம அவஸ்தைப்படறதையும், படம் ரிலீஸாகாம முடக்கப்படறதையும் நாம கண்கூடாப் பார்க்கிறோம். இந்தத் தொல்லை





யிருக்கார். ஷங்கரோட முத்திரை இந்தப் படத்திலும் இருக்கும். 'இந்தியன்', 'முதல்வன்' மாதிரியான தர வரிசையில் 'அந்நியனும்' சேரும்.

**கனி:** உங்களோட 'வானம் வாசப்படும்' சரியா போகலையே...

**சுஜாதா:** ஆமா.. நாவலைத் திரைப்படமாக்கும்போது சில அபாயங்கள் இருக்கு. தமிழ் சினிமாவுக்குச் சில விஷயங்கள்லாம் தேவைப்படுது. அஞ்சு பாட்டு, ஃபைட்டு கண்

**சுஜாதா-கனிமொழி**

டிப்பா இருக்கணும். மணிரத்னம் போன்ற பெரிய இயக்குநர்களாலேயே அதுலேர்ந்து மீள முடியல. இந்த நிலைல பி.சி. ஸ்ரீராம் மாதிரியான ஒரு டைரக்டர் உணர்ச்சிகரமான ஒரு கதையைத் தீவிரமா சொல்லும்போது, தமிழ் சினிமாவோட தேவைக்கு ஏத்தா மாதிரி அது அமையல. மற்றபடி வானம் வசப்படும் நல்ல கதை உள்ள படம். முக்கியமா, இது முதல் டிஜிட்டல் படம்.

**கனி:** திருட்டு வி.சி.டி பிரச்னையை டெக்னாலஜி மூலமா தடுக்க முடியுமா?

**சுஜாதா:** நிச்சயம் முடியும். தண்டனை பயம் இருக்கறதால இப்ப கொஞ்சம் குறைஞ்சிருக்கு. டெக்னாலஜியைப் பயன்படுத்தி டிஜிட்டலா மாத்தறது மூலம் திருட்டு வி.சி.டி.ய ஒழிக்கலாம். ஆனா அதுக்கு இன்னும் நம்ம ஊர் தியேட்டர்கள் தயாராகல.



டிஜிட்டல் புரொஜக்டர்ஸ் தியேட்டர்கள்ல தேவை. ஆனா நம்ம கிட்ட இல்ல. இந்த நிலை மாறினா, கண்டிப்பா திருட்டு வி.சி.டி. பிரச்னையை டெக்னாலஜி மூலமா முடிவுக்குக் கொண்டு வரலாம்.

**கனி:** ஏன் நீங்க உங்களைப் பத்தின எந்த விமர்சனத்துக்கும் பதில் சொல்றதில்ல?

**சுஜாதா:** விமர்சனங்களுக்குப் பதில் சொல்றதுல அர்த்தமே இல்ல. ஆளாளுக்கு மாறி மாறி பதில் சொல்லிக்கிட்டு, கடைசில தனிப்பட்ட தாக்குதலா மாறிப் போயிடுது. நாலைஞ்சு கடிதங்களுக்கு அப்புறம் ஜாதிக்குப் போயிடுது.

**கனி:** சிறு பத்திரிகைகளின் குழுச் சண்டைகள் அதிகரித்து வருதே...?

**சுஜாதா:** எல்லாருக்குமே ஒரு அடையாளம் தேவைப்படுது. பேசப்படக்கூடிய நபரா இருக்கணும்னு விரும்பறாங்க. ஒரு நல்ல கதையாலயோ, கவிதையாலயோ பேசப்படக்கூடிய ஆளா இருக்கறதை விட, சர்ச்சைகளால பேசப்படக்கூடிய நபரா இருக்க விரும்பறாங்க. இல்லன்னா ஜனங்க அவங்கள மறந்துடறாங்க.

**கனி:** பத்திரிகைகளை சினிமா அதிகமா ஆக்கிரமிச்சிருக்கே... வாசகர்கள் எளிமையானவங்க. அவங்களுக்கு ஹெவியா தந்தா படிக்க மாட்டாங்கன்னு சொல்லியே, ரொம்ப மலினப்படுத்திட்டாங்க பத்திரிகைகளை... இது பத்தி என்ன நினைக்கறீங்க?

**சுஜாதா:** நீங்க சொல்றது ரொம்பச் சரி. இன்னைக்கு ஒரு பத்திரிகைக்கும் இன்னொரு பத்திரிகைக்கும் வித்தியாசமே தெரியல. எந்தப் பத்திரிகையைப் புரட்டினாலும் ஒரே மாதிரிதான் இருக்கு. சினிமா, கவர்ச்சின்னு ஒரே உள்ளடக்கம். இவங்க சர்க்குலேஷனைத்தான் நம்புறாங்க. மொதல்ல அந்த மாதிரியான ஒரு மனநிலையிலிருந்து நாம வெளில வரணும். வாசகர்கள் விரும்பிப் படிக்கறாங்கன்னு சொல்லிட்டு, எதை வேணா தரக்கூடாது. கொஞ்சம் கொஞ்சமா நல்ல நல்ல விஷயங்களை அவங்களுக்கு அறிமுகப்படுத்தணும். உதாரணமா எம்ப்ரையானிக் ஸ்டெம் செல்ஸ் பத்தி இங்க பல பேருக்குத் தெரியலை. ஒரு சினிமா நடிகரை தெரிஞ்ச அளவுக்கு அறிவியல் பத்தியோ, பொருளாதாரம் பத்தியோ தெரியறதில்ல. சமீபத்துல நோபல் பரிசு சில அபூர்வ சாதனைகளுக்குக் கிடைச்சிருக்கு. அதைப் பத்தி இங்க ஒரு ரிப்போர்ட்கூட இல்லாதது வருத்தத்திற்குரிய விஷயம். அறிவியல் பத்தி எழுதலாம். புத்தகங்கள் பத்தி எழுதலாம். ஆனா இங்க என்ன சோகம்னா, புத்தக விமர்சனத்தைக்கூட நடிகர் நடி

கைகள்தான் செய்யறாங்க. பத்திரிகைகள்தான் கொஞ்சம் கொஞ்சமா இந்த விஷயத்தை மாத்தணும்.

**கனி:** பெண்கள் எழுதறதை ஏன் ஆண்களால ஜீரணிக்க முடியல? பல காரணங்கள் சொல்லி தடுக்கறதிலேயே குறியா இருக்காங்களே...?

**சுஜாதா:** இந்திய சமூகம் பெண்களை எப்போதும் ஆணுக்கு அடுத்ததாத்தான் பார்க்குது. என்னதான் அவங்க எழுதினாலும் இதுதான் நிலை. தனக்கு போட்டியா முளைச்சு, தன்னைக் கடந்து பெண் போறதை ஆண் விரும்புறதில்ல. பெண்களைச் சமமா பாவிக்கற எண்ணம் அவங்களுக்கு இல்ல. இதை வருத்தத்தோடுதான் சொல்ல வேண்டியிருக்கு. ஆனா இப்பல்லாம் பார்த்தீங்கன்னா, இருக்கிற லிமிட்டேஷன்ஸ்லயே பெண்கள் பிரமாதமா சாதிக்கிறாங்க. அதுலதான் அவங்க வெற்றியும் அடங்கியிருக்கு. ஆமா, அப்பா உங்க கவிதைகளெல்லாம் பார்த்துட்டு விமர்சனம் பண்ணுவாரா?

**கனி:** பண்ணுவார். 'அகத்திணை' படிச்சுட்டு, சில கவிதைகள் நல்லா வந்திருக்கறதா பாராட்டினார்.

**சுஜாதா:** கவிதைகளில் பெண்கள் பாலியல் எழுதறது குறித்து விமர்சனம் பண்றாங்களே...

**கனி:** கவிதையோட அழகியலைப் பத்தி விமர்சனம் பண்ணலாம். ஆனா இதை எழுதக்கூடாது, இதுதான் எழுதணும்னு முடிவு பண்ண இவங்க யாரு? பெண்கள் தங்களுக்குப் போட்டியா வர்றதை ஜீரணிக்க முடியாததோட வெளிப்பாடுதான் இந்த விமர்சனம். இவங்க எதை வேணா எழுதலாம். ஆனா நாங்க எழுதக்கூடாதுன்னு கட்டுப்பாடுகள் விதிக்கறாங்க. சமையலறை தாண்டாதேங்கிறாங்க. தாண்டினா வாசப்படிய தாண்டாதேங்கறாங்க. அது சரி, ஒரு நல்ல கவிதையை நீங்க எப்படி வரையறுக்கறீங்க?

**சுஜாதா:** நல்ல கவிதை, கெட்ட கவிதைங்கிற பாகுபாடே கிடையாது. அது ஆளாளுக்கு மாறுபடும். எனக்கு நல்ல கவிதைன்னு தோணறது, உங்களுக்கு நல்ல கவிதையா இல்லாமப் போகலாம். இன்னொரு விதத்துல பார்த்தா, கவிதை மன வளர்ச்சியைச் சார்ந்த விஷயம். சின்ன வயசுல உங்களுக்கு ரொம்பப் பிடிச்ச கவிதை, இப்ப மோசமானதா தெரியலாம். அந்த விதத்துல இப்ப நான் நல்ல கவிதைன்னு எதைச் சொல்வேன்னா, நான் படிக்கிற கவிதையோட ஆதாரமான எமோஷனை ஒருமுறையாவது நான் உணர்ந்



திருக்கணும். 'நான் சொல்ல வேண்டியதை இந்த ஆளு சொல்லிட்டானே'ன்னு நான் பிரமிக்கணும். முக்கியமா எல்லாத்தையும் வெளிப்படையா சொல்றதை விட, எழுதப்படாத வரிகள் மூலமா உணர்த்தணும்.

**கனி:** சின்னத்திரை பத்தி உங்க கருத்து என்ன?

**சுஜாதா:** சின்னத்திரையைப் பொறுத்த வரைக்கும் சினிமாதான் அதிகம் ஆக்கிரமிச்சிட்டிருக்கு. சின்னத்திரைக்கு ஒரு தனி அடையாளம் வேணும். துரதிர்ஷ்டவசமா இன்னும் அது கிடைக்கல. இப்ப சில தனியார் தொலைக்காட்சிங்க, டெலிஃபிலிம் கான்செப்ட்டை உருவாக்கியிருக்காங்க. அது பிற்காலத்துல டிவியோட தனி அடையாளமா மாற வாய்ப்பிருக்கு.

**- மு.மாறன்**

படங்கள்: **பாவை வின்சென்ட்**

# அம்மாவின்





அது 1999ம் வருஷம். பெங்களூரில் ஒரு சாஃப்ட்வேர் நிறுவனத்தில் வேலை பார்த்துக் கொண்டு இருந்தார் அந்த இளைஞர். கிரிக்கெட் சாதனைகள் குறித்த ஒரு சி.டி. தயாரிக்க வேண்டியிருந்தது அந்த இளைஞரும், கூட வேலைபார்க்கும் இன்னொருவரும். ஜிம் லேகர் என்ற இங்கிலாந்தின் பந்து வீச்சாளரைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தனர். ஆஸ்திரேலியாவுக்கு எதிரான கிரிக்கெட் மேட்ச்சில் 1956ல், இரண்டாவது இன்னிங்ஸில் பத்து விக்கெட்டுகளையும் வீழ்த்திய சாதனையாளர் ஜிம் லேகர். அவரது சாதனையை வேறு ஒரு பௌலரால் முறியடிக்க முடியுமா என்ற கேள்வி எழுந்தது. இரண்டு பேருமே, "ஒரு இன்னிங்ஸின் பத்து விக்கெட்களையும் ஒருவரே வீழ்த்துவதா? நோ சான்ஸ்! அந்த சாதனையை இனி ஒருவராலும் முறியடிக்க முடியாது'' என்று ஒருமித்த குரலில் சொன்னார்கள். ஆனால், முடியாது என்று சொன்ன இரண்டாவது மாதத்தில், அந்த இரு இளைஞர்களில் ஒருவர், பத்து விக்கெட்களை வீழ்த்தி சாதனையாளர் ஆனார்! ஆம்... சாட்சாத் அது அனில் கும்ப்ளேவேதான்.

கடுமையான உழைப்பாலும் முழுமையான ஈடுபாட்டாலும், இன்று நானூறுக்கு மேற்பட்ட விக்கெட்டுகளை வீழ்த்தி சாதனையாளர்களின் பட்டியலில் இடம் பெற்றுள்ள கும்ப்ளேவின் சென்னை டெஸ்ட் வேகத்தைப் பார்த்து, வருண பகவானுக்கே பொறுக்கவில்லைபோலும்... ஸ்பீடு பிரேக்கர் போட்டுவிட்டார்.

"அனில் ரொம்ப நல்ல பையன். மென்மையான மனசு கொண்டவன். அதிர்ந்து பேச மாட்டான். பள்ளிக்கூடம் போவது என்றால் அவனுக்கு ரொம்ப பிடிக்கும். டீச்சர்களிடம் அன்பாகவும், மரியாதையாகவும் நடந்து கொள்வான். பல நாட்கள், வகுப்பு டீச்சருக்கு பூங்கொத்து எடுத்துக் கொண்டுபோய்க் கொடுப்பான்." - தமது மகனைப் பற்றி பேசப்பேச, பெருமை பொங்குகிறது அம்மா சரோஜாவுக்கு.

கல்லூரியில் படிப்பிலும் கெட்டிக்காரராக விளங்கிய கும்ப்ளே, திறமையான கிரிக்கெட்டராகவும் பரிணமித்தார். 1989ல் இந்திய அணியில் இடம்பெற்று, இங்கிலாந்து செல்ல வேண்டி இருந்தபோது, "கல்லூரியின் முதல்வர் எம்.ஆர்.வேராலா, கும்ப்ளேவுக் காக சில பரீட்சைகளை முன்கூட்டியே நடத்தியது, கும்ப்ளேவின் திறமைமீது அவர் கொண்டிருந்த நம்பிக்கைக்கு அடையாளம்.

இந்திய அணியின் கேப்டன் கங்குலி, "கும்ப்ளே, ஆர்ப்பாட்டம் இல்லாத அமைதியான மனிதர். அவர் ஐந்நூறு விக்கெட்டுகள் வீழ்த்தி சாதனை புரிய வாழ்த்துகிறேன்" என்று மனமாரப் பாராட்ட, "கங்கிராட்ஸ்! இதைத்தான் கும்ப்ளே சாதனை புரிந்த தினத்தில் அவரிடம் சொன்னேன். இன்றைக்கும் சொல்கிறேன். என் நெருங்கிய நண்பனை வாழ்த்துவதில் சந்தோஷப்படுகிறேன்" என்கிறார் திராவிட்.

அனில் கும்ப்ளேவுக்கு பொதுச் சேவையில் ஈடுபாடு அதிகம். தமது கண்களை தானம் கொடுக்க முன் வந்திருக்கிறார். உடல் தானத்துக்கும் எழுதிக் கொடுத்திருக்கிறார். போலியோ ஒழிப்பில் யூனிசெஃப்புடன் இணைந்து சேவை செய்கிறார்.

# கனவு!

சரி, கும்ப்ளேவிற்கு ஏதேனும் நிறைவேறாத ஆசையிருக்கிறதா?

"ஒரு மேட்ச்சிலாவது ஹாட்ரிக் விக்கெட் வீழ்த்த வேண்டும் என்பது எனது ஆசையல்ல... எனது அம்மாவின் கனவு" என்கிறார் கும்ப்ளே. அது நனவாகும் நாள் வெகு தூரத்தில் இல்லை.

- எஸ்.சந்திரமௌலி

# ஜோதிடம்

# நடக்குமென்பார்;

## அக்னிசர்மா பக்கம்

**மேஷம் :** சேப்பாக்கம் கிரிக்கெட் மாதிரி அட்டகாசமான, அனுகூலமான ஆரம்பம்தான். ஆனா வாரக்கடைசியில சிறு பிரச்னைகள், குழப்பங்கள் கொஞ்சம் சிரமம் ஏற்பட்டு மறையும். தெய்வ பலத்தை அபிவிருத்தி பண்ணிக்கோங்க, சமாளிக்கலாம். உத்தியோகத்தில் புது முயற்சிகளை கொஞ்சம் தள்ளிப் போடுங்க. உலோகப் பொருள், கெமிக் கல்ஸ், ரியல் எஸ்டேட் தொழில்கள்ல இருக்கிறவங்களுக்கு வார ஆரம்பத்தில் ஆதாயம் கிடைக்கும். அரசியல்வாதிகள் கொஞ்சம் எச்சரிக்கையா இருக்கறது நல்லது. குடும்பத்தில் கொஞ்சம் விட்டுக் கொடுத்துப் போறது நல்லது. பெண்களுக்கு உற்சாகமான வாரம்.

**ரிஷபம் :** தேதி ஒண்ணுல இருந்து கொண்டாட்டம்தாங்க. நல்ல தகவல் வந்து சேரும். பண வரவு கூடும். வி.ஐ.பி.க்கள் ஆதரவும் கிடைக்கும். உத்தியோகத்தில எதிர்ப்புகள் மறைந்து ஆதரவு கூடும். விரும்பிய இடமாற்றம் கிடைக்கும். கூடன் தொல்லைகள் மறைந்து நிம்மதி கிட்டும். எலக்ட்ரிகல், கம்ப்யூட்டர், ஆபரணம், சட்டம் துறைகள்ல இருக்கிறவங்களுக்கு சாதகமான நேரம். நாடகம், நாட்டியம், சங்கீதம் சம்பந்தப்பட்டவங்களுக்கு பெயரும், புகழும் கூடும். குடும்பத்தில ஒற்றுமை கூடும். கல்யாணக் கனவில இருக்கறவங்களுக்கு சுப வேளை கூடி வரும். பெண்களுக்கு ஆரோக்கியம் மேன்மையடையும்.

**மிதுனம் :** அதிரடிப்படைக்கு ஏறின மாதிரி உங்க மதிப்பு திடீர்னு உயர்ந்து, அந்தஸ்து கூடிடும். மனசில ஒரு தெளிவு பிறக்கும். உறவுகள் உண்மையாகவே உதவுவாங்க. உத்தியோகத்திலயும் அனுகூலங்கள் ஏற்பட்டாலும், கொஞ்சம் அதிகமா உழைக்க வேண்டி வரும். ஓரளவுக்கு கோரிக்கைகள் நிறைவேறும். கலைஞர்கள் சிலர் பெயர் புகழ் கூடி வெளிநாட்டுக்குப் போகும் வாய்ப்பு பெறலாம். ஏற்றுமதி இறக்குமதி தொழில் அதிக லாபம் தரும். ரியல் எஸ்டேட், சட்டம், ராணுவம், காவல் துறைகள்ல சொல்லிக்கிற மாதிரி முன்னேற்றம் ஏற்படும். குடும்பத்தில கருத்து வேறுபாடுகள் மறையும். பெண்களுக்கு மக்களால் மகிழ்ச்சி ஏற்படும்.

**கடகம் :** உங்க ராசிக்கான கிரகங்கள் 31ம் தேதி அங்கே இங்கேன்னு இடம் மாற்றிக் கொள்றதினால, அதுவரை பொறுங்க. கிரகங்கள் செட்டில் ஆனதும் நீங்களும் செட்டில் ஆயிடுவீங்க. புது அறிமுகம், பணவரவு, பயணம் எல்லாம் காத்திருக்கு. ஆபீஸில் உங்க திறமை வெளிப்பட்டு, உங்க மதிப்பை உயர்த்தும். புதிய முயற்சிகள் வெற்றி பெறும். இரும்பு, யந்திரம், ரியல் எஸ்டேட் துறைகள்ல முன்னேற்றம் ஏற்படும். அரசியல்வாதிகளுக்கு புதிய திருப்பம் காத்திருக்கு. குடும்பத்தில பணக் கஷ்டம் குறையும். மகிழ்ச்சி கூடும். பெண்கள் திட்டமிட்டபடியே சாதிப்பாங்க.

**சிம்மம் :** சென்னையில் கொஞ்சமா மழை பெஞ்சு உஷ்ணத்தை தணிச்சது மாதிரி, உங்களையும் கூலாக்கிற நேரம் இது. உங்க துணிவும், நம்பிக்கையும் கூடி உற்சாகமான மனநிலை ஏற்படும். புது அறிமுகம் சில கிடைக்கலாம். அப்புறம் பார்க்கலாம்னு தள்ளிப்போன உங்க கோரிக்கைகள் ஆபீஸில் கவனிக்கப்பட்டு ஆறுதல் கிடைக்கும். புதிய முயற்சி வெற்றி பெறும். பத்திரிகை, கணிதம், எழுத்துன்னு தொழில் பண்றவங்களுக்கு வரவு கூடும். ஏற்றுமதி இறக்குமதி லாபம் தரும். குடும்பத்தில் வீடு, பொருள், சொத்துன்னு வாங்கி சந்தோஷப்படற நேரம். உடன் பிறந்தவர்கள் உதவியால பெண்களுக்கு மகிழ்ச்சி கிட்டும்.

**கன்னி :** இந்த ராசிக்காரங்களுக்கு அறிவும், தெளிவும் கூடுதலா இருந்தாலும்,

வெளிய தெரியாமலேயே இருந்ததில்லையா? அது வெளிப்பட்டு உங்க திறமை பளிச்சிடற நேரங்க இது. கல்வி, கேள்விகள்ல சிறப்பான இடம் கிடைக்கும். பயணங்கள்ல கொஞ்சம் எச்சரிக்கையா இருங்க. உத்தியோகத்தில சில பிரச்னைகள் ஏற்பட்டு மறையும். புதிய முயற்சிகள் அனுகூலம் தரும். தொழில் ஈடுபாடு உள்ளவங்க, புது முயற்சிகளை தள்ளிப் போடுங்க. எஃகு, எண்ணெய் வகை, உலோகம், கெமிக்கல்ஸ் தொழில்கள் லாபம் தரும். குடும்பத்தில சிறு பிரச்னைகள் ஏற்படலாம். வாக்கு வாதம் வராமப் பார்த்துக்கோங்க. பெண்களுக்கு சுபச் செலவுகள் ஏற்படும்.



கிரேஸி மோகனுக்கு (கன்னி ராசி) திறமை பளிச்சிடற நேரமாம் இது.

அக்டோபர் 27 முதல் நவம்பர் 2 வரை

**துலாம் :** 'நினைப்பதெல்லாம் நடந்துவிட்டால்'னு கொஞ்சம் ஏமாற்றங்களும், கஷ்டங்களும் கலந்து வர நேரங்க இது. மனசைத் தளரவிடாதீங்க. வாரக் கடைசியில எல்லாம் சரியாயிடும். புதியவர்கள்கிட்ட பழகும்

# நடக்கும்!

போது எச்சரிக்கையாயிருங்க. ஆபீசில் அதிக பொறுப்பும், சில திருப்பங்களும் நேரும். இண்டஸ்ட்ரீஸ், காண்ட்ராக்ட், கமிஷன், யந்திரம் தொழில்கள் மேன்மை அடையும். அரசியல்வாதிகள் எச்சரிக்கையோடு இருப்பது நல்லது. குடும்பத்தில் எக்கச்சக்கமான செலவுகள் காத்திருக்கு. சுபச் செலவுதான்னாலும் எச்சரிக்கையா இருந்தா சமாளிக்கலாம். பெண்களுக்கு ஆடை, ஆபரணச் சேர்க்கை மகிழ்ச்சி தரும்.

**விருச்சிகம் :** கிரகங்களோட ஆசியும், பெரியோர்கள் ஆசியும் சேர்ந்து உங்க தெய்வ பலத்தைக் கூட்டி, எல்லாக் காரியத்திலயும் வெற்றி உண்டாக்கும். பிரபு தனவான்கள் ஆதரவும், தாராள பண நடமாட்டமும் ஏற்படும். உத்தியோகத்தில் எதிர்ப்புகள் மறையறது மட்டுமில்லாம, அதிர்ஷ்டமான திருப்பம் ஒண்ணும் காத்திருக்கு. புத்திசாலித்தனமா பயன்படுத்துங்க. தொழில் உபகரணம், எஃகு, வாகனம், டிராவல்ஸ் தொழில்கள் லாபம் கூடும். கலைத்துறையினர் புகழ் பெறுவார்கள். அரசியல்வாதிகளுக்கு மதிப்பு கூடும். குடும்பத்தில சுபமங்கள காரியம் ஈடேறும். பெண்களுக்கு உல்லாச, உற்சாக வாரம்.

**தனுசு :** தெய்வ பலம் கூடி உங்க திறமையில பளிச்சிடற நேரம் இது. எடுத்த காரியங்களை வெற்றிகரமா முடிப்பீங்க. தான தர்மங்கள்ல ஈடுபாடு உங்க புண்ணிய பலனைக் கூட்டும். புது அறிமுகம் சில கிடைக்கலாம். ஆபீஸ்ல புதிய பொறுப்பும், இடமாற்றமும் ஏற்படும். எலக்ட்ரிகல்ஸ், எஞ்சினீயரிங், நிர்வாகத்துறை, பத்திரிகை துறைகள்ல இருக்கிறவங்களுக்கு முன்னேற்றமான காலம். குடும்பத்தில் மகிழ்ச்சி நிலவும். திருமண முயற்சிகள் கூடி வரும். கோர்ட், வழக்குகளில் அனுகூலம் கிட்டும், உடன்பிறந்தவர்களால்

# ஜோதிடம்

**பரிகாரம் :** ஓயாத பிரச்னை, தீராத நோய், கரையாத கடன், மாளாத கவலைன்னு சிக்கல்கள், சிரமங்கள் என்று சிரமப்படறவங்க, கணபதி ஹோமம், துர்கைக்கு அபிஷேகம், அர்ச்சனை செய்து, இல்லாதவர்களுக்கு தான தருமமும், உதவியும் செய்யறதால புண்ணிய பலன்கள் கூடி, தெய்வ பலத்தால கஷ்டங்கள் நிவர்த்தியாகும்.



சிறு பிரச்னைகள் நேரலாம். பெண்களுக்கு நல்ல செய்தி கிடைக்கும்.

**மகரம் :** எதிர்பாராத சந்திப்பு உங்களுக்கு அனுகூலமான பலன்கள் தரக் காத்திருக்கு. வெளிநாட்டுப் பயணம் சிலருக்கு வாய்க்கலாம். தடங்கல், பிரச்னைன்னு நின்றுபோன காரியங்கள் மளமளன்னு முன்னேறும். உத்தியோகத்தில உங்க கோரிக்கைகள் நிறைவேறும். புது முயற்சி, வெளிநாட்டுப் பயணம்னு மாறுதல்கள் வரலாம். எலக்ட்ரானிக்ஸ், மருத்துவம், டிராவல்ஸ், ஓட்டல், லாட்ஜ் தொழில்கள்ல லாபம் கூடும். குடும்பத்தில் குதூகலம் நிலவும். பணக் கஷ்டம் தீர்ந்து நிம்மதி கிடைக்கும். பெண்கள் எண்ணம்போல எல்லாம் நடத்துவாங்க.

**கும்பம் :** வார ஆரம்பத்தில மந்தமா இருக்கற நிலைமை 31ம் தேதிக்குப் பின் மாறுபடும். அது வரை பொறுமையா இருங்க. எதுக்கும் அவசரப்படாம நிதானமா நடத்துங்க. எதிரிகளும் எதிர்ப்புகளும் அடங்கிடும். உத்தியோகத்திலயும், தடைகள் விலகி அனுகூலமான திருப்பம் நேரும். காண்ட்ராக்ட், கமிஷன், ரியல் எஸ்டேட் தொழில்கள் அளவோடு லாபம் பெறும். புதிய தொழில் முயற்சி இப்ப வேண்டாம். குடும்பத்திலயும் கருத்து வேறுபாடு, பணக் கஷ்டம்னு கொஞ்சம் சிரமமா இருக்கும். நிதானமா இருப்பது நல்லது. பெண்கள் குடும்பத்திலயும், ஆரோக்கியத்திலயும் கவனமா இருக்கணும்.

**மீனம் :** நல்லவங்க, ஆன்மிக சத்சங்கம்னு ஈடுபாடு கூடி, தெளிவு பிறக்கிற நேரங்க இது. மனசில உற்சாகம். நிம்மதி நிலவும். உத்தியோகத்திலயும் பிரச்னைகள் மறைஞ்சு அனுகூலப் பலன்கள் கிட்டும். பயணங்களில் எச்சரிக்கையா இருங்க. சட்டம், காவல் துறையினர் சில சோதனைகளை எதிர்கொள்ள வேண்டிவரும். கலைத் துறையினர் மேன்மை பெறுவாங்க. குடும்பத்தில் பிரிந்தவர் ஒன்று சேர்வதால் மகிழ்ச்சி நிலவும். பெண்களுக்கு விருந்து, உறவினர் வருகை, தெய்வ தரிசனம் என்று நிறைவான மகிழ்வு தரும் வாரம்.

| இது நல்ல வாரம் | | | | |
|---|---|---|---|---|
| கிழமை | தேதி | நட்சத்திரம் | திதி | மற்றவை |
| புதன் | அக். 27 (ஐப். 11) | ரேவதி | சதுர்த்தசி | குடந்தை ஆதிகும்பேஸ்வரர் அன்னாபிஷேகம் |
| வியாழன் | அக். 28 (ஐப். 12) | அஸ்வினி | பௌர்ணமி | - |
| வெள்ளி | அக். 29 (ஐப். 13) | பரணி | பிரதமை | - |
| சனி | அக். 30 (ஐப். 14) | கார்த்திகை | துவிதியை | கிருத்திகை விரதம் |
| ஞாயிறு | அக். 31 (ஐப். 15) | ரோகிணி | திருதியை | நெல்லை காந்திமதி அம்மன் உற்சவம் |
| திங்கள் | நவ. 1 (ஐப். 16) | மிருகசீரிஷம் | சதுர்த்தி | - |
| செவ்வாய் | நவ. 2 (ஐப். 17) | திருவாதிரை | பஞ்சமி | குருபூஜை |

# கருணை இல்லம்!

சந்தடிகள் நிறைந்த ஞாயிற்றுக் கிழமை. தெருவில் ராட்டினம் வருகிறது. தன் இரு பெண் குழந்தைகள் ராட்டினம் சுற்ற விரும்ப, தந்தை கோதண்டராமன் இருவரையும் சுற்றவைத்து மகிழ்கிறார். ராட்டினம் சுற்றுபவர், "பாப்பா! உன் ரவுண்டு முடிஞ்சு போச்சு! இறங்கலாம்!" என்று இரண்டரை வயது யாழிஸ்ரீயிடம் சொல்ல, அடம்பிடிக்காமல் சிரித்தபடி இறங்கிவிடுகிறது அக்குழந்தை. அப்போது யாருக்குமே தெரிந்திருக்க நியாயமில்லை, அக்குழந்தையின் வாழ்க்கை ரவுண்ட் அடுத்த இரண்டு நாட்களில் முடியப் போகிறது என்பது! ஆம்... இது நடந்த இரண்டாம் நாள் மாலை, அத்தெருவில் மூன்று சக்கர சைக்கிளை ஓட்டிக் கொண்டிருந்த யாழிஸ்ரீயின் உயிரை, பள்ளி வேன் உருவில் வந்த எமன் தயவு தாட்சண்யமின்றி பறித்துக் கொண்டான்.

இதயத்தை பிசையக்கூடிய இந்த மரண வேதனையின் வலி குறையும் முன்பே, யாழிஸ்ரீயின் பெற்றோர் செய்த செயல் ஒவ்வொரு மனிதரையும் நெகிழ வைத்திருக்கிறது. தனது மகளின் கண்களை தானம் கொடுத்ததன் மூலம் இருவருக்கு பார்வை கிடைக்கச் செய்



• கோதண்டராமன் - பாக்யலக்ஷ்மி



• யாழிஸ்ரீ (ஒன்றரை வயதில்)

# மனிதம்

இருக்கின்றனர் இந்தத் தம்பதி.

மனிதம் நிரம்பிய யாழிஸ்ரீயின் வீட்டை நாம் அடைந்தபோது, எங்கும் சோகம் அப்பிக் கிடந்தது. சுவரில் சாய்த்து வைக்கப்பட்டிருந்தது அந்த இளம் பிஞ்சின் புகைப்படம். பூமாலை அணிவிக்கப்பட்டு அருகில் அப்பிஞ்சு ஆசையாசையாய் எழுதிக்காட்டும் ABCD நோட் புக். இதுதான் அந்த வீட்டின் இன்றைய நிலை.

"யாழிஸ்ரீன்னு பேர் வைக்கிறதுக்கு அவங்க அப்பா அவ்ளோ மெனக்கெட்டாருங்க. அவளுக்கு அப்பா மேலயும், அவ அக்கா மேலயும் கொள்ளைப் பிரியம். அக்காவோட ரொம்ப ஒற்றுமை. காலைல அக்காவை எழுப்பறது, ஸ்கூல் ஆட்டோல ஏறும்போது அவளுக்கு லஞ்ச் பேக் தூக்கிட்டுப் போறது, டாட்டா காட்டறதுன்னு ரொம்பப் பாசமா செய்வா. படிப்புலயும் ரொம்ப சூட்டிகையானவ. சொல்லிக் கொடுக்கறதை டக்குன்னு பிக்கப் பண்ணிப்பா. அதை திருப்பிச் சொல்றப்போ, அவங்க அப்பா அப்படியே சொக்கிப் போவாரு... ஆனா இன்னைக்கி...." - மேற்கொண்டு பேசமுடியாதபடி துக்கம் தொண்டையை அடைக்க, அம்மா பாக்யலக்ஷ்மி தேம்பித் தேம்பி அழுகிறார்.

சற்றைக்கெல்லாம் தன் மனத்தைக் கட்டுப்படுத்தியவராய், தழுதழுத்த குரலில் மீண்டும் பேசத் துவங்குகிறார்.

"அப்பா மேல எவ்வளவு பாசமா இருப்பாளோ, அதேபோல அவரு கோபத்துல இருக்காருங்கறது தெரிஞ்சிடுச்சின்னா உடனே ஒரு புக்கை எடுத்து வச்சிக்கிட்டு படிக்க ஆரம்பிச்சுடுவா. உடனே அவங்க அப்பா 'வாம்மா! நான் சொல்லித் தர்றேன்'னு மடியில தூக்கி வைச்சி கொஞ்ச ஆரம்பிச்சிடுவாங்க. அவளுக்குப் பாட்டுன்னா ரொம்ப பிடிக்கும். டீவில பாட்டு வந்துச்சன்னா, வீட்டுல ஒரே ஆட்டந்தான்" சொல்லும்போதே சோகம் மறந்து மெலிதான பிரகாசம் பாக்ய லக்ஷ்மியிடம்.



எங்கோ சென்றுவிட்டு வீட்டினுள் நுழைந்த யாழிஸ்ரீயின் பெரியப்பா - பெரியம்மா, "குழந்தைக்கு போகோ சானல்னா ரொம்ப இஷ்டம். பக்தியா சாமி கும்பிடுவா. கடவுளுக்கே அவமேல ஆசை வந்துடுச்சு போல... அதான் கூப்டுக்கிட்டாரு..." என்றபோது பாக்யலக்ஷ்மியின் கண்களில் மறுபடி கண்ணீர்.

"குழந்தை விபத்தில் அடிபட்டவுடனே உடனடியாகக் கொண்டு போன எல்லா தனியார் மருத்துவமனையிலும், போலீஸ் கேஸ்ன்னு சொல்லி எங்களை ஒதுக்கிட்டாங்க. சரியான நேரத்துல யாராவது அனுமதிச்சிருந்தா ஒரு வேளை என் பொண்ணு பிழைச்சிருக்குமோ என்னவோ!" ஆதங்கப்பட்ட பாக்யலக்ஷ்மியிடம்... "கண்தானம்..." என்று நாம் கேட்டதுதான் தாமதம்...

"என் பொண்ணே போயிட்டா... அவ கண்ணு மூலமாவது ரெண்டு பேரு நல்லா இருக்கட்டுமே..." என்றார்.

"எங்க பொண்ணு இன்னும் சாகலைங்க. பார்வை கிடைச்ச ரெண்டு பேர் மூலமா அவ உயிரோடுதான் இருக்கா.." என்றார் பெரியப்பா.

தங்கையை இழந்த துக்கத்தில் அமைதியாக நின்றிருந்த அக்கா தீக்ஷிதாவை நெருங்கினோம். நம்மைப் பார்த்ததும் ஒடுங்கிக் கொண்டாள். "இப்படித்தான் யாழிஸ்ரீ போனதுலேர்ந்து ரொம்ப சைலண்ட் ஆயிட்டா.." பாக்யலக்ஷ்மியின் வார்த்தைகள் மகளை அசைக்கவே இல்லை.

"தங்கச்சின்னா உனக்கு ரொம்ப உயிரா?" என்றோம். நமக்கு பதில் சொல்லாமல் தங்கையின் போட்டோவை எடுத்து மடியில் வைத்துக் கொண்டாள் தீக்ஷிதா.

யாழிஸ்ரீயின் நினைவிலிருந்து அந்த குடும்பம் இன்னும் விடுபடவில்லை. மேற்கொண்டு அவர்களின் உணர்வுகளைக் காயப்படுத்த விரும்பாமல் மெல்ல அந்தக் கருணை இல்லத்திலிருந்து நாம் விடைபெற்றோம்.

- இரா. முத்துக்குமார்



# ஸ்ரீ சாரதா சக்தி பீடம்



72, காமராஜ் சாலை, பழைய பெருங்களத்தூர்,
(வழி) தாம்பரம், சென்னை – 63. போன் : 22760612.
City Office No.7,முதல் மாடி, வேலு தெரு, மேற்கு மாம்பலம்,
(அயோத்யா மண்டபம் அருகில்) சென்னை – 33.போன் 23714942.
எமது புதிய கிளை நிறுவனம் : எண். 7, 30வது தெரு, தில்லைகங்கா நகர்,
நங்கநல்லூர், சென்னை – 600 061. போன் : 22333214



# தீபாவளி நல்வாழ்த்துக்கள்



## ஏழை மாணவர்களுக்கு உதவுங்கள்

பேரன்புடையீர், வணக்கம்!

நம் சக்தி பீடத்தின் சார்பில் கடந்த 16 ஆண்டுகளாக நடைபெற்று வரும் "ஸ்ரீ ராமகிருஷ்ண சேவா குருகுலத்தில்" தாய், தந்தையற்ற, திக்கற்ற மற்றும் வறுமை கோட்டின் கீழ் வாழும் 200 மாணவ மாணவிகளும் தங்கி படித்து வருகின்றனர்.

நாள்தோறும் இறைவழிபாடு, கூட்டு பிரார்த்தனை, பகவத்கீதை பாராயணம் ஆகியவைகளுடன், நல்ல கல்வி, காலை மாலை உடற்பயிற்சி ஆகியவைகள் அளிப்பதுடன், உணவு, உடை, தங்குமிடம் ஆகியவைகளும் இலவசமாக வழங்கப்பட்டு நல்ல முறையில் வளர்ந்து வருகிறார்கள்.

மேலும் பகவான் ஸ்ரீ ராமகிருஷ்ணர், சுவாமி விவேகானந்தர் ஆகியோர்களின் உயர்ந்த லட்சியங்கள் போதிக்கப்படுவதுடன், சமுதாய சேவை பயிற்சியும் அளிக்கப்படுகிறது.

இக்குருகுலத்தின் பராமரிப்பு செலவு முழுவதும் நன்கொடையாளர்கள் அளிக்கும் உதவிகள் மூலம் மட்டுமே நடைபெற்று வருகிறது. ஆகவே தாங்கள் இப்புனிதப் பணிக்கு தங்களால் இயன்ற உதவியைச் செய்யும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

| | | |
|---|---|---|
| • காலை சிற்றுண்டி (200 பேருக்கு) | ரூ. | 1,000/- |
| • மதிய உணவு | ரூ. | 2,000/- |
| • இரவு சிற்றுண்டி | ரூ. | 1,000/- |
| • இனிப்பு மற்றும் பால் வழங்குதல் | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு ஓராண்டிற்கு கல்வி உதவித்தொகை | ரூ. | 1,000/- |
| • ஒரு மாணவனுக்கு பராமரிப்பு செலவு ஓராண்டிற்கு (உணவு, உடை, கல்வி) | ரூ. | 12,000/- |
| • குருகுலத்தின் ஒரு மாதத்திற்கான பராமரிப்பு செலவு | ரூ. | 2,00,000/- |

நன்கொடைகளுக்கு 80G பிரிவின்படி வருமானவரி விலக்கு உண்டு.

மேலும் தங்களின் பிறந்த நாள், திருமண நாள், குழந்தைகளின் பிறந்த நாள், தொழில்/வியாபாரம் தொடங்கிய நாள், மற்றும் இதர பண்டிகை நாட்களான தீபாவளி, பொங்கல், கிறிஸ்துமஸ், ரம்ஜான் போன்றவைகளில் மாணவர்களுக்கு சிறப்பு விருந்து ஒன்றை அளித்து அவர்களுடன் மகிழ்ச்சியைப் பகிர்ந்து கொள்ளலாம்.

தாங்கள் அளிக்கும் தொகை எவ்வளவு சிறியதாக இருந்தாலும் அன்புடன் ஏற்றுக்கொள்கிறோம். தங்கள் நன்கொடைகளை **ஸ்ரீ சாரதா சக்தி பீடம்** என்ற பெயருக்கு **Cheque / DD / MO** மூலம் அனுப்பி வைக்கும்படி பணிவன்புடன் கேட்டுக் கொள்கிறோம்.

இறைவன் தொண்டில்
சுவாமி ஸ்ரீ ஸர்வாத்மானந்தர்

சுவாமி ஸ்ரீ அம்பிகானந்தா — நல்லாசியுடன் — A.ராஜாபக்கிரிசாமி MSc., MEd.,

# இதயத்தைச் சுட்ட

பெருகிவரும் ஜனத்தொகை, நீரின்றிக் குறைந்துவரும் விவசாயம், மின் சார உற்பத்தியின்மை - இவற்றின் மூலம் எதிர்காலத்தைப் பிடிக்கப்போகும் பஞ்ச அரக்கனின் பிடிகளிலிருந்து, எகிப்து மக்களைக் காப்பாற்ற வேண்டும் என்றால் அதற்கு ஒரே வழி, நைல் நதியில், அஸ்வானை ஒட்டி ஒரு பெரிய அணையைக் கட்டுவதுதான் - என்று தீர்மானித்த ஜனாதிபதி நாஸர், இதற்காக அமெரிக்காவின் சிபாரிசுடன் உலக வங்கியை நாடினார். முதலில் ஒப்புக் கொண்டு பின்னர் உலக வங்கி மறுக்க, முன் வைத்த காலைப் பின் வைக்க விரும்பாத நாஸர், ரஷ்யர்களின் உதவியுடன் அணை கட்டும் வேலையை 1960ம் ஆண்டு துவக்கினார். உலகிலேயே பெரியதும், சுமார் ஆறாயிரம் கி.மீ. பரப்பளவு கொண்டதுமான நாஸர் ஏரியையும், அணையையும் உருவாக்குவதற்குள், எகிப்திய அரசாங்கம் ஏக சிரமத்திற்கு உள்ளானது. ரஷ்ய உதவி கிட்டியும்கூட செலவு கட்டுக்கடங்காமல் போக, எப்படிச் சமாளிப்பது என்று சிந்தித்த நாஸர், அதுகாறும் பெருமளவில் ஆங்கிலேயரின் கட்டுப்பாட்டில் இருந்த சூயஸ் கால்வாயும், அதன் மூலம் கிட்டும் வருமானமும் இனி எகிப்துக்கு மட்டுமே சொந்தம் என்று பிரகடனம் செய்ய, அந்தத் துணிச்சலான அறிவிப்பு பல நாட்டவரையும் திடுக்கிட வைத்தது. போர் மூளும் அளவுக்கு அந்தக் கால்வாய்க்கு அப்படி என்ன முக்கியத்துவம் என்பதைப் புரிந்துகொள்வதற்கு, கால்வாயின் சரித்திரத்தை ஒரு சில வரிகளில் தெரிந்து கொள்வது அவசியமாகிறது.



* நூபியர் கிராம வீட்டில்...



* கப்பலின் மேல்தளத்தில்...

இன்றைக்கு மத்திய தரைக்கடலையும், செங்கடலையும் இணைக்கும் குறுக்கு வழியாக விளங்கும் சூயஸ் கால்வாயை வெட்டுவதற்கான முதல் முயற்சி, கி.மு. 6-ம் நூற்றாண்

டிலேயே இரண்டாம் நெக்கோ (Necko II) என்ற மன்னரால் மேற்கொள்ளப்பட்டது என்று கிரேக்கப் பயணி ஹீரோடோடஸ் தமது பயண நாட்குறிப்பில் குறிப்பிட்டிருக்கிறார். அந்தக் காலகட்டத்தில் 'சுமார் ஒரு லட்சத்து இருபதாயிரம் கூலியாட்கள் அப்பணியில் ஈடுபட்டதையும், அவர்களில் பலர் வேலைப்பளு தாங்க முடியாமல் இறந்து போனதாகவும், பின்

# அனல்!

னர், தங்களைவிட எதிரிகளுக்குத்தான் இக்கால்வாய் அதிகம் பயன்படும் என்ற கருத்து முன் வைக்கப்பட்டதில், கால்வாய் தோண்டும் பணி கைவிடப்பட்டது' என்னும் ஹீரோடோடஸ் குறிப்பிடுகிறார். கி.மு. 5ம் நூற்றாண்டில் பாரசீக மன்னரான டாரியஸ் (Darius) செங்கடலையும், பிட்டர் ஏரி (Bitter Lake) யையும் இணைத்து சூயஸ் கால்வாயின் ஒரு பகுதியைத் தோற்றுவித்தார். தொடர்ந்து பல முயற்சிகள். 1859ல் அரசர் இஸ்மாயிலின் தலைமையில் மீண்டும் கால்வாய் வெட்டும் பணி மத்திய தரைக்கடல் எல்லையில் துவங்கப்பட்டு, இருபதாயிரம் எகிப்தியர்களின் அயராத உழைப்பில் ஒருவழியாய் சூயஸ் கால்வாய் முழுமை பெற்றது.

இதனடுவில், திட்டமிட்டதற்கும் மேலேயே பணம் செலவழிந்துவிட, ஆங்கிலேயர்களிடம் தன் பங்குகளை இஸ்மாயில் விற்கும் நிர்ப்பந்தம் உண்டானது. சூயஸ் கால்வாயின் உரிமை பெருமளவில் ஆங்கிலேயர்களின் கைக்கு வந்ததில், 1889ல் கால்வாய் திறக்கப்பட்டபோது, கப்பல் போக்குவரத்து மூலம் சம்பாதித்த பணம் அவர்களுக்கே சொந்தமானது! இந்த முடிவுக்குப் பெருவாரியான எகிப்தியர்கள் எதிர்ப்புத் தெரிவித்தனர். அவர்களுக்கு ஆதரவு தரும் விதமாய், அஸ்வான் அணை கட்ட நிதியுதவி செய்ய

## ஒரு தேசம் - 8

## சிவசங்கரி



• நாஸர்

> "எகிப்திலும் துருக்கியிலும் நாங்கள் அதிகம் செலவழித்தது தண்ணீருக்குத்தான்!"

மேலைநாடுகள் மறுத்தபோது, 'இனி சூயஸ் கால்வாயும், அதன் வருமானமும் எங்களுக்கு மட்டுமே சொந்தம்' என்கிற அறிவிப்பை நாஸர் அதிரடியாய் வெளியிட்டார். தொடர்ந்து, 'அரபு நாட்டு ஹிட்லர்' என்று அவரை வர்ணித்த இங்கிலாந்தும் ஃபிரான்ஸும், வரிந்து கட்டிக் கொண்டு போரில் இறங்கின. ஆனால் வெற்றிமாலை நாஸருக்கும், எகிப்துக்குமே கிட்டியது.

167 கி.மீ. நீளமே உள்ள ஒரு குட்டி கால்வாய்க்காகவா இத்தனை போராட்டம், சண்டை என்று யாரும் அவசரப்பட்டு எண்ணிவிட வேண்டாம்! மத்தியதரைக் கடலையும் செங்கடலையும் இணைக்கும் இந்தக் கால்வாய் மட்டும் இல்லையென்

றால், இங்கிலாந்து, சில ஐரோப்பிய நாடுகளிலிருந்து கிழக்காசிய நாடுகளை நோக்கிச் செல்லும் சரக்குக் கப்பல்கள், அட்லாண்டிக் கடல் வழியாக, முழு ஆப்ரிக்கக் கண்டத்தையும் சுற்றி வந்துதான் பயணம் செய்ய இயலும். அதாவது மூக்கை விரலால் நேரடியாகத் தொடுவதற்கும், தலையைச் சுற்றிக் கொண்டு தொடுவதற்கும் என்ன வித்தியாசம் உள்ளதோ, அதே நிலைதான் சூயஸ் கால்வாயை உபயோகிப்பது, அல்லது ஆப்ரிக்காவைச் சுற்றிவருவது என்பது! புரிந்ததா?

அஸ்வானுக்கு வந்த நாங்கள் நைல் நதியில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்த பல கப்பல்களில், நான்கு நட்சத்திர அந்தஸ்துடைய 'நைலின் ரோஜா' என்ற கப்பல் ஹோட்டலில் செக்-இன் செய்தோம். முப்பத்திரண்டு அறைகள், நீச்சல்குளம் என்றிருந்த கப்பலில், ஒரு அறைக்கு இருவர் வீதம் தங்கினோம். பத்தடிக்குப் பத்தடி அறையில் இரண்டு கட்டில்கள், ஒரு மேஜை போட்டு வைத்திருந்ததில், இப்படியப்படி நகரக்கூட இடமில்லை. அதுவும் 2-க்கு 2 1/2 அடி சதுரத்தில் இருந்த டாய்லெட்டுக்குள் சென்று கதவை மூடுவதற்கும், குளிப்பதற்கும் சில யோகாசனங்களே செய்ய வேண்டி வந்தது! பிரியா இந்தப் பக்கம் வந்தால், நான் எதிர்ப்பக்கம் என்று சதா செஸ் ஆட்டக் காய்கள் போல நகர்ந்ததில், அதில் வசித்த நான்கு நாட்களும் ரொம்பத் தமாஷானவை!

நைல் நதியில் நூற்றுக்கணக்கில் இது போன்ற கப்பல்கள் உலா வருவதோடு, ஆங்காங்கு புராதனச் சின்னங்களைக் காண்பதற்காக, அனைத்துமே குறிப்பிட்ட இடத்தில் நங்கூரம் பாய்ச்சி நிற்பதால், முட்டல் மோதலின்றிச் செயல்பட அவர்கள் ஒரு வழியைப் பின்பற்றுகிறார்கள்... கரையை ஒட்டி முதல் கப்பல் நின்றதும், அதைப் பக்கவாட்டில் தொட்டுக்கொண்டு இன்னொன்று நிற்கும். அதன் பக்கத்தில் இன்னொன்று... இப்படி அடுத்தடுத்து அவை நின்றதும், எல்லாக் கப்பல்களின் வரவேற்பறைக் கதவுகளும் திறக்கப்பட்டு, இடையே பலகைகளைப் பாலமாகப் போட்டுவிடுகிறார்கள். இந்த ஏற்பாட்டின் மூலம் எந்தக் கப்பல் பயணியும் மற்றக் கப்பல்களின் வரவேற்புக் கூடங்களைத் தாண்டி, கரையை அடைவது சாத்தியமாகிறது. அதுவும் ஒரு முறை நாங்கள் பதினாறு கப்பல்களைத் தாண்டிக் கொண்டு கரையில் கால் வைத்தது ரொம்ப வேடிக்கையாய் இருந்தது.

அஸ்வானுக்கு வந்த மதியம், "அசலான நூபியன் கிராமத்தை யார் பார்க்க விரும்புகிறீர்கள்?" என்று பாப் கேட்க, வழக்கம்போல நீலு, காதர், பிரியா, நான், பணத்தைக் கட்டிவிட்டுக் கிளம்பினோம். எங்கள் பயணத்தை ஏற்பாடு செய்திருந்த கம்பெனியில், ஸ்வீடன் நாட்டிலிருந்து வந்து வேலைக்குச் சேர்ந்திருந்த ஸன்னாவும் (Sannah) எங்களோடு

---

## வருத்தத்துடன்...



தங்களது குடும்பப் பத்திரிகையில் ஸ்டாலினின் பேட்டி சமீபத்தில் வந்திருந்தது. இந்தப் பேட்டிக்குச் சிறிய அளவில்கூட விளம்பரம் தராததும், அதேசமயம் ரஜினிகாந்தின் படம் அட்டையில் போடப்பட்டதும் இளைஞரணியினரை வருத்தத்தில் ஆழ்த்தியுள்ளதாம். எங்கே வைகோவிற்கு ஏற்பட்ட நிலை, தளபதிக்கும் வந்துவிடப் போகிறதோ என்ற பயம் தான், இவ்வாறு சிந்திக்கக் காரணமாக இருக்கலாம் என்ற பேச்சும் அடிபடுகிறது.

- கலை

# எதிர்பார்ப்புடன்...



தா. கி. விவகாரத்திற்குப் பிறகு மு.க. அழகிரி அடக்க ஒடுக்கமாக இருந்தாலும் அந்தத் தாக்கம் அவரது ஆதரவாளர்களுக்குள் நீறுபூத்த நெருப்பாகவே இருக்கிறதாம். எதிர்தரப்பு ஓய்வில் இருக்கும் இத் தருணத்தை பொன்னான வாய்ப்பாகப் பயன்படுத்தி, தங்களது அதிகாரத்தைப் புதுப்பித்து பழையபடி கோலோச்சலாம் என அஞ்சாநெஞ்சனிடம் நச்சரித்தார்களாம் அவரது ஆதரவாளர்கள். ஆனால் சேது சமுத்திரத் திட்டம் தொடர்பான 'வெயிட்டான' பதவி யாருக்கு வருகிறது என்பதைப் பார்த்துவிட்டு, அடுத்த கட்டத்திற்குச் செல்லலாம் என கூல் செய்து அனுப்பியிருக்கிறாராம் அஞ்சாநெஞ்சன்.

- வளவன்

---

சேர்ந்துகொள்ள, நாங்கள் கிளம்பினோம்.

மாலை நான்கு மணி ஆகிவிட்டது என்றபோதும், சின்னப் படகில் சுமார் ஒன்றரை மணி நேரம் சவாரி செய்து, நூபியன் கிராமத்தை அடைவதற்குள் ஸன்னாவைத் தவிர நாங்கள் நால்வருமே கருகிப் போன ரொட்டித் துண்டுகள் போல ஆகிவிட்டோம்! அன்றும் சரி, அதன் பின்னர் பாலைவனத்தில் சமாதிகளைக் காண பிசாசுகளாய் அலைந்த நாட்களிலும் சரி, சூரிய பகவானின் உச்சக் கோபத்துக்கு நாங்கள் உள்ளாகவே செய்தோம். 'குளிர் சதையைத் தாண்டிக் கொண்டு எலும்பைத் தொட்டது' என்று சொல்வதை இங்கு, 'உடலைக் கிழித்துக் கொண்டு இதயத்தைச் சுட்டது அனல்' என்று தாராளமாய் வர்ணிக்கலாம். அவ்வளவு கடுமை!

இதில் வயிற்றெரிச்சலை அதிகமாக்கியது என்னவென்றால், எங்கும் குடிக்கத் தண்ணீர் இலவசமாய் கிடைக்காததுதான். வெளிக்கடைகளில் இரண்டு, மூன்று பவுண்டு விற்கும் தண்ணீர் பாட்டில்களை வாங்க மறந்து விட்டால், அதே தண்ணீர் பாட்டிலுக்கு ஹோட்டலில் ஆறு, ஏழு பவுண்டுகள் அழவேண்டி வரும்! தாகத்தில் நாக்கு மேலண்ணத்தில் ஒட்டிக் கொண்டு கண்களில் பூச்சி பறந்த தருணங்களில், காசு கொடுத்து வாங்கிய நீரில் முகத்தைக் கழுவுவது வயிற்றெரிச்சலை அதிகமாக்கும்! எகிப்திலும் துருக்கியிலும் நாங்கள் அதிகமாய் தண்ணீருக்குத்தான் (கவனிக்கவும் - தண்ணி இல்லை, தண்ணீர்!) - செலவழித்திருப்போம்!

காசு கொடுத்து, வெயிலில் வேர்க் கடலைகளாய் வறுபட்டுப் போய்ப் பார்க்கும் அளவுக்கு, நூபியர் கிராமம் விசேஷமான மண்வாசனையுடன் இருக்கவில்லை. தட்டை, சதுர வடிவிலான மண் வீடுகளின் அமைப்பு, நுழைந்ததும் திறந்த வெளி, அப்புறம் சிறிய சமையல், படுக்கை அறைகள் கொண்டதாக உள்ளது. ஹஜ் பயணம் செய்து வந்தவர்களின் வீட்டுச் சுவர்களில், சமயக் குறியீடுகளை வரைந்து வைத்திருக்கிறார்கள். பள்ளிக்கூடம், இரண்டொரு வீடுகளில் 'டிஷ் ஆண்டெனா' என்று இருக்கும் கிராமங்கள், மற்ற இடங்களிலிருந்து வேறுபட்டு இருப்பதாக எனக்குத் தோன்றவில்லை.

ஹோட்டலுக்குத் திரும்பி வருகையில் 'காட்ராட்' என்ற இருநூறு வருஷத்துப் பழைமையான ஹோட்டலை இறங்கிப் பார்த்தோம். பிரபல க்ரைம் நாவலாசிரியை அகதா க்ரிஸ்டி, இந்த ஹோட்டலில் பல முறைகள் விரும்பித் தங்கியிருக்கிறாராம். நைல் நதியில் ஒரு மரணம் - Death on Nile - என்ற புகழ்பெற்ற நாவலை இங்கு தங்கியவாறுதான் எழுதினாராம். அவர் வழக்கமாய்த் தங்கும் அறையில் தற்சமயம் மராமத்து வேலை நடப்பதில், அந்தப் புகழ்பெற்ற அறைக்குள் செல்லமுடியாத சின்ன ஏமாற்றத்துடன் ஹோட்டலுக்குத் திரும்ப படகில் ஏறினோம்.

(தொடரும்)

கவிதை

# பாடம்

மாஞ்சா தடவிய நூலை
கையில் பற்றியபடியிருக்கிறார்கள்.
அம்மாவோ, அப்பாவோ,
அண்ணனோ, கணவனோ
அவரவர்களின் தேவைக்கேற்ப
காற்றின் வேகத்துக்கு
நூல் - கைவிரல்களைக்
காயப்படுத்திக் கொள்ளாதபடி
பறக்கும் உயரத்தை
தீர்மானிக்கிறார்கள்.
எவ்வளவு உயரத்திற்குச் சென்றால்
எல்லோரையும் சந்தோஷப்
படுத்தலாமென
பறக்கும் பட்டத்துக்கும்
தெரியும் என்பதை
என் பிள்ளைகளுக்காவது
நான் கற்றுத் தர வேண்டும்.

ரேசிகா



# பசுமை

பச்சை முடிகளின
அடர்மரங்கள் நிற்குமந்த கம்பீரமலை
கல்குவாரி முதலைகளால்
வெட்டியெடுக்கப் பட்டு
ஊனமாய்க் காட்சியளிக்கிறது
கொள்ளையர்களுக்குத்
தன் உறுப்புகளைக் களவு
கொடுத்துவிட்டு
பலவீனமாய் மெலிந்திருக்கும்
ஏழையைப் போல்.
பசுமை போர்த்தியிருந்தால்
இப்படித்தானோ?
எரிமலைகளை யாரும்
நெருங்குவதில்லை!

ஜெ.முனுசாமி



# கடந்தபின்...



சிறுவயது விருப்பங்கள்
வருங்காலத்தின்
சிறந்த வாழ்வினை நிர்ணயிப்பது
உண்மையோ இல்லையோ
காலங்கள் கடந்த பின்பே
புரிகிறது
சிறு வயதில் தஞ்சாவூருக்கு
சுற்றுலா செல்கையில்
இருந்த இடத்தில் அசையாது
தலையாட்டும் பொம்மையை
விரும்பியிருக்கக் கூடாதென்பது.

மதுமிதா

# அமரர் கல்கி

மதிப்புரை எழுதும் பொறுப்பான வேலை சிலருக்கே உரியது. ஆனால், புத்தகமோ, யார் வேண்டுமானாலும் எழுதலாம். ஏன்? நமது வாசகர்களில் 100க்கு 99 பேர் புத்தகாசிரியர்களாயிருக்கலாம் என்பது என் மதிப்பு. அவர்களில் பலர் இதுவரை புத்தகம் அச்சிட்டு வெளிப்படுத்தாமலிருக்கலாம்; ஆனால், குறைந்தது நான்கு ஐந்து நாவலாவது அவர்கள் கையெழுத்துப் பிரதியாக வைத்திருப்பார்களென்று நம்புகிறேன். இன்னும் சிலர் இதுவரை புத்தகமே எழுதாத புண்ணியவான்களாயுமிருக்கலாம். ஆனால் வருங்காலத்தில் கூடப் புத்தகம் எழுதும் உத்தேசம் எனக்கில்லையென்று நெஞ்சில் கை வைத்துச் சொல்லக்கூடியவர் உங்களுள் யாராவது உண்டா?

ஆகையினால்தான் மதிப்புரைக்கு புத்தகம் அனுப்புவதைப் பற்றிய என்னுடைய அனுபவங்கள் உங்களுக்கு அதிக ரஸமாயிருக்குமென்று சொல்லுகிறேன். என்னை மன்னித்து விடுங்கள். நான் புத்தகம் எழுதியது உண்மையே. இந்தக் குற்றம் போதாதென்று, அதை அச்சிட்டு வெளியிட்டேன். இதுவும் போதாதென்று அதைத் தமிழ் நாட்டில் என்னென்ன பத்திரிகைகள் உண்டோ, அவ்வளவுக்கும் மதிப்புரைக்கு அனுப்பினேன். கடவுளே! தண்டனை கிடைத்தது. தினந்தோறும் பத்திரிகைகளைப் பிரிப்பேன். அவலுடன் அடியிலிருந்து கடைசி வரை படிப்பேன். ஓர் எழுத்து விடுவதில்லை. தங்க பஸ்பங்களுக்கும் காம சாஸ்திரங்களுக்கும் இடையில் என் புத்தகத்தின் மதிப்புரை எங்கேயாவது ஒளிந்து கிடக்கிறதாவென்று துருவித் தேடினேன். தேடிக்கண்ட பயன் ஏமாற்றந்தான், ஆறு மாதம் கிணற்றில் கல்போட்டாற்போல் இருந்தது. பேச்சு மூச்சில்லை.

அப்புறம் திடீரென்று ஒருநாள் கிளம்பியது. மதிப்புரை, என்னுடைய பொறுமையைப் பூரணமாய்ச் சோதித்தாய் விட்டதென்று பத்திரிகாசிரியர்களும், உதவியாசிரியர்களும் திருப்தியடைந்த பின்னர் எழுதத் தொடங்கினார்கள் போலும். பீரங்கியிலிருந்த குண்டுகள் கிளம்புவது போல், மதிப்புரைகள் படார், படார் என்று வெடித்துக் கொண்டு புறப்பட்டன. மாதிரிக்கு அவற்றில் சிலவற்றைக் கீழே காண்க.

(1) "சாரதையின் தந்திரம் என்னும் புத்தகம் வரப் பெற்றோம். புத்தகம் பார்வைக்கு அழகாயிருக்கிறது. அட்டை நல்ல தொகுப்பு. இப்புத்தகத்தை இவ்வளவு நன்றாய் அச்சிட்டுக் கொடுத்த அச்சுக் கூடத்தை மிகவும் பாராட்டுகிறோம்."

(2) "சாரதையின் தந்திரம் என்னும் புத்தகம் நமது பார்வைக்கு வந்திருக்கிறது. இதன் ஆசிரியரைத் தமிழுலகம் நன்கறியுமாதலால் நாம் அதிகம் சொல்ல வேண்டியதில்லை. இப்புத்தகத்தைத் தமிழர்கள் ஆதரிப்பார்களென்று நம்புகிறோம்."

(3) "கதைகள் நன்றாயிருக்கின்றன. காகிதம் நேர்த்தியாயிருக்கிறது. அட்டை அழகாயிருக்கிறது. அச்சு சுத்தமாயிருக்கிறது. ஆசிரியர்... இருக்கிறார். விலை குறைவாயிருக்கிறது." (அடக்கம்... காரணமாக ஆசிரியரின் குணாதிசயத்தை நீக்கியிருக்கிறேன்.)

(4) "மிக மிக மிக நல்ல புத்தகம். ரொம்ப ரொம்ப ரொம்ப ரஸமான கதைகள்; எளிய நடையில் எழுதியிருக்கும் இவ்வினிய கதைகளின் சிறப்பைக் குறித்து அதிகம் சொல்வது மிகையாகும்."

# மதிப்புரை...

முதலில் எனக்கு ஒரு மாதிரியா யிருந்தது. என்னடா நாம்தான் உதவி யாசிரியரின் பதவியிலிருந்து புத்தகத்தின் அட்டையைப் பார்த்து மதிப்புரை எழு தினோமென்றால், எல்லாரும் இப்படித் தான் செய்கிறார்கள் போலிருக்கிறதே! ஒரு மனிதனாவது புத்தகத்தைப் பிரித்துப் பார்த்ததாகத் தெரியவில்லையே?

ஆனால், எல்லாத் தமிழ்ப் பத்திரிகை களுமே இப்படி மோசம் செய்துவிட வில்லை. தமிழ்ப் பத்திரிகை உலகின் மானத்தைக் காப்பாற்ற அத்தி பூத்தது போல ஒரே ஒரு பத்திரிகை முன் வந்தது. புத்தகத்தின் உள்ளழகு, வெளியழகு, கதை களின் அமைப்பு, நடை, போக்கு முதலிய வற்றை வெகு நன்றாக எடுத்துக்காட்டி விஸ்தாரமான ஒரு விமரிசனம் அப் பத்திரிகையில் வெளியாயிற்று. அது எந்தப் பத்திரிகையென்று அறிநது கொள்ள நீங்கள் ஆவல் கொண்டிருக் கிறீர்களல்லவா? ஆனால், அதைத் தெரிந்து கொண்டு உங்களுக்கு ஆக வேண்டிய காரியம் ஒன்றுமில்லை. அதை விட அந்த விமரிசனம் எம்முறையில் வெளியாயிற்று என்று அறிந்து கொண் டால் லாபமுண்டு. காதோடு சொல் கிறேன் கேளுங்கள். எனக்குப் பூரண திருப்தியளித்த அந்தவிரிவான விமரி சனத்தை எழுதி திருப்தியளித்த அந்த விரிவான விமரிசனத்தை எழுதியவன் யார் தெரியுமா? புத்தகாசிரியனாகிய அடியேன்தான்.

ஒரு பத்திரிகாசிரியரைத் தற்செயலாகச் சந்தித்தபோது, "என்ன ஸார்! என் புத் தகத்துக்கு மதிப்புரை வரவில்லையே" என்றேன். "அவகாசமேயில்லை, ஸார்! நீங்களே ஒன்று எழுதி அனுப்பிவிடு களேன்" என்று புன்னகையுடன் கூறி னார். முதலில் பிரகாசம் செய்கிறார் என்று நினைத்தேன். உண்மைதான் என்று தெரிந்ததும், அப்படியே என்னுடைய ஆற்றலையெல்லாம் காண்பித்துஒரு மதிப்புரை எழுதி அனுப்பினேன். ஓர் எழுத்துக்கூட மாறுதலன்றி அப்படியே வெளியாயிற்று.

ஆனால், பொதுவாக மதிப்புரைக்குப் புத்தகங்கள் அனுப்புவதைப் பற்றி என்



னுடைய அபிப்பிராயத்தைக் கேட்டால், கலியாணம் செய்து கொள்வதைப் பற்றி பிரமசாரிகள் யோசனை கேட்டால் என்ன சொல்வேனோ அதே பதில்தான் சொல்லுவேன். அது, "வேண் டாம் வேண்டாம் முக்காலும் வேண்டாம்!" என்பதே. புத்தகம் வெளியாக்கியதில் நான் அடைந்த லாபம் ஒன்றுண்டானால் அது தாழ்மைக் குணந்தான். உதவியாசிரியரின் பதவியிலிருந்து புத்தகங்களுக்கு மதிப்புரை எழுதியபோது என் தலை கழுத்தில் நிற்காது; அவ்வளவு கர்வம். புத்தகாசிரியர்களுக்கு ஏதோ சர்வமானியம் விடுவதாய் எண்ணிக் கொள்வேன். ஆனால், என் சொந்த புத்தகத்தை மதிப்புரைக்கு அனுப்பிபோது, இந்தப் பிரமை சிதறிப் போயிற்று. மொத்தம் ஐம்பது புத்தகங்கள் மதிபுரைக்கு அனுப்பினேன். 48 மதிப்புரைகள் வெளியா யின. இவற்றின் பயனாக மொத்தம் மூன்றரைப் புத்தகம் விலையாயிற்று. (ஒரு வாசக சாலைக்குப் பாதி விலைக் குக் கொடுத்த புத்தகத்தை அரைப் புத்தகம் என்று கணக் கிட்டேன்).

**ஏட்டிக்குப் போட்டி**
**தொகுப்பிலிருந்து**
**சாரதா பதிப்பகம்**

சிறுகதை

# கப்புணி மாமா

பொன்மலை ஆர்.பிரகாஷ்

**அமரர் கல்கி நினைவு சிறுகதைப் போட்டியில் பிரசுரத்துக்குத் தேர்வான கதை**

போன் வந்தபோது என்னால் நம்பவே முடியவில்லை. கப்புணி மாமாவுக்கு ரொம்பவும் முடியாமல் போய், ஹாஸ்பிடலில் அட்மிட் செய்திருக்கிறார்களாம்.

என்ன ஆகியிருக்கும்?

போன வாரம் நான் தஞ்சைக்குச் சென்றிருந்தபோதுகூட, தமக்கே உரித்தான அந்தத் துள்ளலுடனே, ஒரு இளைஞனைப் போல் சுறுசுறுப்பாக இருந்தாரே?

உடனே புறப்பட வேண்டும். அலுவலகத்துக்குப் போன் செய்து விடுப்பு சொல்லிவிட்டு, குறைந்த பட்ச மாற்றுடையுடன், எதற்கும் இருக்கட்டும் என்று ஐயாயிரம் ரூபாயையும் எடுத்துக் கொண்டு புறப்பட்டேன். பஸ்ஸில் ஜன்னலோர இருக்கை கிடைத்தது. அமர்ந்து கண்களை மூடிக் கொண்டேன்.

"என்னடா வாசலுக்கும் கொல்லைக்குமா நடந்துண்டிருக்கே.. என்ன விஷயம்?"

தங்கையின் சீமந்தத்தை, என் சித்தப்பாவின் விருப்பத்தின் பேரில், அவர்கள் கிராமத்தில் ஏற்பாடு செய்திருந்தேன். சம்பந்தி வீட்டார் உட்பட அனைவரும் வந்துவிட்டனர். இரவு சாப்பாடு தயாராக வேண்டும். ஆனால் சமையல்காரர்கள் இதுவரை வந்து சேரவில்லை. கப்புணி மாமாவிடம் எப்படிச் சொல்வது இதை? என்ன செய்வது இனி?

"என்னடா... நான் பாட்டுக்கு கேட்டுண்டு இருக்கேன். பதிலையே காணோம்?" மாமா திரும்பக் கேட்க, நான் தயங்கி,

"அது வந்து மாமா... சமையலுக்கு ஏற்பாடு செஞ்சிருந்தவா, இன்னும் வரலை. ஆறு மணி பஸ்ஸும் போயிடுத்து. இனிமே 'எட்டரைக்குதானாம். திரும்பத் திரும்ப சொல்லியிருந்தும் எப்படி தவற விட்டான்னு தெரியலே... இப்ப நாம என்ன பண்றது?"

"அதனால என்ன இப்போ? சமையலுக்குப் பாத்திரம், மளிகை எல்லாம் ரெடியா இருக்கோன்னோ? அப்புறம் என்ன...வா!" சொல்லிவிட்டு சட்டையைக் கழற்றி கூடத்து ஆணியில் மாட்டிவிட்டு, கொல்லைப்புறத்தில் கோட்டை அடுப்பு போட்டிருந்த இடத்திற்குச் சென்று அவரே மளமளவென்று சமையலில் இறங்கி விட்டார். ஏழரை மணிக்குள் எல்லாவற்றையும் முடித்துவிட்டு, "இலை போட்டுடலாமான்னு கேளு" என்றபோது, அப்படியே சாஷ்டாங்கமாய் மாமா காலில் விழுந்தேன். "அடடா... என்ன இது? அசடு... எழுந்திரு. ஆக வேண்டியதைப் பாரு!" தோளைப் பிடித்துத் தூக்கி விட்டார்.

ஒருமுறை குடும்ப நண்பர் ஒருவர் வீட்டுத் திருமணத்துக்காக திருநெல்வேலிக்குச் சென்றிருந்தோம். மாப்பிள்ளை அழைப்பு முடிந்து, சாப்பாட்டுக்குப் பின் சீட்டுக் கச்சேரி களை கட்டியிருந்த சமயம், திடீரென கீழே சத்தடி எழுந்தது. எல்லோரும் அவசரமாக படியிறங்கினோம்.

விசாரித்ததில், திருமணத்திற்கான மாங்கல்யம் உட்பட நகைகள் கொண்ட சூட்கேஸ் காணாமல் போய்விட்டது தெரிய வந்தது. பரபரப்பும் வேதனையும் சூழ்ந்த அந்தச் சமயத்திலும், "இப்ப கம்ப்ளை

யின்ட் அது, இதுன்னு போனா, போலீஸ் கும்பல் சத்திரத்தை அடச்சிண்டுடும். வாசல் கேட் பூட்டித்தான் இருக்கு. பொறுமையா தேடிப் பாருங்கோ... அப்படி கிடைக்காட்டா, போலீஸ் வந்தும் ஒண்ணும் செய்ய முடியப் போறதில்ல" என்ற சுப்புணி மாமா, அனைவருடனும் சேர்ந்து கொண்டு தீவிரமாகத் தேடினார்.

ஒரு மணி நேரத் தேடுதலுக்குப் பிறகும், பெட்டி கிடைக்காமல் போகவே, சட்டையை அணிந்து கொண்டு, "வாடா- வெளியில போயிட்டு வரலாம்!" என புறப்பட்டார். ஏதும் கேட்காமல் அவரைத் தொடர்ந்தேன்.



அறிமுகமே இல்லாத ஊரில், இரவு பதினொரு மணிக்கு, ஒரு ஜுவல்லரியை அடைந்து, வாட்ச்மேனிடம் கடை உரிமையாளரின் விலாசத்தை வாங்கிக் கொண்டு அவர் வீட்டை அடைந்து, விபரம் கூறி, கடையைத் திறக்கச் செய்து, மாடல் காட்டி, இரண்டு பவுனில் திருமாங்கல்யமும், குண்டும் வாங்கி கண்ணில் ஒற்றிக் கொண்டு, அவருக்கு நன்றி கூறி, சத்திரத்துக்குத் திரும்பி நண்பரிடம் ஒப்படைக்க, அவர் கையில் வாங்கிக்கொண்டு,

"சுப்புணி மாமா... கல்யாணப் பொண்ணோட தகப்பனான நானே, பகவானே... இப்படி ஆயிடுத்தேன்னு கவலைப்பட்டுப் புலம்பித் தவிச்சேனே ஒழிய, அடுத்தது என்ன செய்யறதுன்னு யோசிக்கலை... ஆனா நீங்க...? எனக்கு வார்த்தையே வர மாட்டேங்கறது மாமா!" குரல் கம்ம தழுதழுத்தார்.

மாமா இப்படித்தான். எந்த ஒரு பிரச்னைக்கும் அவரிடம் தீர்வு இல்லாமல் இருந்ததில்லை.

மாமாவுக்கு இரண்டு அக்காக்களும், ஒரு தங்கையும் உண்டு. அவர்களின் வீட்டு அத்தனை விசேஷங்களுக்கும் 'தாய் மாமன்' என்ற முறையில் தவறாமல் ஆஜராகி விடுவார்; அது சாதாரண காது குத்து வைபவமாக இருந்தால்

# சிறுகதை

கூட.

மாமாவோடு ஒட்டிப் பிறந்ததோ என நினைக்கும் வண்ணம், எப்போதும் ஒரு லெதர் பேக்கைப் பார்க்க முடியும். அதற்குள் போஸ்ட் கார்டுகள் மற்றும் கவர்கள் இருக்கும். திருமண நாள் மற்றும் குழந்தைகளின் பிறந்த நாட்களுக்கு தவறாமல் வாழ்த்து எழுதி அனுப்பி விடுவார்.

மாமாவைப் பற்றிய நினைவுகளில் மூழ்கியிருந்ததால், பேருந்து தஞ்சை வந்து சேர்ந்ததையே உணரவில்லை. அனைவரும் இறங்கிய பின் கடைசிப் பயணியாக வெளிப்பட்டேன்.

ஆட்டோ ஒன்றை அமர்த்திக் கொண்டு ''சீதாராம் ஹாஸ்பிடல் போப்பா'' என்றேன். நிறுத்தத்திலிருந்து வளைந்து திரும்பி, சுந்தர்ராஜ் நகரில் இருக்கும் மருத்துவமனையை நோக்கி, ஓடத் துவங்கியது.

பத்து நிமிடப் பயணத்திற்குப் பிறகு ஹாஸ்பிடலை அடைந்தேன். ஆட்டோ சார்ஜை கொடுத்துவிட்டு நிமிர்கையில் ரமேஷ் நிற்பது தெரிந்தது.

வேக நடையாய் அவனை நெருங்கி, ''என்னப்பா ரமேஷ்? அப்பாவுக்கு இப்போ எப்படி இருக்கு? டாக்டர் என்ன சொல்றார்?'' என்றேன்.

ரமேஷ் என் கைகளைப் பிடித்துக் கொண்டான். "ஒன்னும் உத்தரவாதமா சொல்லலை. நல்லாத்தான் இருந்தார். முந்தா நாள் பூசத்தன்னிக்குக்கூட முருகன் கோயிலே கதின்னு இருந்தார். சாயங்காலமா, சுவாமி புறப்பாடு முடிஞ்சுதான் ஆத்துக்குத் திரும்பி வந்தார். நேத்திக்குக் காலம்பற எழுந்திருக்கும்போதே, மூச்சு விட சிரமமாயிருக்குன்னு சொல்லிண்டே கஷ்டப்பட்டு மூச்சு விட்டு, கண்ணெல்லாம் உப்பிண்டுடுத்து. உடனே கொண்டு வந்து இங்கே அட்மிட் செஞ்சுட்டோம். லங்ஸில ஏதோ பயங்கர இன்ஃபெக்ஷனாம். ட்ரீட்மெண்ட் கொடுத்திருக்கு. இப்ப அப்பா கருவியாலதான் மூச்சு விட்டுண்டிருக்கார். ஏற்கெனவே இருபத்தி நாலு மணி நேரம் ஆயிடுத்து. முப்பத்தாறு மணி நேரத்துக்குள்ள உடம்பு மருந்துகளை ஏத்துக்கத் தொடங்கிட்டா ஒண்ணும் பயமில்ல. இல்லாட்டா..." ரமேஷ் முழுதும் முடிக்க முடியாமல் கேவினான்.

"எல்லாம் சரியாப் போயிடும். ஒண்ணும் கவலைப்படாதே! மாமா யாரையும் கஷ்டப்பட விடவே மாட்டார். அவருக்காக நாம இங்கு வருத்தப்பட்டுண்டிருக்கோம்னு தெரிஞ்சா போதும். எழுந்து உக்கார்ந்துடுவார்'' சமாதானமாய் அவனுடன் பேசிக்கொண்டே சென்று, ஐ.சி.யுவின் கண்ணாடிக் கதவின் வழியே மாமாவைப் பார்த்தேன்.

சலனமில்லாமல் படுத்திருந்தார்.

''நினைவு இருக்கோன்னோ?'' கேட்டேன்.

''ம். அப்பப்ப முழிச்சுக்கறதா நர்ஸ் சொல்றா. நேத்திக்குச் சாயங்காலம் நானும் பார்த்தேன். ஏகப்பட்ட ட்யூப் சொருகியிருக்கறதால பேச முயற்சி செய்யல. ஆனா முடியும்னு தோணறது.''

''ஆமா... ஆஸ்திரேலியாவில இருக்கற பிரசன்னாவுக்கு விஷயம் தெரியுமா? எப்ப வரேன்னான்?''

''அப்பாவை அட்மிட் பண்ணின உடனேயே தகவல் சொல்லிட்டேன்.

அண்ணா வந்துடுவான்."

பேசிக் கொண்டிருக்கையிலேயே மாமாவிடம் திடீர் அசைவு தெரிந்தது. உள்ளே ஸ்டூலில் அமர்ந்திருந்த நர்ஸ் பதட்டத்துடன் எழுந்து சென்று கவனித்தாள். பின்னர் இண்டர்காமை எடுத்து யாரையோ கூப்பிட்டாள்.

சற்று நேரத்தில், இரண்டு டாக்டர்கள் உள்ளே சென்று மாமாவைப் பரிசோதிப்பது தெரிந்தது. ஐந்து நீண்ட நிமிடங்கள் கரைந்தன. சட்டென அனைவரும் விலகினர்.

என்னால் நிலைமையை ஊகிக்க முடிந்தது. தளர்ந்த நடையுடன் டாக்டர்கள் நெருங்கினர்.

"ஸாரி டு ஸே... நாங்க..." டாக்டர்கள் முடிக்கும் முன்னரே நாங்கள் ஐ.சி.யுவுக்குள் ஓடினோம்.

"அப்பா... அப்பா..." ரமேஷ் அரற்றினான். குப்பென துக்கம் நெஞ்சை அடைக்க கண்கள் பொங்கின. ஆறுதலாய் ரமேஷைப் பிடித்துக் கொண்டேன்.

"அப்பா... அப்பா... இனி நான் என்ன செய்யப் போறேன்? யார் யாருக்கு எல்லாம் தகவல் கொடுக்கணும்னுகூட எனக்குத் தெரியாதே... எல்லாத்தையும் கடைசி வரைக்கும் நீயே பார்த்துண்டியே... இப்ப என்னைத் தனியாத் தவிக்க விட்டுட்டியே" புலம்பினான்.

"ரமேஷ்... முதல்ல நீ எழுந்திரு. ஹாஸ்பிடல் ஃபார்மாலிட்டீஸ் எல்லாம் முடியட்டும். ஆத்துக்குத் தகவல் சொல்லு...வா" - அவன் எழுந்தான்.

எப்படியும் பிரசன்னா வர நாளை மதியம் ஆகிவிடும். ஸோ, உடலை பாதுகாக்க வெறும் ஐஸ் பார் உதவாது.

நான் யோசனையில் நின்றிருக்க, ரமேஷ் வந்தான். "ஆத்துக்குத் தகவல் சொல்லிட்டேன். அப்பாவோட டைரியைப் பார்த்துதான் மத்தவாளோட அட்ரஸ், போன் நம்பர் எல்லாம் தெரியும்."

"சார், கீழ போயி பில்லை செட்டில் செஞ்சிட்டு, அப்படியே ஆம்புலன்ஸுக்கும் சொல்லிட்டு வந்திருங்க. அப்புறம்... பெரியவர் இந்த டைரியை தலையணைக்கு அடியில வச்சிருந்தாரு" என்றபடி நர்ஸ் அந்த பழுப்பு நிற டைரியை நீட்டினாள்.

அவசரமாய் வாங்கிப் புரட்டினேன். ஒரு இடத்தில் முனை மடக்கி வைக்கப் பட்டிருந்ததால் சட்டென அந்த இடம்



திறந்துகொண்டது.

'இறுதிவரை சுயமாய் நீர் கழிக்கும் சுகம்; உறக்கத்தில் உயிர் பிரியும் வரம்' என்பதுதான் எனது விருப்பமும். ஆனால்... இறைவனின் எண்ணம் என்னவோ...?

என்ற வாசகங்களோடு, தந்தி, டெலிபோன், கடிதம் என தலைப்பு போட்டு கீழே பெயர்கள் குறிப்பிடப்பட்டிருக்க, கடைசியாக கரீம் குட்டி வி.ஐ.பி. பாக்ஸ் (குளிர் பிரேதப் பெட்டி) சர்வீஸ் திருச்சி. போன்:.......

மம்மி கூலர் பாக்ஸ் சர்வீஸ், தஞ்சை, போன்:.....

என உடலைப் பாதுகாக்கும் பெட்டி குறித்தும் சுருக்கலாய் மாமா எழுதி முடித்திருந்ததைக் கண்டு பிரமித்தேன்.

'அதனால என்ன இப்போ' என மாமாவின் குரல் கேட்பதாய்த் தோன்றியது. நான் உடைந்து அழத் தொடங்கினேன். ○

# கற்பனை

விமான கம்பெனிகள் போட்டி போட்டு விமானக் கட்டணத்தைக் குறைத்து வருகின்றன. இப்படி ஆளாளுக்குக் குறைத்துக் கொண்டே போனால்...



– தெனாலி

# குறுந்தொகை



**வ**ண்ணநிலவன் துக்ளக் மற்றும் தமிழ் ஸிஃபி ஆகிய இதழ்களில் எழுத்தாளர்களைப் பற்றி எழுதிய கட்டுரைத் தொடர் தொகுக்கப்பட்டு 'மறக்க முடியாத மனிதர்கள்' என்ற தலைப்பில் சீக்கிரத்தில் நூலாக வெளிவரவுள்ளது. தனது மகளின் திருமணத்தை சமீபத்தில் முடித்த வண்ணநிலவனுக்கு இது இரண்டாவது சந்தோஷம்.



**நா**வலாசிரியரும், சிறுகதை எழுத்தாளருமான ஜனகன், ஏராளமான ஆன்மிக நூல்களை எழுதும் பணியில் கடந்த சில ஆண்டுகளாகத் தம்மை ஈடுபடுத்திக் கொண்டிருக்கிறார். அண்மையில் அவர் எழுதி முடித்திருக்கும் நூல் சின்மயானந்தரைப் பற்றியது. சின்மயானந்தரின் தோற்றமும் தொண்டும் குறித்துப் பேசும் அந்த நூலை, வானதி பதிப்பகம் வெளியிடப் போகிறது.

**'கா**ல்' என்ற காலாண்டிதழை நடத்தியவர் மலர்மன்னன். அண்மையில் தம் சிறுகதைகள் பலவற்றைத் தொகுத்து 'மலர்மன்னன் சிறுகதைகள்' என்ற தலைப்பில் அமுதசுரபி பதிப்பக வெளியீடாகக் கொண்டு வந்தார். அடுத்து பிர்ஸா பகவான் என்ற கதாபாத்திரத்தை மையமாக்கி எழுதப்பட்டதும், தீபம் இதழில் வெளியானதுமான 'மலையிலிருந்து வந்தவன்' என்ற நாவலை புத்தகமாக்கும் முயற்சியில் இறங்கியுள்ளார்.





**கு**ழந்தைக் கவிஞர் அமரர் தம்பி சீனிவாசன் வெளியிட வேண்டும் என்று தொகுத்து வைத்த குழந்தைக் கவிதை நூல்கள் 'புதுநாள் உதயம், நல்ல நேரம்' ஆகியவை. அவை நூலாகு முன்பே அவர் காலமாகி விட்டார். இந்த நூல்களை யாராவது வெளியிட மாட்டார்களா எனக் கணவரின் எழுத்து மேல் கொண்ட பற்றோடு காத்திருந்தார் அவரது மனைவி மயூரவல்லி. விரைவில் நேஷனல் புக் ட்ரஸ்ட், தம்பி சீனிவாசன் கவிதைகளைப் புத்தகமாக வெளியிடப் போகிறதாம்.

**இ**லக்கியவாதிகளின் அன்பரும் பதிப்பாளருமான கலைஞன் மாசிலாமணியின் பிறந்த தினம், விவேகானந்தர் பிறந்த ஜனவரி 12. தன் ஒவ்வொரு பிறந்த நாளன்றும் தவறாமல் ராமகிருஷ்ண மடம் சென்று வழிபடுவதை அவர் வழக்கமாகக் கொண்டிருக்கிறார்.

- கிருஷ்

# கண்ணகி வந்த ஊர்—3

பா.விஜய்

கண்ணீர் என்பது
பெண்களுக்கு அதுவரை
கேடயமாகவே இருந்தது!

கண்ணகிக்கு மட்டும்தான் அது
கத்தியாக மாறியது!

கற்பு என்பதும்
பெண்ணினத்துக்கு அதுவரை
மானமாக ஒளிர்ந்தது!
கண்ணகிக்கு மட்டும் அது
நெருப்பாக எரிந்தது!

சந்தனக் காடாய் இருந்த
சாம்ராஜ்ய மதுரையை
சாம்பல் மேடாய் மாற்றிய
தீ தேவி நின்றாள்!

சிறுவாச்சூர் என்ற
சிற்றூர் கோயிலின் முன்

செல்லியின் இருதயமோ
நாற்புறமும் விரிந்தது!

"அவதார நாயகியாய் ஒரு
அபலைப் பெண்
மாநகர் மதுரையம்பதியையே
மண்ணோடு எரித்தாளாம்"

காற்று மண்டலத்தையே
கதறடித்த கதாநாயகி இந்த
கோயில் மண்டபத்திலா?
செல்லி விழி மிரண்டாள்!
உத்தரத்தில் தொங்கிய உறி
ஊதக்காற்றில் ஆடுவது போல

ஆலய தீபங்கள்
ஆர்ப்பரித்தன அசைந்தாடின!

கோயிலுள் நுழைந்த கண்ணகியின்
கோபம் தணிந்திருந்தது!

கண்களும் - முகமும் ஒரு
சூரியச் சதுக்கமாய்
சுடச்சுட ஒளியடித்தது!

கண்ணகி வாய்திறந்தாள்!
"பெண்ணே! நீ யார்?
இத்திருக்கோயிலே உனது
வாசஸ்தலமா?"

செல்லி கண்ணகியின்
செந்தாமரை மலரடி பணிந்தாள்!
"நான் செல்லி! - ஒரு
அனாதைப் பெண் துறவி."

'கண்ணகியின் ஆழ்மனதில்
பழைய நினைவலைகள் வந்து
பந்தல் போட்டு நிழல் விரித்தன!

"இன்று ராப் பொழுது
இக்கோயிலில் நான் தங்கலாமா?"

'அடடா!
பெண்ணா நீ?
பெண் தெய்வமல்லவா நீ?
தெய்வம் கோயிலில் தங்க

யாரம்மா அனுமதி தருவது?''

செல்லி மனம் கசிந்தாள்!

குன்றில் மலர்ந்த
அன்றில் பூவாகிய செல்லியின் முகம்
குன்றிப் போனது!
'மாந்திரீகன் காளிங்கன்
மறக்காமல் வருவானே!'

சோபிதம் அழிந்துபோன
சோகச் சிலையானாள் செல்லி
செல்லியின் அக-முக
மாறுதல்களையும் கண்ணகியின்
மாவிலை விழிகள் கவனித்தன!

''தாயே!
தாங்கள் இரவு தங்க
ஊருக்குள் ஓர் நல்லிடம்
உண்டாக்கித் தரட்டுமா?''
செல்லி கேட்டாள் செயலற்று!...

கண்ணகி மெல்லக் கன்றிய கால் மடக்கி
பிராகாரத்தில் அமர்ந்தாள்
பிடறி சிங்க அம்மனாய்...!



''ஏனம்மா செல்லி?
இக்கோயில் நல்லிடமில்லையா?!
கோயிலை விடவா சிறந்த இடம்
ஊருக்குள் உள்ளது?''

கண்ணகியின் வினாவில்
செல்லி கனமானாள்! - மௌனச்
சினமானாள்! - பிறகு!...

''அம்மா! - நானே இங்கே
அவஸ்தையின் சொரூபம்!
உனக்கும் அதைத் தந்தால்
உலகுக்கே பெரும் பாவம்''

மாந்திரீகன் காளிங்கனின்
வருகைப் பதிவுகளும் - அவனது
வாலிபத் தேடல்களும் - அவனது
வன்முறை ஆட்டங்களையும்
ஒப்பினாள் செல்லி!

''ஆனது ஆகட்டும்
வருவது வரட்டுமடி! - இன்று
நானுனக்கு காவல் படை
கோயில் கதவை முதலில் அடை''

கண்ணகியும் - செல்லியும்
காட்டுக் கோயிலுக்குள்ளே
நடுநிசி! - மனதில்
உடல்பசி!
மாந்திரீகன் காளிங்கன்
மதமதப்பாய் வந்தான்!



கோயில் முன்பு நின்றான்
கோபுரம் அதிரச் சிரித்தான்!
"ஏ! பெண்ணே செல்வி!
இன்று நீ எனக்கு
கைப்பறித்த காட்டுமல்லி!

அண்டம் - பிண்டம் சண்டமென
அத்துணையும் ஆளுமெனக்கு
உன்னை அடையும் நேரம்
இதோ! இதோ! கனிந்திருக்கு!"

ஆசை புத்தியைத் துரத்த
ஆணவம் காமத்தை உயர்த்த
ஆலயத்தினுள் புகுந்தான்
ஆந்தையாய்!

உள்ளே செல்வியும்...
உன்மத்தமாய் கண்ணகியும்...
"ஆஹா! இது யாரடி?
புதியவள்! உன்னை விடப்
பெரியவள்!
முதலில் நீ! பிறகு அவள்?
வா!" என்ற காளிங்கன்
வேட்டை நாயாய்ப் பாய!

"நில்லடா நிர்மூலனே!"
என்றொரு குரல்!
அன்றடித்த இரவுக் காற்றும்
அப்படியே நின்றது!

இது புதிய குரலல்ல!
பாண்டியப் பெருஞ்சபையில் கேட்ட
பழைய குரல்!

"பாரடா! என்னை!"

அதே பழைய குருதிச் சிவப்பு
அதே பழைய ஆயுத தாகம்
கண்ணகியின் கண்களில்..

"உண்மையைப் பழிக்க வந்த பேயே!
தாய்மையை ஒழிக்க வந்த தீயே!
நீ விஷ விருட்சத்தின் விதை!
நீ முடிய வேண்டிய கதை!
உன் ஒவ்வொரு பார்வையிலும்
களங்கப்படும் பெண்ணினம்!

விண்வெளி வியக்க
மண்ணுயிர் பிரமிக்க
மதுரை எரித்த மாறாத சினத்துடன்
கண்ணகி பொங்கினாள்!
அம்மனின் முன்பு நின்ற
ஆறடி உயர சூலத்தை
வேரோடு பெயர்த்தாள்!

"ஒழிந்து போ நீசனே!...
ஒழிந்து போ!"
ஒரு போர்த்தளபதியின்
பராக்கிரம தோள்களின் பலத்துடன்
கண்ணகியின் கைச்சூலம்
காற்றிலே பறந்து வந்தது
காற்றைவிட வேகமாய்...

மாந்திரீகன் காளிங்கனின்
மார்பைப் பிளந்தது!
கண்ணகியின் கண்களுக்குள்ளே
கன அமைதி தெரிந்தது

சிறுவாச்சூரே
சிலிர்த்தது! சிலிர்த்தது!

(நிறைந்தது)

# வலைபாயுதே

## பழைய காதலியைத் தேட...

**த**பால் தலை மற்றும் நாணயம் சேகரிப்பதில் ஆர்வமுள்ளவர்கள் காண வேண்டிய தளம் coins.about.com. நாணயங்களின் மதிப்பை அறிவது எப்படி, தபால் தலைகளைத் தரம் பிரிப்பது எப்படி என பல விஷயங்களை அறிந்து கொள்ள முடிகிறது. அரிய மற்றும் புகழ் பெற்ற தபால் தலைகள், நாணயங்கள் போன்றவற்றைப் பட்டியலிட்டு, அவற்றை ஆன்லைனில் வாங்கவும் வசதி செய்திருக்கிறார்கள். உலக நாடுகளில் லேட்டஸ்ட்டாக வெளியான நாணயங்கள், தபால் தலைகளை அப்டேட் செய்து கொண்டே இருக்கிறார்கள். (ரொம்ப 'மதிப்புள்ள', மனசில 'ஒட்டிக்கிற' தளமுங்க இது)



**உ**ங்களின் பள்ளிப் பருவத்தில் அருகில் அமர்ந்திருந்த உங்கள் நண்பர் கடலை மிட்டாய் வாங்கியதில் ஒரு ரூபாய் கடன் வைத்திருக்கலாம். இப்பொழுது தொடர்பின்றி இருக்கலாம். அதே போல் உங்களின் 'ஆட்டோகிராஃபில்' பள்ளிப் பருவ கமலாவை நீங்கள் மீண்டும் கண்டுபிடிக்க விரும்பலாம். இதற்கெல்லாம் உதவுகிறது www.alumni.net. உலகம் முழுவதுமிருந்து கிட்டத்தட்ட 1,04,000 பள்ளிகளைச் சார்ந்தவர்களின் டேட்டா பேஸ் இருக்கிறது. (இப்படி தங்களின் பழைய நண்பர்களைப் புதுப்பித்துக் கொண்டவர்கள் ஏராளமாம்!)

**ம**ரியா கேரி அறிமுகப்படுத்தி வைத்த லோ-கட் ஜீன்ஸ்தான் இப்போது உலக இளைஞிகளின் விருப்பமான




உடை. கறுப்பு உடை எந்த டிரெண்டிற்கும் பொருந்தும். கறுப்பு உடையணிந்தால் நீங்கள் புதுப்பொலிவுடன் கூடுதல் கவர்ச்சியுடன் தோன்றுவீர்கள். இப்படி ஸ்பெஷல் குறிப்புகளை அள்ளித் தருகிறது seasonsindia.com. தற்போதைய பேஷன் டிரெண்ட் பற்றி அப்டேட் செய்து கொள்ள அருமையான தளம் இது. (ஏனுங்க, பச்சைகலர் கால் சட்டைக்கு பஞ்சுமிட்டாய் கலர்ல பெல்ட் போடலாமா?)

**ஜாலி S.M.S.**

ஆசிரியர்: ராகவ், உன்கிட்ட இருக்கிற 8 சாக்லேட்ல ரம்யாவுக்கு 3, ஸ்வேதாவுக்கு 2, ஜாஸ்மினுக்கு 3 கொடுத்திட்டேன்னா, உனக்கு என்ன கிடைக்கும்?

ராகவ்: புதுசா மூணு கேர்ள் ப்ரெண்ட்ஸ்!

**- ப்ரெளசர்**

# 7/G ரெயின்போ காலனி




குறைந்தபட்ச சமரசங்களோடு நல்ல சினிமா தரப் போராடும் இளைஞர்கள் தென்படும் கோடம்பாக்கத்தில், செல்வராகவன் போன்ற இளைஞர்கள், அதை பாலியல் விவரணைப் படங்களாக்கி, சுலப விற்பனையை மட்டும் குறி வைக்கிறார்கள். இதற்கு யதார்த்த பூச்சுக் கொண்ட சில விடலை வயதுப் பாத்திரங்களை சிருஷ்டித்துக் கொள்வதே, இவரைப் போன்ற இயக்குனர்களுக்குப் போதுமானதாக இருக்கிறது.

நெருக்கடி மிகுந்த நடுத்தர வர்க்கத்து அடுக்குமாடிக் குடியிருப்பொன்றில் நாயகன், நாயகி இருவரையும் நமக்கு அறிமுகப்படுத்துகிறார்கள். கரடுமுரடான மனம் கொண்ட நாயகன் கதிர், அங்கே குடியேறும் துடுக்கும், புத்திசாலித்தனமும் நிறைந்த தமிழ் பேசும் வடக்கத்தியப் பெண் அனிதா மீது இனக் கவர்ச்சிக்கு ஆளாகிறான். தனது சமுதாயப் பின்னணி, பெற்றோரின் மனப்பாங்கு அறிந்து, தொடக்கம் முதலே அவனைக் கடுமையாக புறக்கணிக்கிறாள். நாயகனுக்கோ புறக்கணிப்பின் வலி, ஒரு மில்லிமீட்டர் கூட இல்லை. வக்கிரமாகவே அதிகம் பேசும் நாயகன், தனது இனக் கவர்ச்சியை தூய காதலென்று சொல்லிக் கொண்டு, அதை அவளிடம் பிச்சையெடுக்கிறான். இதற்குப் பிறகும் இயக்குனர் என்ன கதையை மிச்சம் வைத்திருக்கிறார் என்று பொறுமை காத்தால், விவகாரமே அதன் பிறகுதான் ஆரம்பிக்கிறது.

"உன்னைக் கல்யாணம் செய்துக்க முடியுதோ இல்லையோ, என் மேல் இத்தனை காதல் வைத்திருக்கும் உனக்கு ஒரு முறை என்னைத் தந்து விடுகிறேன்" என்று வேறொருவனுக்கு நிச்சயிக்கப்பட்ட நிலையில், திருமணத்திற்கு முன்பே தன்னை இழக்கும் கதாநாயகி, "என்னை காதலுடன் தொடுகிறாயா இல்லை, வேறு எண்ணத்துடன் தொடுகிறாயா என்று பார்த்தேன். உனது காதல் இதயபூர்வமானது" என்பதாக சான்றிதழ் தருகிறாள்.

இந்தியப் பெண்மையை கற்பு எனும் மாயையிலிருந்து விடுவிக்கும் துணிச்சலான முயற்சி என்று இதை சிலர் விமர்சிக்கக் கூடும். ஆனால், ஆழமாக வேரோடியிருக்கும் நமது பண்பாட்டில் நம்பிக்கை கொண்டிருப்பவர்களுக்கோ இது பெண்மையைக் குறைத்து மதிப்பிடும் ஆபாச அரங்கேற்றம் என்பதில் எந்தச் சந்தேகமும் இல்லை.

தொழில்நுட்பம், இசை போன்ற அம்சங்களை முழுவீச்சுடன் பயன்படுத்திக் கொள்வதில் அதிக அக்கறை காட்டியிருக்கும் இயக்குனர், கற்புநிலை தவிர, ஏனைய மிடில் கிளாஸ் ஆசாபாசங்களை, பலவீனங்களை அதன் நிஜத் தன்மையோடு காட்ட முயற்சித்து வெற்றி பெறுகிறார். அதற்காகவே செல்வராகவனை அடிக்கடி மன்னிக்க முடியாது.

● ஜஸ்ட் பாஸ்

# விமர்சனம்

போர்க்களக் காட்சிகள், இராணுவ ஆபரேஷன் இவற்றை கதைக்களமாகக் கொண்டு வெளிவரும் பிரம்மாண்ட ஹாலிவுட் படங்களைப் பார்த்து இனி ஏங்க வேண்டியதில்லை. நம்மாலும் முடியுமென்று நம்ப வைத்திருக்கிறது போஸ்.

மத்திய அமைச்சரை தீவிரவாதிகள் கடத்திக் கொண்டு போய்விடுகிறார்கள். கேப்டன் ஸ்ரீகாந்த் தலைமையிலான இராணுவ கமாண்டோக்கள், ஹெலிகாப்டரில் பறந்துபோய், காட்டில் குதித்து, அதிரடி ஆபரேஷன் நடத்துவதை இராணுவத்தின் உதவியோடு அடிவயிறு கலங்குகிற மாதிரி படம் பிடித்திருக்கிறார் இயக்குனர். அந்த ஆபரேஷனில் கண்ணி வெடிக்கும், மெஷின் கன்னுக்கும் உயிரைக் கொடுத்து தரையில் சரியும் இரண்டு ராணுவ வீரர்களின் மரணத்தைப் பார்க்கிறபோது, இந்திய இராணுவத்தில் உள்ள இரண்டு லட்சம் வீரர்களுக்கும் சல்யூட் அடிக்க கை பரபரக்கிறது.

மீட்டு வந்த மந்திரிக்கு பாதுகாப்பு அதிகாரியாக நியமிக்கப்படுகிறார் ஸ்ரீகாந்த். மந்திரியோ, காலையில் கலந்துகொண்ட கல்லூரி விழாவில் பார்த்த மாணவியை தூக்கி வந்து பலாத்காரம் செய்ய முயல்கிறார். கொதித்தெழும் ஸ்ரீகாந்த், மத்திய அமைச்சர் என்று பின் வாங்கிவிடாமல், அவரை சுட்டு காயப்படுத்தி, மாணவியைக் காப்பாற்றுகிறார். அதற்குப் பரிசாக அவரை இராணுவத்திலிருந்து வெளியேற்றுகிறார்கள். வேதனையோடு சென்னை திரும்புகிறவரை பழிவாங்க டெல்லியிலிருந்து துரத்திக் கொண்டு வருகிறார் அமைச்சர். இதனிடையே தன்னைக் காப்பாற்றிய ஸ்ரீகாந்தைத் தேடி காதலோடு சினேகாவும் வர....

வழக்கம்போல் காதலையும், ஆக்ஷனையும் மாற்றி மாற்றிக் காட்டி படுத்தப்போகிறார்கள் என்று பயந்தால், பழைய காட்சிகளில் புதிய அணுகுமுறையுடன் பட்டையைக் கிளப்பி விடுகிறார் இயக்குனர்.

தன்னைத் தெரியாது என்று விலகி ஓடும் ஸ்ரீகாந்திடம் "என்னைக் காப்பாற்றிய அக்டோபர் பதினோராம் தேதி நினைவிருக்கிறதா? என்று சினேகா கேட்க, "அந்த நாளை நீ மறந்துவிட வேண்டும். தேவையில்லாமல் ஞாபகம் வைத்துக் கொண்டிருக்கிறாய்" என்கிறார் ஸ்ரீகாந்த். சினேகாவோ "தேவையில்லாததை மறந்துவிட்டு, தேவையான உங்களை ஞாபகம் வைத்திருக்கிறேன்" என்கிறார். இப்படி நெகிழ்ச்சியின் ஆட்சி நிறைந்த காட்சிகள் நிறைய.




காதல் காட்சிகளில்கூட விறைப்புடன் தென்படும் ஸ்ரீகாந்த், கொஞ்சம் கிளாமர் பக்கம் எட்டிப் பார்க்கும் சினேகா இருவரும் டபுள் நிறைவு. இயக்குனருக்கு இணையாக கவனத்தை ஈர்க்கும் இன்னொருவர் வசனகர்த்தா நிச்சன்ராஜ். போஸ் - மாஸ் ரசிகர்களை மயக்கும் ஆக்ஷன் ஜூஸ்.

• அபவ் ஆவரேஜ்

- விஷுவல்தாசன்

# புத்தகம் தொலைந்து விட்டது!



• டி.ஆர். பாப்பா

இசைவானில் உள்ள பிரகாசமிகு நட்சத்திரங்களுள் ஒருவராக விளங்கியவர் இசைப் பேரறிஞர் டி.ஆர். பாப்பா. அண்மையில் அவர் இயற்கையெய்திய செய்தி, பலரது மனதைத் தாக்கியிருந்தாலும் ஒரு சிலரது மனதில் ஆறாத இழப்பை ஏற்படுத்திவிட்டது.

மெல்லிசை மன்னர் எம்.எஸ்.வி.யிடம் பேசியபோது,

"1941லிருந்து எனக்கும் பாப்பா அண்ணனுக்கும் நெருங்கிய பழக்கம் உண்டு. அச்சமயம் நான் ஜூபிடர் பிக்சர்ஸில் சாதாரண ஆஃபீஸ் பையனாக இருந்தேன். என்னை அடையாளம் காட்டி, இன்றைக்கு இந்த நிலையில் இருப்பதற்கு பிள்ளையார் சுழி போட்டவரே அவர்தான். என்றைக்குமே அவர்தான் எனது குரு. பழகுவதற்கு இனியவரான அவர், ஒரு சிறந்த மனித நேயவாதி. அவர் உடல்நலம் குன்றி இருக்கும்போது அவரது வீட்டில் சென்று பார்த்தபோது எனது எண்ணமெல்லாம் 1941ஐயே வட்டமிட்டுக் கொண்டிருந்தது" என்றவர், கண்ணில் பெருகிய நீரை துடைத்துவிட்டுக் கொண்டார்.



• எம்.எஸ்.வி.

• டி.எம்.எஸ்.

டி.எம்.எஸ்ஸிடம் "டி.ஆர். பாப்பா" என்று சொன்னது தான் தாமதம்... "முத்தைத் தரு பத்தித்திருநகை" என்று இரண்டு வரிகளையும் கண் மூடியபடி லயித்துப் பாடிவிட்டு "என் இசைப்பயணத்தில் மைல்கல்லான இந்தப் பாடலுக்கு இசையமைத்தவர் அவர். அவர் பெரிய இசை விற்பன்னர் என்பதையெல்லாம் கடந்து, தனிப்பட்ட முறையில் சிறந்த, திறந்த மனதுடையவர். ஒவ்வொரு செயலிலும் நிதானம் காட்டுபவர். தன்னிடம் வாய்ப்பு கேட்டு வருபவர்களிடம் பக்குவமாகப் பேசி, தனது நிலையை எடுத்துரைப்பதில் வளரும் இசையமைப்பாளர்களுக்கெல்லாம் டி.ஆர்.பாப்பா ஒரு புத்தகம் போன்றவர். அந்த அரிய புத்தகம் இன்று தொலைந்து விட்டது. எந்தவொரு நிகழ்ச்சியிலும் சரி, யார் வந்தாலும் டி.ஆர். பாப்பா வந்திருக்கிறார் என்றால் அனைவருமே அவரிடம் ஆசி வாங்கிக் கொள்வார்கள். அதற்கு உதாரணம் எம்.எஸ்.வி. இதெல்லாம் அவருடைய வயதுக்காக அல்ல - அவரது திறமைக்காக -பக்குவத்திற்காக. அவருடைய மறைவு, தரமான இசையை ரசிப்பவர்களுக்கு ஒரு மாபெரும் இழப்பு" என்று சொல்லும்போதே டி.எம்.எஸ்.ஸின் குரல் உடைந்து போய் நா தழுதழுத்தது.

'ஆத்ம சாந்தி' திரைப்படம் மூலம் இசைவானில் பறக்கத் துவங்கிய டி.ஆர்.பாப்பாவின் ஆத்மா நிச்சயம் சாந்தியடைந்துவிடும்!

- இரா. முத்துக்குமார்

## கண்டதும் கேட்டதும்... சாவித்திரி கண்ணன்




உணர்வுபூர்வமாகத் தேடும் விஷயங்களை, அறிவுபூர்வமாக மற்றவர்க்குக் கூறுவது கடினம். சொல்கிற விதம் மட்டுமின்றி நோக்கில் ஒரு நேர்மையும் வேண்டும். அதற்கு. காவிரி, மனிதநேயம், ஒருமைப்பாடு, சினிமா, மருத்துவம் என்று மக்கள் மனங்களோடு தொடர்புடைய, பாதிக்கிற விஷயங்களின் மாறுபட்ட கோணங்களைப் பற்றி தொடர் கட்டுரைகளாக வெளிவந்தவற்றின் தொகுப்பு. நம்மையே நமக்கு புதுக்கோணத்தில் காட்டும் முயற்சி.

நவ இந்தியா பதிப்பகம், 5, 2வது பிரதான சாலை, வெங்கீஸ்வரர் நகர், சென்னை - 26, விலை ரூ.65/-

## சேவாக் மிஸ்டர் தன்னம்பிக்கை விஜய் லோகபள்ளி தமிழில்: பத்ரி சேஷாத்ரி




ஒருநாள் போட்டிக்கே லாயக்கான, ஏழாவது பேட்ஸ்மேன் என்று தீர்மானிக்கப்பட்டவர், முதல் பேட்ஸ்மேனாக வருவது என்பது ஒன்றும் இலேசான விஷயமல்ல. கடின உழைப்பு, தளராத போராட்ட குணம், கூடவே ஆடும் திறமை எல்லாம் இருந்தால்தான் இது சாத்தியம். அதை சாத்தியமாக்கிக் காட்டியிருப்பவர் சேவாக். அவரது அதிரடி ஆட்டத்தையும், மற்றவர்க்கு வழி காட்டக்கூடிய வளர்ச்சியையும் கூறும் வழிகாட்டி நூல்.

கிழக்கு பதிப்பகம், 16, கற்பகாம்பாள் நகர், மயிலாப்பூர், சென்னை - 4, விலை ரூ.50/-

## கம்ப்யூட்டர் கால் சென்டர்கள் விவரங்களும் வேலைவாய்ப்புகளும் ராஜமலர்




இந்திய இளைஞர்களுக்கு சுதந்திரம் கொடுத்த மிகப் பெரிய சாபம் வேலையில்லாத் திண்டாட்டம். சமீப காலத்தில் பட்டம் பெற்று வெளியே வந்து உலகத்தைப் பார்த்து மிரளுபவர்களுக்கு, மிகப்பெரிய ஆறுதல் தந்திருப்பது இங்கே நடக்கும் வெளிநாட்டு வர்த்தகமும், அதற்கான உள்ளூர் BPOக்களும்தான். BPOக்களைப் பற்றியும், அங்குக் கிடைக்கக்கூடிய வேலை வாய்ப்புகள் பற்றியும் இளைஞர்களுக்கு விளக்கி உதவும் புத்தகம்.

மணிமேகலை பிரசுரம், 7, தணிகாசலம் சாலை, தி.நகர், சென்னை - 17, விலை ரூ.60/-

- விஷ்வக்

சரித்திரம்

# மகுட வைரம்

## விஷ்வக்ஸேனன்

### 14. இளைய வீரன்

மேற்கு மலைத் தொடரின் முகட்டின்மீது வெகு சிரமத்துடன் ஏறிய நிலவு, வானத்தை எட்டிப் பிடித்துவிட்டதால் சற்று ஆசுவாசப்படுத்திக் கொண்டு, அந்த மலைப்பகுதியை ஆராயத் தொடங்கியது.

வெள்ளலூர்க் கோட்டையை அடைய சில காதங்களே இருந்தன. வழக்கமில்லாத அந்த நேரத்தில் சில பொதி வண்டிகள் மலைப்பாதையில் பயணித்துக் கொண்டிருந்தன. பயணத்தின் தொடக்கத்தில் பாதையின் குறுக்கே மரங்கள் வெட்டப்பட்டுக் கிடந்ததால், ஏற்பட்ட தடங்கல்களைக் கடந்து சற்றுத் தாமதமாகவே வந்தாலும், வெள்ளலூர்க் கோட்டை நெருங்கிவிட்டதால் பொதிவண்டிகளில் வந்த வணிகர்கள் உல்லாசமாகச் சிரித்துப் பேசியபடியே வந்தனர்.

சரிவொன்றில் இறங்கிய பொதிவண்டிகள், காளைகளின் கயிறுகள் பலமாக இழுக்கப்பட்டதால், கழுத்து மணிகள் ஒலிக்க, சரேல் சரேலென நின்றன. முதலில் நின்ற வண்டியின் முன்பாக, குறுக்கே பெரும் மரமொன்று வெட்டப்பட்டு கிடத்தப்பட்டிருந்தது. பந்தங்களை ஏந்தி பொதிகளின் பக்கங்களில் ஓடி வந்த அடிமைகளும், வண்டிகளிலிருந்து இறங்கிய வணிகர்களும் முன் பகுதியில் குவியத் தொடங்கினர்.

மரத்தை வெட்டி அப்புறப்படுத்த உத்தரவிட்ட வணிகர்கள், திடீரென பொதி வண்டிகளின் வரிசை யின் பின்பகுதியிலிருந்து எழுந்த கூச்சலால் திகைத்தனர். அவர்களின் திகைப்பையும் அச்சத்தையும் உயர்த்த, கானகத்தின் மறைவுகளிலிருந்து வாட்களை ஓங்கியபடி பலர் ஓடிவந்து, தாக்கவும், வண்டிகளில் இருந்தவற்றைக் கொள்ளையடிக்கவும் தொடங்கினர். அரைநாழிகையில் அந்த இடத்தின் சூழ்நிலை மாறியது. அடிமைகளும் வணிகர் சிலரும் கொல்லப்பட்டனர். இரு பொதி வண்டிகள் தீப்பிடித்து எரியத் தொடங்கின. வரிசையின் நடுவிலிருந்த இரு வண்டிகளில் பணிப் பெண்களாக வந்த யவன மங்கையரின் வீல் வீலென்ற அலறல்களும், கொள்ளையரின் வெறிக் கூச்சல்களும் ஒலித்தன.

கொள்ளைப் பொருள்களுடனும், இழுத்துச் செல்லப்பட்ட மங்கையருடனும், சற்று நேரத்தில் கொள்ளையர் கானகத்து இருளில் நின்ற புரவிகளில் ஏறி, மரங்களினூடே மறைந்தனர்.

இரு ஜாம நேரத்திற்குப் பின், தளர்ந்த நடையுடன், மடிந்த அடிமைகளையும், வணிகர்களையும் சுமந்த வண்டிகளுடன், வணிகர்கள் வெள்ளலூர்க் கோட்டையை நோக்கி நகர்ந்தனர். எரிந்து அடங்கிய வண்டிகள் புகைந்தபடி பாதையோரத்தில் நின்றன.

உதய நேரத்துக் கதிரவன் மலைகளுக்குப் பின்னாலிருந்து வானத்தை செப்புத் தகடடித்து செப்பனிட்டுக் கொண்டிருக்க, வெள்ளலூர் அரண்மனையின் மேன்மாடத்து உப்பரிகையில், கிழக்கு நோக்கி கூப்பிய கரங்களுடன் நின்று கொண்டிருந்தான், இந்தள தேவன். அகன்ற நெற்றியில் நீறு பளிச்சிட, நிமிர்ந்து நின்ற தேகம் அளவற்ற பயிற்சியைக் காட்டியது. இடையிலிருந்து நீண்ட வாள், பாதத்தைத் தாண்டி சற்று வளைந்து கிடந்தது.

அதே கோலத்தில் அருகில் நின்ற அவன் மகனுக்கு, பிராயம் பதினான்கிற்கு மேல் இராது என்பதை, பிள்ளைத்தனம் மாறாத முகம் தெரிவித்தது. தந்தையுடன் அவனும் இடைவிடாத பயிற்சிகளில் ஈடுபட்டிருக்கிறான் என்பதை, வலுவேறத் தொடங்கியிருந்த கரங்களும், தோள்களும் அறிவித்தன.

பரம்பரையாக பாண்டிய மன்னர் சேவையில் வந்ததாலும், வரகுணரின் தந்தை காலத்திலேயே புரவிப்படைத் தலைமை ஏற்றதாலும், மன்னர் மீதிருந்த அன்பின் காரணமாக, மன்னனின் தந்தையின் பெயரையே தன் மகனுக்குச் சூட்டியிருந்தான் இந்தள தேவன். கதிரவனை வணங்கித் திரும்பி 'ராஜசிம்மா' என்று மகனை அழைத்தவன் குரலில் அன்பு பூரணமாகத் தொனித்தது.

"என்ன தந்தையே?" என்று நிமிர்ந்த இளையவீரனின் விழிகளில் இந்தள தேவனைவிட அதிகக் கூர்மையும், நிதானமும் தெரிந்தன.

"பயிற்சியைப் பிறகு வைத்துக் கொள்ளலாம் மகனே. நகரத்து வணிகர் அவசரமாகக் காண வேண்டி காத்திருக்கிறார்களாம். வா, போகலாம்'' என்ற இந்தள தேவன், மகனுடன் உணவை முடித்துக் கொண்டு அரண்மனைக் கூடத்தை அடைந்தான்.

கூடத்தின் முகப்பிலேயே பிரதானி கரங்களில் ஓலைக் குழலொன்றுடன் காத்திருந்தார். குழலிலிருந்த முத்திரையைக் கண்டதும், இந்தள தேவன் முகத்தில் மகிழ்ச்சி பரவியது.

''மன்னரிடமிருந்து வந்திருக்கிறது மகனே'' என்றபடி குழலைப் பிரித்தவன் மகனைப் பார்த்து, "மன்னர் வருவதாகத் தெரிவித்திருக்கிறார் மகனே. அதுவும் இன்றே.. ஆனால் நம்மை ஏதோ அபாயம் சூழ்ந்திருப்பதாகவும், எச்சரிக்கையுடனிருக்கும்படியும் கூறியிருக்கிறார். என்ன அபாயமென்று விளங்கவில்லையே" என்றவன் "வா, முதலில் வணிகர்களின் குறை என்னவென்று விசாரிப்போம்'' என்று கூடத்தினுள் நுழைந்தான்.



நகரத்து வணிகர் அனைவருமே அங்கு கூடியிருக்க, இந்தள தேவன் உள்ளே நுழைந்ததும் சட்டென்று அமைதி நிலவியது. இருக்கையில் அமர்ந்து அருகில் மகனையும் அமரப் பணித்தவன் "வணிகர்களே, என்ன நேர்ந்தது? உங்கள் முகங்களில் கவலையும், வருத்தமும் மித மிஞ்சித் தெரிகிறதே" என்றான்.

முன்னால் நின்ற வணிகர் வெடித்தார். ''கொள்ளை நடந்திருக்கிறது கோட்டைத் தலைவரே. கொள்ளை. நேற்றிரவு இரண்டாவது ஜாமத்

தில் மலைப்பாதையில் வந்த நம் வணிகர்கள் கொள்ளையடிக்கப் பட்டிருக்கிறார்கள்"

"என்ன கூறுகிறீர்? வெள்ளலூரில் கொள்ளையா?" இந்தள தேவனின் முகம் சிவந்து ஜொலித்தது.

வணிகர்கள் நடந்தவற்றைக் கூறக் கூற, இந்தள தேவனின் சினம் உச்சிக்குச் சென்றுவிட்டதால், அவனிடமிருந்து வார்த்தைகள் ஏதுமின்றி, பற்கள் நறநறவென அரை படும் ஒலி மட்டும் கேட்டது.

ராஜசிம்மனின் குரல் கணீரென்று ஒலித்தது. ''வணிகரே, இது இரவின் இரண்டாவது ஜாமத்திலா நடந்தது?"

"ஆம்"

''கொள்ளையர் எத்தனைபேர் இருக்கலாம்?''

"முப்பது பேர் இருக்கலாம். நீண்ட வாட்களுடன் வந்தார்கள். புரவிகளில் ஏறிச் சென்றுவிட்டார்கள். அவர்கள் மொழியும் வேறு விதமாயிருந்தது."

ராஜசிம்மனின் குரல் சிந்தனையுடன் ஒலித்தது. ''தந்தையே, கொள்ளைக்கு வருபவர்களுக்கு நீண்டவாள் ஒரு சுமை.

''என்னய்யா திரைக்கதை இது? ஜீவனே இல்லியே?"

''நீங்கதானே நல்ல ஹாலிவுட் திரைக்கதையா பார்த்து சுட்டுக்கொண்டு வரச் சொன்னீங்க!"

- அம்பை தேவா



அச்சுறுத்த குறுவாட்களே போதும். அவர்கள் மொழியும் வேறுபட்டு இருந்ததென்றால்... உறையூரில் நம் படைத் தலைவரைத் தாக்கிவிட்டுத் தப்பியதாகச் செய்தி வந்ததே. அவர்களாயிருக்கக் கூடும். இதுவும் ஏதோ சதியென்றே எண்ணுகிறேன் தந்தையே"

இந்தள தேவன் வெடித்தான்.

''சதி என்ன இருக்கிறது இதில்? வாட்களையும் அவர்கள் எங்கேனும் களவாடியிருக்கலாம். இப்போதே சென்று அவர்களைக் கண்டுபிடித்து அழித்துவிடுகிறேன். அந்தக் கானகத்தில் எளிதில் வெகுதூரம் அவர்கள் போகமுடியாது. மன்னர் வருவதாகக் கூறியிருக்கும் இச்சமயத்தில், என் காவலுக்கு அவப்பெயர் ஏற்படுவதை சகிக்க மாட்டேன்'' என்றவன், தன் உபதலைவனை அழைத்து, அப்பொழுதே ஐம்பது வீரர் கொண்ட சிறு படையை தயாராக நிற்க உத்தரவிட்டான்.

''தந்தையே, நானும் உடன் வரலாமல்லவா?'' ராஜசிம்மனின் கேள்வி ஆவலுடன் வந்தது.

"தாராளமாக வா மகனே" என்ற இந்தள தேவன், அடுத்த ஒரு நாழிகையில் வெகு உக்கிரத்துடன் புறப்பட்டான்.

மலைப்பாதையில் கொள்ளை நடந்த இடத்தை இந்தள தேவன் அடைந்த போது, எரிந்த வண்டிகளுக்கிடையே திரும்பக் கொண்டு வந்து கொள்ளையரால் விடப்பட்டிருந்த யவன மங்கையர் கிழிந்த ஆடைகளுடன், கண்களில் நீர் வழிய நின்று கொண்டிருந்தனர். இந்தள தேவனையும், புரவி வீரர்களையும் கண்டு அஞ்சியவர்களை சமாதானம் செய்து, தான் கோட்டைத் தலைவன் என்பதைப் புரியவைக்கவே சற்றுத் தாமதமானது இந்தள தேவனுக்கு.

கொள்ளையர்கள் சென்ற திசையைக் காட்டிய அந்த மங்கையருக்குக் காவலாக வீரர் பதின்மரை நிறுத்திய இந்தளதேவன், வீரர்களுடன் அந்த



ஒற்றையடிப் பாதையில் பாய்ந்தான்.

பாறைகளையும், அடுத்து விரிந்த சிறு சமவெளியையும் அடைந்தவன் "எங்கே தொலைந்தார்கள் அந்தக் கொள்ளையர்கள்?'' என்று இரைந்தபடியே புரவியிலிருந்து இறங்கி, பாறைகளின் உச்சியில் ஏறி, கானகத்தை ஆராய்ந்தான்.

ராஜசிம்மனின் கூர்விழிகள் சமவெளியையும், அதில் தெரிந்த புரவிகளின் தடத்தையும் ஆராய்ந்தன. "வணிகர் சொன்னதுபோல வந்தவர்கள் முப்பது பேர் மட்டுமல்ல. இன்னும் இரு மடங்கு வீரர்கள் வந்திருக்க வேண்டும்'' என்று முணுமுணுத்துக் கொண்டான் அவன்.

பாறை மீது உயரத்தில் தனியாக நிற்பவன், மறைவிலிருப்பவர்களுக்கு எத்தனை எளிதான இலக்காக முடியும் என்பதை அப்போது உணராத இந்தளதேவன், பாறை மீதிருந்தே இரைந்தான். "வீரர்களே, கானகத்தினுள்ளே சென்று தேடுங்கள் அந்தக் கொள்ளை...'' அவன் வார்த்தைகளைத் தொடரும் முன்பு, மரங்களின் மறைவுகளிலிருந்து அவனை நோக்கி சரமாறியாக அம்புகள் பறந்தன. அவன் கீழே குதித்து இறங்கும் முன்பாக, அவன் மார்பிலும், தோளிலும், விலாவிலும் அம்புகள் பாய்ந்தன. மரங்களின் மறைவுகளிலிருந்து பெரும் கூச்சலுடன், ராஷ்டிர கூடர்கள் ஓங்கிய வாட்களுடன் ஓடிவந்து அவனைச் சூழ்ந்தார்கள்.

திகைத்து நின்ற பாண்டிய வீரர்களை ராஜசிம்மனின் கணீரென்ற குரல் செயல்பட வைத்தது.

"உப தலைவரே, நீர் பதின்மருடன் தந்தைக்கு உதவச் செல்லுங்கள். மீதிப் பேர் இரண்டாகப் பிரிந்து, வருபவர்களை பக்கவாட்டில் தாக்குங்கள்.'' என்ற ராஜசிம்மனின் புரவி அதிவேகமாக ராஷ்டிரகூடரை நோக்கிப் பாய்ந்தது.

ஒரு கணமே தள்ளாடித் தரையில் நின்ற இந்தளதேவன், தன் மீதிருந்த அம்புகளைப் பிடுங்கி எறிந்து, உடலெங்கும் குருதி வழிய நின்றான். சூழ்ந்து கொண்ட ராஷ்டிர கூடரை ஒருமுறை

''அப்பாவைத் திட்டிக்கிட்டே இருக்கறதை அம்மா நிறுத்திட்டாங்களே, ஏன்?''

''டாக்டர்தான் சொல்லிட்டாரே, அப்பாவுக்கு இனிமே 'தாளிப்பே' கூடாதுன்னு!'

- வெ. சீதாராமன்

பார்த்தவனுக்கு, மன்னர் ஓலையில் குறிப்பிட்ட அபாயம் என்னவென்று புரிந்தது. மகன் ராஜசிம்மன் யூகித்ததும் எத்தனை சரியென்பதும் புரிந்தது.

தன் நீண்டு வளைந்த வாளை உருவிக் கொண்ட பாண்டியர் புரவிப்படைத் தலைவனது நெஞ்சுரமும், கைவேகமும் இன்னதென்பது அடுத்த சில கணங்களில் புரிந்தது ராஷ்டிர கூடர்களுக்கு.

ஈட்டிகளுடன் முன்னால் பாய்ந்த ராஷ்டிரகூடர் இருவரின் கரங்கள் வெட்டுப்பட்டன. மூன்றாவது வீரனின் கழுத்து வெட்டுப்பட்டுத் தலை தொங்கியது. அடுத்து இருவர் மார்பில் வாள் பாய்ந்து அலறினர். மற்றொருவனது தோள் வெட்டுப்பட்டது. உபதலைவனும் மறுபுறம் நெருங்கியதால் ராஷ்டிர கூடர் திணறத் தொடங்கினர். இந்தளதேவனைக் குறி வைத்த சதியானதால், பாறைகளின் மறைவிலிருந்து இன்னும் வீரர்கள் அந்த இடத்தில் சேரத் தொடங்க, போர் உக்கிர நிலையை எட்டியது. இறுதியாக வந்த ராகுலன், வாளை ஓங்கியபடியே இந்தள தேவனை பின் புறமாக நெருங்கினான். எதிரிலிருந்த இருவரை வீழ்த்தி, சுழன்று திரும்பிய இந்தளதேவன் மார்பில் ராகுலனின் வாள்

## சரித்திரம்

வேகமாகப் பாய்ந்தது. கண்கள் இருள, தடுமாறிய இந்தள தேவன், இறுதியாக பக்கத்தில் ஈட்டியொன்றுடன் வந்த ராஷ்டிர கூடன் உடலில் தன் வாளைப் பாய்ச்சியபடி கீழே சரிந்தான்.

இந்தளதேவன் உடலிலிருந்து வாளை உருவிய ராகுலன், ராஜசிம்மன் இருந்த இடத்தை நோக்கியதும் பிரமிப்பில் வாயைப் பிளந்தான். தந்தை போரிட்ட அதே முறையில் சுழன்ற ராஜ சிம்மனின் மெல்லிய வாள், அசாத்திய வேகத்தில் சுழன்று ராஷ்டிர கூடர்களைத் திணற டித்துக் கொண்டிருந்தது. பின்னாலும், பக்கவாட்டிலும் நெருங்கியவர்களின் கழுத்திலும், கண்களிலும் துருவித் துளைத்த அந்த வாளின் வீச்சு, ராகுலனைத் திகைக்க வைத்தது.

இந்தள தேவனால் வீழ்த்தப்பட்ட தன் வீரனின் ஈட்டியை குனிந்து எடுத்த ராகுலன், ராஜசிம்மனின் கழுத்துக்குக் குறி பார்த்தான்.

பேராடியபடியே ராஜசிம்மனின் விழிகளும் ராகுலனை கவனித்தன. அடுத்து அவன் வீச்சின் முறையும் மாறியது. ராகுலனை நோக்கி முன்னேறினான் ராஜசிம்மன்.

அந்தச் சிறுவனின் கூர்விழிகளின் ஒளி ராகுலனின் மனதில் அச்சமேற்படுத்தியது. எச்சரிக்கைக் குரல் கொடுத்த ராகுலன் ஈட்டியை பலமாக வீசினான். சூழ்ந்திருந்த ராஷ்டிர கூடர்கள் சட்டென்று விலக, நடுவிலிருந்த ராஜசிம்மனை நோக்கி அந்த ஈட்டி பாய்ந்தது.

கழுத்தை நோக்கி வந்த அந்த ஈட்டி, ராஜசிம்மனின் வாளின் சுழற்சியில் பட்டு முழுவதுமாக விலகாமல், திசைமாறி அவன் விலாப் பகுதியில் முழுவதுமாகப் பாய்ந்தது.

ஒரு கரத்தால் ஈட்டியைப் பிடித்தபடி அப்படியே தள்ளாடிச் சரிந்து, தரையில் விழுந்தான் அந்த இளைய வீரன்.

(தொடரும்)

## அருள்வாக்கு

"பகவான் நம்மைக் கண்திறந்து பார்க்க வேண்டும்" என்று எல்லோரும் குறைப்பட்டுக் கொள்கிறோம். கருணைக் கடலான ஈச்வரன் கண்ணைத் திறந்து பார்த்துக் கொண்டேதான் இருக்கிறான். ஏன் அவன் நாம் இஷ்டப்படுகிற மாதிரி நமக்கு ஸௌபாக்யங்களைத் தரவில்லை என்றால், நாம் கண்ணைத் திறந்து லோகத்தின் கஷ்டங்களைப் பார்த்து அது நிவ்ருத்தியாவதற்கு நம்மாலான உபகாரத்தைப் பண்ணாமலிருப்பதால் தான். நம் மனஸ் மற்றவர்களிடம் தயையால் நிரம்பினால், உடனே கருணையே உருவமான ஈச்வரனும் நமக்கு தயை புரிவான். ஆனதால், கண்ணைத் திறந்து பார்க்க வேண்டியது நாம்தான்; பகவானல்ல.



கண்ணைத் திறந்து பல தினுஸாகக் கஷ்டப்படுபவர்களையும் பார்த்து நம்மாலானவரையில் அதை நிவ்ருத்தி பண்ண வேண்டும். அது மட்டும் போதாது. அவர்கள் தங்கள் கண்ணைத் திறந்து கொண்டு, இத்தனை கஷ்ட நிவ்ருத்திக்கும் எவன்தான் மூலகாரணமோ - அவனைப் பார்த்து, இந்தக் கஷ்டம் ஸுகம் எல்லாவற்றையும்விடப் பெரிசு அவனை அடைவதுதான் என்று உணரும்படியாகப் பண்ணவேண்டியதே நம்முடைய தலையாய பணி.

**- ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்**

புண்ணியம் யாவும் தரும் புருஷோத்தமனை, அங்கப்பிரதட்சணம் செய்து வழிபடும் அடியவர்கள் பலர் உண்டு. ஆனால், பக்தருக்கு அருள்பாலிப்பதற்காக அந்தப் பெருமாள், தாமே அங்கப்பிரதட்சணம் செய்துவந்து கோயில் கொண்ட திருத்தலம் ஒன்று உண்டென்றால், அது எத்தனை மேன்மை மிக்கதாக இருக்கும்!

உயர்வான அத்தலத்தின் பெயர், மகப்பேறு மங்கலம்.

* சந்தான கிருஷ்ணன்

# மகப்பேறு தரும் முகப்பேர்!



சுமார் அறுநூற்றி ஐம்பது ஆண்டுகளுக்கு முன், மல்லிநாத சம்புவராயன் என்ற மன்னன், காஞ்சியை ஆண்டு வந்தான். சகல பாக்கியங்களும் பெற்றிருந்த அவனுக்கு ஒரே ஒரு பாக்கியம் மட்டும் இல்லாதது பெருங்குறையாக இருந்தது. அது, அவனுக்குப் பின் அரசாள, ஒரு வாரிசு இல்லாக் குறை.

மனம் வருந்திய மன்னனுக்கு, மகிழ்ச்சி தரும் தகவல் ஒன்று கிட்டியது. அது, பாலாற்றின் தென் கரையில், மகப்பேறு மங்கலம் என்றொரு மகத்தான தலம் இருக்கும் செய்தி. 'அங்கே, அரிக்கும் சிவனுக்கும் ஆலயம் அமைத்து வழிபட்டால், அவனுக்கு வாரிசு பிறக்கும்...' என்று கணித்துச் சொன்னார்கள் அரசவை ஜோதிடர்கள்.

அகமகிழ்ந்த மன்னன், உடனே அத்தலத்திற்குச் சென்றான். சிவ-விஷ்ணு ஆலயம் ஒன்றை சிறப்பாகக் கட்டினான். மாதவன், மகாதேவன் இருவர் அருளாலும் மகப் பேறு வாய்க்கப் பெற்றான்.

காலம் கடந்தது. காலம் கடந்தும் நின்ற அந்தக் கோயில், அந்நியர் படையெடுப்பால், அழிந்தது... சிதைந்தது... சில விக்ரகங்கள் மண்ணுக்குள் புதைந்தன... எல்லாத் தடங்கல்களையும் கடந்து எஞ்சி நின்றவர், திருமால் மட்டுமே. ஆலயமும் வழிபாடும் இன்றி இருந்தாலும், அடியவர்களுக்கு அருள, அன்போடு காத்திருந்தார் அச்சுதன்.

காலம் கனிந்தது. 1873ம் ஆண்டு, பக்தர் ஒருவரின் கனவில் தோன்றிய பரந்தாமன், தமக்கு ஆலயம் ஒன்றை அமைக்கச் சொன்னார். அதைத் தொடர்ந்து ஏழுமலையானுக்கு ஓர் எளிய கோயிலைக் கட்ட



* ஸ்ரீ சந்தான சீனிவாச பெருமாள்

ஆரம்பித்தார் அந்த பக்தர்.

அப்போது எழுந்தது, ஒரு பெரும் பிரச்னை.

ஒன்பதரை அடி உயரத்தில், 'நெடு' மாலாக நின்ற கோலத்தில் இருந்த பெருமாளை, ஆலயத்திற்கு எடுத்துச் செல்வது எப்படி என்ற பிரச்னைதான் அது.

போதுமான வாகன வசதிகளோ, கிரேன் போன்ற உபகரணங்களோ இல்லாத காலம் அது என்பதால், என்ன செய்வது என்று புரியாமல் குழம்பினர். அப்போது, திருமால் அருளால் அவர்களுக்கு ஒரு தீர்வு கிட்டியது.

அதன்படி, திருமாலின் திருவுருவை, வைக்கோலால் சுற்றினர். எந்தவித பின்னமும் ஏற்பட்டுவிடாதபடி, நின்ற கோலத் திருமாலை, சயனக் கோலத்தில் கிடத்தினர். அப்படியே மெதுவாகப் புரட்டினர். தொடர்ந்து...



• சந்தன அபிஷேகம்...

புரண்டு... புரண்டு... அங்கப்பிரதட்சணம் செய்து அடியவர்க்குத் தாம் அருள்பாலிக்கப் போகும் ஆலயம் நோக்கி நகர்ந்து வந்தார், பெருமாள்!

இதோ... இன்று அற்புதமாகக் காட்சி தரும் கோயிலில், புனிதமான ஒரு நாளில் கிழக்கு நோக்கி பிரதிஷ்டை செய்யப்பட்டார்.

**மகப்பேறு மங்கலம் என்று அழைக்கப்பட்ட அந்த மகத்தான தலம், இன்று மருவி, 'முகப்பேர்' என்றழைக்கப்படுகிறது:**

கிழக்கு நோக்கி அமைந்த நுழை வாயில். பிரம்மாண்டமான மண்டபம், அழகான கதைச் சிற்பங்களுடன் காட்சியளிக்கிறது. வாயிலைக் கடந்து நுழைந்ததும், இடதுபுறச் சன்னதியில் காட்சியளிக்கிறார், சர்வசக்தி கணபதி.

கணபதியைக் கைதொழுதுவிட்டு, கருவறைக்குள் நுழைந்தால், கண்களையும் கருத்தையும் கவர்கிறார் சந்தான சீனிவாசப் பெருமாள். கம்பீரமான அவரது தோற்றம் நம்மை பிரமிக்க வைக்கிறது. அதே சமயம், அடியவர்களுக்கு அருள்வதற்காக அன்போடு அங்கப் பிரதட்சணம் செய்து வந்தவர் இவர் என்ற எண்ணம் மனதிற்குள் தோன்றி, கண்கள் கசிய, நெஞ்சம் நெகிழ்கிறது.

திருமலை வாசனை நினைவுபடுத்தும் விதமாக, ஒன்பதரை அடி உயரத்தில் 'நெடு' மாலாகக் காட்சியளிக்கிறார் பெருமாள். அவரது திருமார்பினை திருமகள், பூமகளுடன், ஆதிலக்ஷ்மியும் அலங்கரிக்கின்றாள். திருவடியருகே காட்சி தரும் ஒரு சிறிய விக்ரகம், நம் கவனத்தைக் கவர்கிறது.

பாம்பணை மீது பாலகன் கண்ணன் படுத்திருக்கும் கோலத்தில் அமைந்த அந்த விக்ரகத்தின் சிறப்பு என்ன?

குழந்தை வடிவில் காட்சி தரும் அந்த கோபாலன்தான், இத்தலத்தின் சிறப்பினைச் சேர்ப்பவன்.

மகப்பேறு மங்கலம் என்ற இத்தலத்தின் பெயருக்கு ஏற்ப, சந்தானப் பேற்றினை சரண் அடைந்தோர்க்கு அருள்பவன்.

ஆதிசேஷன் குடைபிடிக்க, ஆலிலை மீது தவழும் அனந்தனின் அந்தக் குட்டி விக்ரகம் குழந்தை வரம் கேட்டுவரும் பக்தர்களின் மடியில், குழந்தையாக தவழவிடப்படுகிறது.

பிள்ளைவரம் வேண்டி வரும் தம்பதியருக்காக பௌர்ணமி தினம், புனர் பூசம், திருவோணம், சுவாதி, ரேவதி நட்சத்திரங்கள் வரக்கூடிய நாட்களில் இங்கே சிறப்பு பூஜை நடத்தப்பட்டு, அதன் பின்னரே மாதவனை மடியில் தாங்கும் பாக்கியம் அவர்களுக்குக் கிட்டுகிறது.

அவர்களின் சந்தோஷத்தின் பிரதிபலிப்பாய், சந்தான சீனிவாசனின் முகத்தில் எப்போதும் புன்னகை மிளிர்கிறது.

தன் நாயகன் சந்தான சீனிவாசனின் திருநாமத்திற்கு இணையாக, சந்தான

லக்ஷ்மி என்ற திருப்பெயர் தாங்கி, அவரது இடப்புறம் உள்ள சன்னதியில் அமைந்து அருள்பாலிக்கிறாள் அன்னை. தாமரை பீடத்தில் அபய, வரத முத்திரைகள் காட்டி, தாமரை மலர்கள் ஏந்தி காட்சி தரும் தாயாரை தரிசிக்கும் போது, தண்ணென்ற உணர்வு பரவி மனத்தைக் குளிர்விக்கிறது.

மூலஸ்தானத்தின் முன், திருமாலின் திருவடியை எப்போதும் தரிசிக்கும் கோலத்தில், தாஸபாவத்துடன் அமைந்துள்ளார், பெரிய திருவடியான கருடாழ்வார்.

வீரபக்த ஆஞ்சநேயராக, வலப்புற சன்னதியில் வரம் தந்து நிற்கிறார், வாயுமகன்.

சபரிமலைநாதனுக்கு இங்கு தனிச் சன்னதி உண்டு. அவர் சன்னதியில் தரப்படும் சந்தனம், இறை மணம் கமழ்கிறது.

கிரகங்கள் ஒன்பதின் அனுக்கிரகம் பெறும் வகையில், நவக்கிரக சன்னதியும் உள்ளது.

மலைக்க வைக்கும் மாபெரும் வடிவில் காட்சி தரும் சீனிவாசப் பெருமாள், ஏழு மலை வாசனை நினைவுபடுத்துவதால், தென் திருப்பதி என்ற பெயரும் வழங்கப்படுகிறது இத்தலத்திற்கு.



* சந்தான சீனிவாசன் (உற்சவர்)

மங்களங்கள் யாவும் தரும் மாதவனை, மகப்பேறு கிட்ட வரம் தரும் மாயவனை, அன்பர்க்காக அங்கப்பிரதட்சணம் செய்த அனந்தனை, சந்தோஷமும், சந்தானமும் தரும் சந்தான சீனிவாசனை தரிசிக்க, சென்னை முகப்பேரில் உள்ள அவன் ஆலயத்துக்குச் சென்று வாருங்கள்.

மாதவன் அருளால் மகத்தான வாழ்வு பெறுங்கள்.

- தாயம்மா

# பாம்பும் பரதமும்...



சமீபத்தில் மங்கோலியாவில் நடைபெற்று முடிந்திருக்கிறது சர்வதேச குழந்தைகள் கலை விழா. இதில் கலந்து கொள்ள இந்தியாவிலிருந்து சென்ற பத்துப் பேரில், திருச்சியைச் சேர்ந்த பதினைந்து வயதான சுமித்ரா வீரராகவனும் ஒருவர். மங்கோலியக் கலை விழாவில் இவர் கலந்து கொண்டது பரத நாட்டியப் பிரிவில். எட்டு வயதிலிருந்து பரதம் கற்று வரும் இவர், 2003ல் அரங்கேற்றம் செய்து, 'நர்த்தனப் பிரியா' விருதும் பெற்றுள்ளார்.

"மங்கோலிய மக்களுக்கு விநாயகரே முக்கியக் கடவுளாக இருந்து வருகிறார். புத்த ஆலயங்கள் அங்கு அதிகம். ஓரிடத்தில் புத்தர் கோயில் ஒன்றினை சம்மர் டெம்பிள், விண்டர் டெம்பிள் என்று இரு பிரிவுகளாகக் கட்டி வைத்துள்ளனர். 'ஆயுஷ்' என்கிற தெய்வத்தை, ஆயுள் கடவுளாக மங்கோலிய மக்கள் வணங்கி வருகின்றனர். இதற்கென புத்த ஆலயங்களில் தனிச் சன்னதிகள் அமைந்துள்ளன" என்று தமது மங்கோலிய அனுபவத்தைக் கூறுகிறார்.

பரத நாட்டிய பாணியில், இவர் ஆடிக் காட்டிய பாம்பு நடனத்துக்கு மங்கோலியர் மத்தியில் பலத்த வரவேற்பாம். மங்கோலிய மக்களை மயக்கிவிட்டதாகக் கூறப்படும் பாம்பு நடனத்தை மேடையில் செல்வி சுமித்ரா மட்டுமே ஆடியிருக்கிறார். பாம்பு நடனம் நிறைவு பெற்றவுடன், பலத்த கரவொலி அந்த அரங்கையே அதிரச் செய்துள்ளதாம்.

- ஸ்ரீரங்கம் திருநாவுக்கரசு

சிறுகதை

# ஒரு நட்பின்

கல்யாண மண்டபம் களை கட்டி இருந்தது. எனது பால்ய சிநேகிதன் சிவாவின் திருமணம். மறக்காமல் தன்னுடன் பள்ளியில் படித்த எல்லா நண்பர்களுக்கும் பத்திரிகை அனுப்பி யிருந்தான். அதில் நானும் ஒருவன். பழைய நண்பர்களைச் சந்திக்கப் போகிறோம் என்று ஆசை ஆசையாக வந்திருந்தேன். மேடையேறி, வாங்கி வந்திருந்த பரிசுப் பொருளை சிவா விடம் கொடுத்து, மணமக்களை வாழ்த் தினேன்.

"மறக்காம சாப்டுட்டுப் போடா" என்றான் சிவா.

தலையாட்டிவிட்டு மறுபடி வந்து பழைய இடத் திலேயே அமர்ந்து கொண்டேன். என் பார்வை முழுக்க மண் டபத்தையே சுற்றிச் சுற்றி வந்தது. எத் தனை துள்ளலாக பழைய ஞாபகங் களை நண்பர்களிடம் புதுப்பிக்கலாம் என்று வந்தேன். ச்சே... ஒருத்தனையும் காணோமே' - மனம் புலம்பித் தவித் தது.

என் கோரிக்கை கடவுளுக்குக் கேட் டிருக்க வேண்டும்... மண்டபத்துக்குள் செல்வகுமார் நுழைந்து கொண்டிருந்தான். செல்வகுமார் என் னோடு பத்தாவது படித்தவன். எனது நெருங்கிய நண்பன் இல்லாவிட்டாலும், நண்பன் என்கிற வட் டத்தில் வருகிறவன்தான். நான் எதிர் பார்த்திருந்தவர்களெல்லாம் வராமல் போனபிறகு, இவனாவது வந்தானே என்று ஆறுதலாக இருந்தது. இங்கிருந்த படியே அவனை நோக்கி கையசைத் தேன். முதலில் சற்று குழப்பமாகப் பார்த்தவன், பின்பு சுதாரித்துக் கொண்டு என்னை நோக்கி வந்தான். எழுந்து சென்று அவன் கரங்களைப் பிடித்துக்கொண்டேன்.

"எப்படிடா இருக்கே?" என்றேன் மலர்ச்சியோடு.

"நல்லாருக்கேன். எவ்ளோ நாளாச்சுடா உன்னையெல்லாம் பார்த்து..." - செல்வகுமார் முகத்தில் நீண்ட பிரி விற்குப் பிறகு சந்திக்கும் இன்ப அதிர்



> பழைய சிநேகிதங்கள
> பார்க்கறச்சே
> ரொம்ப சோகமா
> இருக்குமே...

# முடிவில்...

வுகளை என்னால் உணர முடிந்தது.

"வேற யாரெல்லாம் வந்திருக்காங்க நம்ம ஃப்ரெண்ட்ஸ்?" என்றான்.

மு.மாறன்

"எவனுமே வரலடா. நீயும் நானும் மட்டும் தான் பார்க்கணும்னு இருந்திருக்கு"

"உன்கூடவே சுத்திட்டிருப்பானுங்களே சீனு, ஹேமநாதன்னு ரெண்டு பேரு... பார்க்கிறியா அவனுங்கள?"

"வாழ்க்கை திசை மாறிப் போச்சுடா. யாரையுமே பார்க்கறதில்ல. அதான் இன்னிக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைச்சதும் ஆசை ஆசையா ஓடி வந்தேன். ஆனா உன்னைத் தவிர எவனையும் பார்க்கக்

## சிறுகதை

கொடுத்து வைக்கலை."

"சரி விடுடா, அவனவனுக்கு என்ன வேலையோ."

பேசிக் கொண்டே இருவரும் சென்று சாப்பிட்டோம். பிறகு திரும்பி வந்து, செல்வகுமார் சென்று சிவாவிடம் ஏதோ கிஃப்ட்டைக் கொடுத்து விட்டு வந்தான். புறப்படலாம் என்று இருவரும் எழுந்தபோதுதான்



யாரோ பின்னாலிருந்து என் தோளைத் தொட்டார்கள். திரும்பிப் பார்த்தால், என் தூரத்துச் சொந்தமான மாமா பாக்யநாதன் நின்றிருந்தார்.

"என்னடா கல்யாணத்துக்கா?" என்றார்.

"ம்" என்று தலையாட்டினேன்.

"மாப்பிள்ளையா, பொண்ணா யாரு தெரிஞ்சவா?" என்றார்.

"மாப்பிள்ளை சிவா, என் ஸ்கூல்மேட்."

"இதாரு, இவாளும் உன் ஃப்ரெண்டா?" என்றார் எனக்குப் பின்னால் நின்றிருந்த செல்வகுமாரைப் பார்த்து.

"ஆமா, இவனும் என்கூட ஸ்கூல்ல படிச்சவன்தான். பேரு செல்வகுமார்."

"பழைய சிநேகிதங்கள பார்க்கறச்சே ரொம்ப சோகமா இருக்குமே...ம்... என்ஜாய் பண்ணுங்கோ..." என்று, நகர்ந்தவர், திரும்பவும் வந்து

"அம்மா, அப்பாவ நான் விசாரிச்சதா சொல்லு" என்று கூறிவிட்டுப் போனார்.

நான் செல்வகுமாரிடம் திரும்பி "போகலாமா?" என்றேன். அவன் பதில் பேசாமல் என்னையே, என் கண்களையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"என்ன செல்வகுமார் அப்படிப் பார்க்கிறே?" என்றேன்.

"என்னை மன்னிச்சுடுடா ப்ளீஸ்..." என்றான்.

"ஏன், நான் ஏன் உன்னை மன்னிக்கணும்? நீ என்ன தப்பு செஞ்ச செல்வகுமார்?"

"பத்து வருஷம் கழிச்சுப் பார்த்தும் வார்த்தைக்கு வார்த்தை செல்வகுமார், செல்வகுமார்னு சொல்லி என்னை மறக்காம இருக்கியேடா... ஆனா நான்..."

"ஆனா என்னடா?"

"தப்பா நினைக்காதடா... என் பேரை நீ ஞாபகம் வச்சிருக்கிற அளவுக்கு உன் பேர் என் நினைவுல இல்லடா ப்ளீஸ்... உன் பேர் என்னன்னு சொல்லேண்டா" என்றான் செல்வகுமார். ○

ஞானம்

# ஹலோ, இறைவா - 14

எப்போதுமே இறை சிந்தனையில் இருக்க வேண்டும். தினமும் தவறாமல் பிரார்த்தனை செய்ய வேண்டும் என்று போதிக்கப்படுகிறது. மக்களும் அதை கடைப்பிடிக்க முயல்கிறார்கள். முடிந்த வரை கடைப்பிடிக்கிறார்கள். பிரச்னையின் உச்சகட்டத்தில், 'இறைவன் மேல் பாரத்தைப் போட்டுவிட்டு, 'இனி எல்லாம் உன் செயல்' என்று நினைப்பவர்களும் உண்டு.

ஆனால், திடீரென்று ஒரு பிரச்னை ஏற்பட்டு உயிருக்கே போராட வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டால், அந்தத் தருணத்தில் நம் மனம் இறைவனை நினைக்குமா என்பது ஒரு சிக்கலான கேள்வி. இது சம்பந்தமாக ஸ்ரீராமகிருஷ்ண மடத்தைச் சேர்ந்த ஒரு சுவாமிக்கு ஏற்பட்ட அனுபவம் சுவாரஸ்யமானது.

ஸ்ரீ ராமகிருஷ்ண மடத்தைச் சார்ந்த ஹாஸ்டல் ஒன்றில், தங்கிப் படித்துக் கொண்டிருந்த சில மாணவர்களை அழைத்துக்கொண்டு ஒரு சுவாமிஜி, வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட பகுதிகளில், பாதிப்புக்குள்ளான மக்களுக்கு நிவாரணப் பணி செய்வதற்காகச் சென்றார். சில நாட்கள் அந்த மக்களுடன் தங்கி பலவிதமான பணிகளையும் செய்து முடித்துவிட்டு, தங்கள் ஹாஸ்டலுக்கு அவர்கள் திரும்பிக் கொண்டு இருந்தனர்.

வழியில் எதிர்பாராத விதமாக, அவர்கள் வந்து கொண்டிருந்த ஜீப், புதை மணலில் சிக்கிக் கொண்டது. மாணவர்கள் பெரும் பீதியடைந்தனர். அதிர்ஷ்டவசமாக வெகு அருகில் ஒரு மரம் இருக்கவே, அதன் உதவியுடன், அனைவரும் தப்பித்து விட்டனர். ஜீப்பின் பெரும்பகுதி புதை மணலுக்குள் புதைந்து போனது.

பத்திரமாய், ஹாஸ்டலுக்குத் திரும்பி வந்தவுடன், மாணவர்களும், அந்த சுவாமிஜியும், தாங்கள் தப்பிப் பிழைத்த அனுபவத்தைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தபோது, திடீரென்று ஒரு மாணவர் ''சுவாமிஜி! எந்த நேரமும் ஸ்ரீ ராமகிருஷ்ணரை நினைத்துக் கொண்டிருக்க வேண்டும் என்று நீங்கள் சொல்லுவீர்களே! இன்று நாம் வந்த ஜீப், புதை மணலில் சிக்கிக் கொண்ட தருணத்தில் நீங்கள் ஸ்ரீ ராமகிருஷ்ணரை நினைத்தீர்களா?'' என்று கேட்டார்.

ஒருகணம் கண்களை மூடிக்கொண்டு, சீரியஸாக சிந்தனை செய்துவிட்டு, கேள்வி கேட்ட மாணவரை நோக்கி, ''இல்லை! அந்தத் தருணத்தில், நான் பகவான் ராமகிருஷ்ணரை நினைக்கவில்லை. என் எண்ணம் முழுவதும், எதிர்பாராத இந்தப் பிரச்னையிலிருந்து அத்தனை மாணவர்களையும் காப்பாற்ற வேண்டுமே! என்ன செய்வது? என்பதைப் பற்றியே இருந்தது'' என்றார்.

மாணவர்கள் அந்த விஷயத்தை அத்துடன் விட்டுவிட்டபோதிலும், அந்த சுவாமிஜி, விட்டுவிடத் தயாராக இல்லை. மடத்தின் கிளைக்குப் பொறுப்பான தலைமை சுவாமிஜியிடம், அன்றைய தினம் நடந்த சம்பவம், மாணவரது கேள்வி, அதற்குத் தம்முடைய பதில் எல்லாவற்றையும் விளக்கமாகச் சொல்லிவிட்டு, "என் மனம் அந்தத் தருணத்தில் பகவானைத்தான் நினைத்திருக்க வேண்டும். வேறு எதைப் பற்றியும் இருந்திருக்கக் கூடாது. எனவே, என்னுடைய வழக்கமான பணிகளிலிருந்து சிலநாள் என்னை விடுவியுங்கள். நான் சில மனப் பயிற்சிகளையும், தியானமும் செய்ய விரும்புகிறேன். எந்நேரமும் இறை சிந்தனை இருக்க வேண்டும் என்பது என் லட்சியம்'' என்று கேட்டுக் கொண்டார்.

மூத்த சுவாமிஜி, அவர் சொன்னதைக் கேட்டுவிட்டு, உடனடியாக ஒப்புதல் தராமல், "நான் அந்த முடிவை எடுக்க விரும்பவில்லை. இந்த விஷயத்தை, அப்படியே நமது தலைமையகத்துக்கு கடிதம் மூலமாகத் தெரிவிக்கலாம். அவர்கள் சொல்லும் ஆலோசனைப்படி நடவுங்கள்'' என்று கூறி

சுவாமி போதமயானந்தா



# மாணவர்கள் கட்டாயம் படிக்க வேண்டிய தொடர்!

விட்டு, தலைமையகத்துக்குக் கடிதம் அனுப்பி வைத்தார்.

அடுத்த சில தினங்களில், தலைமையகத்திலிருந்து பதில் வந்தது. "அந்தக் குறிப்பிட்ட தருணத்தில் தாங்கள் இறைவனை நினைக்கவில்லையே என வருந்தும் உணர்வை நாங்கள் மதிக்கிறோம். ஆனால், அது குறித்து நீங்கள் வருந்தப்பட வேண்டிய அவசியமே இல்லை. அபாயமான ஒரு கட்டத்தில் நீங்கள் இறைவனை நினைக்க முடியாமல் போயிருக்கலாம். ஆனால் ஒரு விஷயத்தை தயவுசெய்து நினைவில் கொள்ளுங்கள். அப்போது, இறைவன் உங்களுடன்தான் இருந்தார். அவர் கூடவே இருந்து, உங்கள் எல்லோரையும் ஆபத்திலிருந்து காப்பாற்றினார்" என்று குறிப்பிடப்பட்டிருந்ததுடன், "இதற்குப் பிறகும் நீங்கள் உங்களுடைய வழக்கமான பணிகளிலிருந்து விடுவிக்கப்பட்டு, மனப் பயிற்சி, தியானத்தில் ஈடுபட வேண்டியது அவசியமா? என்று யோசியுங்கள்" என்றும் தலைமையக சுவாமிஜி கூறியிருந்தார்.



ஒரே சம்பவத்தை இன்னொரு கோணத்தில் பார்த்து, அளிக்கப்பட்ட புதிய விளக்கம் அனைவரையும் வியப்பில் ஆழ்த்தியது. அதன்பின், அந்த சுவாமிஜி, மகிழ்ச்சியுடன் தம் பணிகளில் தொடர்ந்து ஈடுபட்டார்.

நாம் கடவுளைப் பற்றி சிந்தித்துக்கொண்டே இருக்க வேண்டும், கட

# ஞானம்

வுளும் நம் கூடவே இருப்பார் என்கிற நம்பிக்கையுடன் படிக்கிறபோது, வெறுமனே பரீட்சையில் பாஸ் பண்ணணும்; ஃபர்ஸ்ட் கிளாஸ் வாங்கணும் என்கிற கீழ்மட்ட இலக்குகளைத் தாண்டி, பல படிகள் மேலே சென்று, அறிவைப் பெருக்கிக்கொள்ள வேண்டியது மனிதனின் கடமை. குறிப்பாக, படிக்கிற வயதில் மாணவர்கள் அறிவை விருத்தி செய்து கொள்ள வேண்டும் என்பதற்காகவே படிக்க வேண்டும். அப்படிப் பெறுகிற அறிவு என்கிற தீ, அறியாமை என்கிற அழுக்குகளைப் பொசுக்கி விடும்.

ஆனால் நான் சொன்னாற்போல, அறிவு விருத்திக்காகப் படிக்கிற மாணவர்கள் இன்றைக்கு எத்தனை பேர் இருக்கிறார்கள்? பாடங்களை முழுமையாகப் படித்து, அது தொடர்பான இதர புத்தகங்களைப் படித்து, அறிவை வளர்த்துக் கொள்ளுகிற மாணவர்கள் இருக்கிறார்கள் என்றாலும், அவர்கள் மிகச் சிலர்தான். பாடங்களையே முழுமையாகப் படிப்பவர்களும் குறைவுதான். ஒவ்வொரு பாடத்தின் இறுதியிலும் உள்ள கேள்விகளுக்கு, பதில்களைப் படிக்கிற மாணவர்களும், அவற்றிலேகூட, பரீட்சைக்கு வரக் கூடிய முக்கியமான கேள்விகள் எவை எவை என்று ஆசிரியர்களே குறித்துக் கொடுக்க, அவற்றை மட்டும் படித்துவிட்டு, பரீட்சைக்குப் போகிறவர்களின் எண்ணிக்கைதான் மிக அதிகம். இது வருத்தம் தரக்கூடிய நிஜம்.

கடனே என்று படிக்கிற மாணவர்களிடம் பேசிப் பார்த்தால் அவர்களிடம் ஆர்வக் குறைவு இருப்பது தெரியும். நான் மாணவர்கள் ஹாஸ்டலில் வார்டனாக சில ஆண்டுகள் இருந்தபோது, மாணவர்கள் படிக்காமல் சும்மா உட்கார்ந்திருக்கும் சமயத்தில், காரணம் கேட்டால், “போரடிக்கிறது” என்று பதில் சொல்லுவார்கள்.

மாணவர்கள் மட்டுமில்லை... பொதுவாக எல்லோருமே அடிக்கடி, ‘போரடிக்கிறது’ என்ற வார்த்தையைப் பயன்படுத்துவதை கவனிக்கலாம்.

அது என்ன போரடிக்கிறது? 'Bore' என்ற ஆங்கில வார்த்தைதான் இதற்கு அடிப்படை. இதற்கு ‘துளையிடுதல்’ என்று பொருள். தண்ணீரைப் பெறுவதற்காக பூமியைத் துளையிடுவதைப் போல, அறிவு என்கிற ஊற்றைப் பெற்றுப் பயனடைவதற்காக மூளையைத் துளைத்துச் சொல்லித் தருகிறார் ஆசிரியர் என்று பாசிடிவ்வாக ‘போரிங்’கை எடுத்துக் கொள்ளாமல், அதற்கு நேரிடையான பொருளில் நாம் பயன்படுத்திக் கொண்டிருக்கிறோம்.

யாராவது பையன்கள் என்னிடம் ‘போரடிக்கிறது’ என்று சொன்னால், நான் உடனே ‘‘அப்படியா? நீ அதனைத் திருப்பி அடி’’ என்பேன்.

அது எப்படி முடியும்?

படிக்க ஆர்வமில்லாத தருணங்களில், பிரார்த்தனை, உடற்பயிற்சி, தியானம் போன்றவை மூலம் உற்சாகம் ஏற்படுத்திக் கொண்டு, படிக்க ஆரம்பிக்க வேண்டியதுதான்!

(அடுத்த இதழில் விடை பெறுகிறேன்)

---

“என்ன, தலைவர் வீட்ல தினமும் மூணு வேளை மணிச் சத்தம் கேக்குது...”

‘‘அதுவா, தலைவர் ஜெயில்ல இருந்ததால, மூணு வேளை மணியடிச்சா சோறு போட்டாத்தான் சாப்பிடறாரு!”

- தெனாலி



தொடர்ந்து எல்லோரும் 'இளமை'க்காக கல்லூரிகளையே மொய்த்துக் கொண்டிருக்க, இந்தமுறை ஒரு மாறுதலுக்கு நாம் டுடோரியல் காலேஜை அணுகினோம்.

சென்னை கலெக்டர் நகரிலுள்ள எம்.வி.என். டுடோரியலுக்குச் சென்றால், பாக்கெட்டில் பல்லி மிட்டாய் பதுக்கியிருக்கும் பால் வடியும் பாலகனிலிருந்து, முரட்டு மீசை ஆசாமி வரைக்கும் ஒரே வகுப்பில் பார்க்க முடிகிறது.

"பத்தாவது, பன்னிரண்டாவது ஃபெயிலானவங்க நேரா இங்க வந்தாத்தான் உருப்படியா பாஸ் செஞ்சு, இருக்கிற மானத்தையும் ஏதோ காப்பாத்திக்க முடியும். தபாலில் பி.ஏ, பி.காம் பண்றவங்க அக்கவுண்ட்ஸ் மேத்ஸெல்லாம் தானா போட்டு பழகி தேறிடலாம்னு நினைச்சா, கதை கந்தலாயிடும்" - சீரியஸாக டுடோரியலின் அவசியத்தையும் மகத்துவத்தையும் அங்கு படிக்கும் யுவர்னா உரைத்தபோது, வயதுக்கு மீறிய பொறுப்புணர்ச்சி தெரிந்தது.

"ஆமா சார். இங்க வர்றவங்க பெரும்பாலும் பகலில் வேலைக்கு போய்ட்டு, மாலையில வந்து கோச்சிங் எடுத்துப்போம். எங்க குடும்பச் சூழ்நிலையால காலேஜுக்குப் போக முடியலை. ஆனாலும் நாளைக்கு பொண்ணு பார்க்கப் போனா பையனுக்கு அட்லீஸ்ட் டிகிரியாவது இருந்தாதானே, பொண்ணு சம்மதிப்பான்னு (!) வீட்ல தபால்ல டிகிரி படிக்க வைச்சு இங்கேயும் அனுப்பிடறாங்க" என்கிற பொன்ராஜுவுக்கு டைட்டானிக் ஹீரோ ஸ்டைலில் ஹேர் ஸ்டைல்.



"ஒரு குருவி இப்போதான் இதிலிருந்து பறந்து போச்சு" என்று திலகவதியும் மேகலாவும் கூட்டணி போட்டுக் கலாய்த்தனர்.

அசல் கல்லூரிகளுக்கேயுரிய குதூகலமும், ஆட்டம் பாட்டமும் இங்கு இல்லையெனினும், வயதிற்குரிய சேஷ்டைகள் இங்கும் நடைபெறுகின்றன.

" +2 ஃபெயிலான பிறகு வாழ்க்கையே இருண்டு போச்சு. எந்தச் சொந்தக்காரங்க கல்யாணத்துக்கும் போக மாட்டேன்'' என்றபடி தினேஷ் சீரியஸாக பேசிய பொழுது சில சுவாரஸ்யங்கள் காதில் விழுந்தன. அதாவது, இங்கு வருபவர்கள் பெரும்பாலும் பாஸாகி விடுகிறார்கள். எல்லா

# மாப்பிள்ளை!



ு டோரியல்களும் கோ-
ட்டதான். தமிழ்நாட்டின்
பல காதல்களுக்கு இங்கு
தான் பிள்ளையார் சுழி
போடப்படுகின்றன.

மாஸ்டர்களின் முதுகுக்குப் பின்னால் பழிப்பது, விநோத ஒலி எழுப்புவது என துள்ளலாட்டம் போட்டாலும், எல்லோருக்கும் ஒரு ஏக்கமிருக்கிறது.

"ஆயிரம் சொல்லுங்க... காலேஜ் மாதிரி வராது. மூணு, நாலு வருஷமும் அவங்க கொண்டாட்டமா வாழுறதைக் கேட்டா நமக்கு ஏதோ கொடுப்பினையில்லையோனு தோணும். இங்க அதிகபட்சமா இரண்டு மணி நேரம் ஒண்ணா இருப்போம். அவ்வளவுதான். காலேஜ்ல எந்தப் பிரச்னையானாலும் உங்க பின்னாடி ஒரு கும்பலே துணைக்கு வரும். கல்ச்சரல், ஸ்போர்ட்ஸ் எல்லாமே அங்க இருக்கும். இந்த இருபது வயசுல நான் முழுவதும் வேலை. அதை விட்டா படிப்பு, இதைத் தவிர எதுவுமே எங்களுக்குத் தெரியாது. கானா பாட்டு பாடணும், ஃபுட்போர்டு அடிக்கணும், கண்டக்டர்கிட்ட திட்டு வாங்கணும், குறிப்பா, க்ளாஸ் கட் அடிச்சுட்டு ஃபர்ஸ்ட் ஷோ நண்பர்களோடு படம் பார்க்கணும்... இதெல்லாம் ஸ்கூல்லயோ, ஆபீஸ்லயோ, வீட்லயோ கிடைக்குமா சார்... சொல்லுங்க கிடைக்குமா எனக்கு?" என திடீரென அஞ்சலி பாப்பாவாய் நம்மை உலுக்கிய பிரகாஷின் உணர்ச்சிக் குவியலுக்கு மௌனத்தையே பதிலாக தர முடிந்தது.

மனிதப் பிறவி அடைந்தவர் எல்லோருக்கும், தானாய் இளமை கிடைத்து விடுகிறது. ஆனால் கல்லூரி வாழ் நாட்களும் அதன் பசுமையான நினைவுகளும்... ஒரு சிலருக்கே அமைகிறது.

**- ச.ந. கண்ணன்**

படங்கள்:
**ஸ்ரீஹரி**





# பாலிடிக்ஸ் பஜார்

வீரப்பன் அதிரடி படையால் சுடப்பட்டு இறந்தானா? அல்லது வகையாக மாட்டிக் கொண்டதால் தற்கொலை செய்து கொண்டானா? எதேச்சையாக மாட்டிக் கொண்டானா? அல்லது அதிரடிப் படையின் திட்டமிட்ட நுண்ணறிவு, அவனைக் காட்டைவிட்டு வெளியே கொண்டு வந்ததா? போன்ற சர்ச்சைகள் இனி வரும் நாட்களில் தொடர்ந்தாலும், ஜெவுக்கு அரசியல் பலத்தைக் கூட்டும் விஷயம் இது என்பதை யாரும் மறுக்க முடியாது. புதிய வீராணம் திட்டத்தின் புகழ்பாடி சென்னையில் கூட்டங்கள் நடத்த இருந்த அ.தி.மு.க., இப்போது வீரப்பன் ஒழிக்கப்பட்டதை புரட்சித் தலைவியின் சாதனை என்று சொல்லி, தமிழகம் முழுதும் பிரசாரம் செய்யத் திட்டமிட்டிருக்கிறது. 'வீரப்பன் கும்பலை வளர்த்தவர் கருணாநிதிதான்' என்பது பிரசாரத்தின் முக்கிய அம்சமாக இருக்குமாம்.

அதிரடி படைத தலைவர் விஜய குமாருக்கு டி.ஜி.பி. பதவி உயர்வு கொடுக்கப்பட்ட நிலையில், சென்னை நகர ஆணையராக அவர் மீண்டும் பொறுப்பேற்பார் என்று பலமாக பேசப் படுகிறது. ஆனால் ஆணையர் பதவிக்கு டி.ஜி.பி. அந்தஸ்து அதிகம். இருந்தும் சென்னை நகரின் போலீஸ் எல்லைகளை விரிவுபடுத்தி, அவரை பலமிக்க ஆணையராகப் போடுவதற்கு வாய்ப்பு உள்ளதாம்.

வீரப்பன் ஒழிக்கப்பட்ட நிலையில் அதிரடிப் படைக்கு என்ன வேலை? இருந்தும் அந்தப் படை, இந்த நிதியாண்டு முழுதும் செயல்படும். காட்டில் இப்போது மழை; எனவே வீரப்பனின் மறைவிடங்களைக் கண்டு பிடிப்பதிலும், காட்டுக்குள் சகல இடங்களுக்கும் செல்வதிலும் பல சிரமங்கள் இருக்கின்றன. வீரப்பனை உயிரோடு பிடிக்க முடியாவிட்டாலும், காட்டுக்குள் அவனது தொடர்புகளை நிரூபிக்கும் சில தடயங்கள் கிடைக்கும் வாய்ப்பிருப்பதாக போலீஸ் நம்புகிறது. குறிப்பாக, கடத்தலின்போது கிடைத்த கோடிக் கணக்கான பணத்தை, காட்டில் சில இடங்களில் வீரப்பன் புதைத்து வைத்திருக்கலாம். எனவே வீரப்பன்



## வீரப்பன்... வீராணம்.



இறந்தாலும் சர்ச்சைகள் தொடரலாம். எனவே அடுத்த ஐந்தாறு மாதங்களுக்கு அதிரடிப்படைக்கு வேலை இருக்கிறது.

"வீரப்பனை ஒழித்ததற்காக தமிழக முதல்வரை, பிரதமர் பாராட்டி தொலை பேசியில் பேச வேண்டும்" என்று அம்மா வுக்கும் காங்கிரஸுக்கும் நெருக்கத்தை உண்டாக்க நினைக்கும் சில தில்லி காங் கிரஸ் தலைவர்களும், உயர் அதிகாரி களும் முயன்றார்களாம். வீரப்பனைவிட பயங்கரவாதிகளை காஷ்மீரிலும், அஸ்ஸா மிலும் நமது போலீஸும், ராணுவமும் சந்தித்து வருகிறார்கள். மோதல்களில் நமது பாதுகாப்புப் படையினர் தவிர, கொடூரமான தீவிரவாதிகளும் தினசரி கொல்லப்படுகிறார்கள். எனவே இப்படிப் பாராட்டத்தொடங்கினால், தினசரி பாராட் டிக் கொண்டே இருக்க வேண்டியது தான்" என்று உய ரதிகாரிகள் சிலர் சொன்னாலும், அம்மா ஆதர வாளர்களின் முயற்சி தொடர் கிறது.



"கடந்த கால அரசியலைப் பற்றிக் கவலைப்படாமல், அரசியல் ஏற்றத்தை நோக்கிச் செயல் திட் டங்களை மாற்றிக் கொள்ள வேண்டும்" என்ற கொள்கையுடைய ஜெயலலிதாவிட மிருந்து, "இரண்டு தடாலடி அறிவிப்புகள் வரக் கூடும்" என்று சொல்கிறார்கள். ஒன்று, "இனி பா.ஜ.க.வின் கூட்டணி கிடையாது" (இது மீறப்பட்ட பழைய வாக்குறுதிதான்). மற்றது: "கூட்டணி ஆட்சிக்கும் அ.தி.மு.க. தயார்" என்பது. ஊசலாடும் சில தி.மு.க. கூட்டணிக் கட்சி களை வளைத்துப்போட அம்மா போடும் தூண்டில்! சிக்கும் மீன்களைப் பொறுத்து தேர்தலைச் சந்திக்கும் கால கட்டம் தீர்மானிக்கப்படும் என்கிறார்கள்.

# விரைவில் தேர்தல்?

'மத்திய அரசில் பங்கு பெற மாட்டோம்' என்ப தில் உறுதியாக இருக்கிறார் வைகோ. அதே சமயம் சில மூத்த தலைவர்களின் நச்ச ரிப்பை அவரால் தாங்க முடியவில்லை. "அமைச்சர் தானே கூடாது. ஏதாவது வாரியம், ஆணையம் போன்ற வற்றுக்குத் தலைவர் பதவி கேட் கலாமே" என்று சொல்லப்பட, ரயில்வே தேர்வாணைக் குழு தலைவர் பதவியை செஞ்சியா ருக்கு வாங்கித் தரும் முயற்சி யும் நடந்தது. ஆனால் 'இதோ... அதோ' என்று நாட்கள் இழுக்க, 'மூத்த கூட்டணிக் கட்சி கட்டையைப் போட்டு விட்டதோ' என்று சந்தேகப் படுகிறது ம.தி.மு.க. வட்டாரம்.

2001 சட்டமன்றத் தேர் தலில் ஜெயலலிதா வென்ற பிறகு, தி.மு.க.வில் தைரியமாகச் செயல்பட்டவர்களில் விழுப் புரம் பொன்முடி மிகவும் குறிப்பிடத் தகுந்தவர். அதன் பின் விழுப்புரத்தில் மாநாடு நடத்தி அசத்தினார். ஆனால் பாராளுமன்றத் தேர்தல் வெற்றிக்குப் பிறகு, தலைவரையும் தளபதியையும் நெருங்க முடியாத அளவுக்கு ஒதுக்கப்பட்டிருப்பதாக அவரது நண்பர்கள் சொல் கிறார்கள். "விழுப்புரத்தில் பொன்முடியின் செல்வாக்கு அதிகமானால், வன்னியர் களின் ஆதரவை இழக்க வேண்டியிருக்கும்" என்று சிலர் தூபம் போட்டதால் ஏற்பட்டுள்ள நிலையாம் இது.

- கௌசி



# நாங்க ரெடி; நீங்க ரெடியா?



**மாமி** : ஏண்டி ராதா, உனக்கு ஒரு விஷயம் தெரியுமா?

**ராதா** : என்ன விஷயம் மாமி?

**மாமி** : மங்கையர் மலர்ல புதுசா ஆசிரியர் பொறுப்பேற்றிருக்காங்களே ரேவதி சங்கரன் அவங்க நம்பளையெல்லாம் சந்திக்க வரப் போறாங்களாமே?

**ராதா** : வரப் போறாங்க இல்லை, வந்துட்டாங்க. முதல் சந்திப்பை கடலூரிலேயும், அடுத்தது விழுப்புரத்துலேயும் வாசகிகளை நேருக்கு நேர் சந்திச்சிருக்காங்க. இன்னும் திருச்சி, சேலம், நாகைன்னு அன்பு வட்டத்தை விரிவுபடுத்திக்கிட்டே போகப் போறாங்க. தமிழ்நாடு மட்டுமில்லை. இந்தியா முழுதும் வலம் வரப் போறாங்களாம்!



**மாமி** : அப்படியா சேதி?

**ராதா** : அதுமட்டுமில்லை. இந்த 'அன்பு வட்டம்' வாசகர் விழாவில், நமக்கெல்லாம் நம்முடைய திறமைகளை வெளிப்படுத்த நல்ல சான்ஸ். போட்டிகளும் உண்டு, பரிசுகளும் உண்டாம். அதோட 'அன்பு வட்ட' உறுப்பினர் அட்டையும் உண்டாம். இதில் 'சந்தா' முதல் பல சலுகைகளையும், மங்கையர் மலர் வாசகிகளுக்கு ஸ்பெஷலா அறிவிச்சிருக்காங்க.



**மாமி** : 'ஓ' சரி நான் கிளம்பறேன்.

**ராதா** : எங்க மாமி?

**மாமி** : 'அன்பு வட்டம்' உறுப்பினர் ஆவதற்கு என்னைத் தயார்ப்படுத்திக்கத்தான்!

## திருச்சி வாசகிகளே...

**நீங்க தயாரா இருங்க. அடுத்து உங்களைத்தான் சந்திக்க வருகிறார் ஆசிரியர் ரேவதி சங்கரன்**

**இடம்** : திருச்சி ஸ்ரீமதி இந்திரா காந்தி மகளிர் கல்லூரி

**நாள்** : ஞாயிற்றுக்கிழமை

**தேதி** : 31.10.2004 **நேரம்** : மாலை 4.00 மணி

**சிறப்பு விருந்தினர் : டாக்டர் திருமதி கே.மீனா**

முதல்வர், ஸ்ரீமதி இந்திரா காந்தி மகளிர் கல்லூரி




அன்பு வட்டம் அமைப்போம்,
சாதனை படைப்போம்

நிகழ்ச்சியில் இணைந்து
பரிசுகள் வழங்குவோர்






# கேள்வி-பதில்

ங்கள் கேட்டவை - தராசு

● வசந்தி வள்ளுவன், மதுரை

? திரையில் 'வாஸ்து'வை நக்கல் டிக்கும் நடிகர் விவேக், நிஜத்தில் தன் ீட்டை மாற்றிக் கட்டு ிறாராமே? இடிக்க ில்லை...?

! இடிச்சுக் கட்டறது ன்னும் இடிக்கலை...

* இடிக்காத வாஸ்து!



• செல்லாத வாஸ்து!



• தெரிந்தும் தெரியாத...



• கற்றதும் பெற்றதும்!

நிழலை நிஜமா நினைக்கிறீங்களே அங்க தான் இடிக்குது!

●கே.வி. ராமன், சென்னை - 73

? சூப்பர்மேன் படத்தொடரில் நடித்துப் புகழ் பெற்ற கிறிஸ்தஃபர் ரீவ் மறைவு குறித்து...?

! திரைப்படத்தில் மட்டுமின்றி வாழ்க்கையிலும் சூப்பர்மேனாக வாழ்ந்து காட்டியவர். குதிரைச் சவாரியின்போது கீழே விழுந்து உடம் பெல்லாம் நொறுங்கிய பிறகும், மனம் நொறுங் காமல் பல காரியங்களைச் செய்து வந்தது ஒரு மகத்தான சாதனை இலக்கியம்.

# ஆயுதப் போரைக் கைவிட நக்ஸலைட்டுகள் மறுக்கிறார்களே..?

# கேள்வி-பதில்

நீங்கள் கேட்டவை - தராசு

● எம்.சாம்பமூர்த்தி, வேலூர் - 1

? கூடுதலாக ஒரு நீர் ஆதாரம் தேவை என்பதை ஜெ. உணர்ந்ததால்தான் இன்று புதிய வீராணம் தண்ணீர் சென்னைக்குக் கிடைக்கிறது. மகிழ்ச்சிதானே?

! அந்த மகிழ்ச்சி நீடிக்க வேண்டும் என்பதுடன், வீராணத்தை நம்பி விவசாயம் செய்யும் மக்களின் மகிழ்ச்சி குலைந்து விடக்கூடாதே என்பதுதான் இத்திட்டத்தைக் குறித்த நம் கவலை.



* அநியாய எதிர்பார்ப்பு!



* அதிர்ச்சி அறிக்கை!

● கு. அருணாசலம், தென்காசி

? புஷ்-கெர்ரி ஒரே மேடையில் தோன்றி விவாதம் செய்கிறார்கள். இந்த மாதிரி ஆரோக்கியமான போட்டியைத் தமிழகத்தில் பார்க்க வாய்ப்பு உண்டா...?

! இங்கே 'ஒரே மேடையில் தோன்றி விவாதம் புரியத் தயாரா?' என்ற சவாலோடு சரி!

● சு.மோகன், சிதம்பரம்

? இடது சாரிகளுக்கு அதிக முக்கியத்துவம் அளிப்பதாக அத்வானி சொல்வது உண்மையாகத்தானே தோன்றுகிறது?

! பா.ஜ.க. ஆட்சியின் போது சங் பரிவாரங்களுக்கு அளிக்கப்பட்ட முக்கியத்துவத்தைவிட, குறைவுதான். இதில் ஆபத்தும் குறைவுதான்.

● ஜி. ராமதாஸ், தஞ்சாவூர்

? டாஸ்மாக் மது விற்பனையை அதிகரிக்க போலீஸ் துறையையும் ஈடுபடுத்துவது குறித்து...?

! குடிக்காதவர்கள்மீது வழக்கு தொடுப்போம் என்று மிரட்டுவது அடுத்த கட்டமாக இருக்கும்!

● ஆர்.எம்.இ.மலை, அக்ரஹாரம்

? 'அரசுடன் பேச்சுவார்த்தை எப்படி முடிந்தாலும் சரி... ஆயுதப் போராட்டத்தைக் கைவிட மாட்டோம்' என்று நக்ஸலைட்டுகள் சொல்வது சரியா...?

! பேச்சு வார்த்தையின் தொடக்கத்திலேயே விட்டுக் கொடுத்துவிட மாட்டார்கள். படிப்படியாகத்தான் இறங்கி வருவார்கள். போரில் இறங்குவது எளிது உத்தரவு போட்டால் போதும். பேச்சு வார்த்தை மூலம் அமைதி நிலைக்கச் செய்வது கஷ்டம். கஷ்டமான காரியத்தில் வெற்றி பெற்றால்தான் பெருமை.

● அ. கஹைறல் ரஹ்மான், திருச்சி

? கர்நாடகத்தில் பிற மொழிப் படங்கள் திரையிடும் பிரச்னை தீவிரமடைந்துள்ளதே?

! ஆறுகளைக் கட்டிப் போட்டவர்கள் இப்போது திரைப்படங்களை அனுமதிக்க மறுக்கிறார்கள். போகிற போக்கைப் பார்த்தால் 'அந்நியர்கள் உள்ளே வரக்கூடாது' என்று பிற மாநிலத்தவர்களுக்கு அறிவிப்புப் பலகை வைத்தாலும் வைப்பார்கள்.

● எம். சிவகுருநாதன், தஞ்சை

? பெட்ரோல் - டீசல் விலை உயர்வு உண்டா என்பது பற்றி கடவுளுக்கும் பிரதமர் மன்மோகன் சிங்குக்கும்தான் தெரியும் என்று மணி சங்கர் அய்யர் சொல்வது...?

! இன்னைக்கு இல்லைன்னாலும் நாளைக்கு பெட்ரோல் - டீசல் விலை உயரும் என்பது மணி சங்கர் அய்யர் உள்ளிட்ட எல்லோருக்குமே தெரியும். (சர்வதேசச் சந்தையில் விலைச் சரிவு எனும் அற்புதம் நிகழ்ந்தாலொழிய.)

● வி.கல்யாணி, திருநெல்வேலி - 11

? சமீபத்தில் தங்களை உலுக்கிய நிகழ்ச்சி?




* சூப்பர் வாழ்க்கை!

! வீரப்பன் கொல்லப்பட்டது குறித்து 'மகிழ்ச்சி?' தெரிவித்த தமிழக முதல்வரின் அறிக்கை - ஒங்கித் குறைவாக இருந்தது.

● ம.சி. கிருஷ்ணன், பத்ராவதி

? ராவணனின் காதலில் (?) நியாயம் இல்லாமல் போனாலும் 'நேர்மை' (!) இருப்பதாக கமல் கருத்து சொல்வது விதண்டாவாதமா? வாதமா?

! செல்லா வாதம்! சன்னியாசியாய் வந்து சீதையை அபகரித்துப் போனதில் என்ன நேர்மை இருக்கிறது? நேர்மையாளனாக இருந்திருந்தால், தீய எண்ணம் வந்ததுமே அதை ஒழிக்கத்தான் முற்பட்டிருக்க வேண்டும். தகாத ஆசையை வளர்த்துக் கொள்வது நேர்மை இல்லை; அரக்கத்தனம்.

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி

? 'இந்திய மக்கள் நாட்டுப் பற்று அதிகம் உள்ளவர்கள்... எனவே மூவர்ணக் கொடி பற்றியும், நாட்டுப்பற்று பற்றியும் சோனியா காந்தி பாடம் நடத்தத் தேவையில்லை...'' என்கிறாரே பால் தாக்கரே?

! இப்படியெல்லாம் அகம்பாவமாகப் பேசியதற்கும் சேர்த்துதான் மஹாராஷ்டிரா வாக்காளர்கள் அவருக்குப் பாடம் கற்பித்து விட்டார்களே!

● பி. ஜெயப்பிரகாஷ், சர்க்கார்பதி ★

? இலங்கை எதிர்கட்சித் தலைவர் ரனில் - கருணாநிதி சந்திப்பில் முக்கியத்துவம் ஏதும் உண்டா?

! மத்திய அரசில் கருணாநிதியின் முக்கியத்துவத்தைக் காட்டுகிற முக்கியத்துவம் நிச்சயமா இருக்கு!

● மல்லிகா சேகர், திருவாரூர்

? ஜெயலட்சுமி வழக்கில் சி.பி.ஐ. விசாரணை அவசியமில்லை என்று தமிழக அரசு உச்சநீதிமன்றத்தில் முறையிட என்ன அவசியம்?

! முறையிட அவசியமில்லை என்று உச்சநீதிமன்றமே கூறி, சி.பி.ஐ. விசாரணைக்கு வழியும் வகுத்துவிட்டதே! தமிழக அரசுக்குக் கண்டனமும் தெரிவித்துவிட்டதே!

● ஆர். பிரகாஷ், திருச்சி - 4

? கடல் நீரைக் குடிநீராக்க ரஷ்ய நிறுவனம் லஞ்சம் கேட்ட விவகாரத்தில், கோர்ட் நெற்றியடி தீர்ப்பு வழங்கியுள்ளது பற்றி...?





● விவாத வாய்ப்பு...

! லஞ்சம் கேட்டதற்கான ஆதாரமோ சாட்சியமோ இல்லை என்பதால், வழக்கைத் தள்ளுபடி செய்துள்ளது உயர்நீதிமன்றம். வழக்கு வெற்றிபெறும் வாய்ப்பே இல்லாதபோது, வழக்குத் தொடுத்து நீதிமன்றத்தின் நேரத்தை ரஷ்ய நிறுவனம் வீணடித்தது தவறுதான். ஆனால், பொய் வழக்கு என்றும் உறுதியாகச் சொல்லிவிட முடியாது.

● வே.ஆறுமுகம், கள்ளக்குறிச்சி

? சேப்பாக் பந்தயத்தில் தமிழக வீரர் யாரும் ஆடாதது வேதனைதானே?

! சேப்பாக் என்பதற்காக தமிழர் ஆட வேண்டும் என்று எதிர்பார்ப்பது தவறு. தகுதி இருந்தால், வாய்ப்பு எல்லா மைதானங்களிலும் தரப்பட வேண்டும். வருத்தத்தை ஏற்படுத்தியது, த்ரில்லிங் முடிவைத் தட்டிப் பறித்த மழைதான்!

● எம். பாஸ்கர், திண்டுக்கல்

? 'நாட்டுக்கு நல்லது எது? கெட்டது எது?' என்று சிந்தித்து எப்போதுதான் மக்கள் விளங்கிக் கொள்ளப் போகிறார்களோ?'

! என்ன அநியாயம்! தலைவர்களுக்கே புரியாத ஒன்றை, மக்கள் மட்டும் எப்படிச் சிந்திப்பார்களாம்!

ரூ.100 பரிசு பெறுபவர் :
ஆர்.எம்.இ.மலை,நல்லான்பட்டி,
அக்ரஹாரம் அஞ்சல்,
குடியாத்தம் - 632 001

ரூ.50 பரிசு பெறுபவர்
பி. ஜெயப்பிரகாஷ், டி.என்.இ.பி.
குடியிருப்பு, சர்க்கார்பதி - 642 133
சேத்துமடை வழி, கோவை மா.வ.

# அக்கப்போர்



**தமிழக காங்கிரஸ் தலைவர் ஜி.கே. வாசன் மற்றும் மத்திய இணை அமைச்சர் ஈ.வி.கே.எஸ். இளங்கோவன் இருவரையும் தனித் தனியாக ஒரே நேரத்தில் கல்கிக்காக சந்தித்தோம். அவர்களிடம் பேசியதிலிருந்து...**

**தமிழக காங்கிரஸ் தலைவராக நீங்கள் பொறுப்பேற்ற பின் காங்கிரஸ் தமிழகப் பிரிவின் வளர்ச்சி எந்தளவு உள்ளது?**

"தமிழக காங்கிரஸ் தலைவராக நான் பொறுப்பேற்ற இரண்டு மாதங்களுக்குள், நாடாளுமன்றத் தேர்தல் வரும் சூழல் ஏற்பட்டது. அன்னை சோனியா அவர்களின் வழிகாட்டுதலால் தமிழகத்தில் மிகப் பலமான கூட்டணி அமையப் பெற்று, போட்டியிட்ட பத்து தொகுதிகளிலும் காங்கிரஸ் வேட்பாளர்கள் வெற்றி பெற்று நாடாளுமன்றம் சென்றார்கள். இதைவிட வேறு என்ன வளர்ச்சி வேண்டும்?"

**முதல்வர் ஜெயலலிதாவிடம் தங்**

**நீங்கள் மத்திய அமைச்சராக பொறுப்பேற்றதினால் தமிழகத்துக்கு என்ன பயன்?**

"நெசவாளிகளை வாட்டி வதைத்த சென்வாட் வரி ஒழிக்கப்பட்டது; விவசாயிகளுக்கு எளிதாகக் கடன் பெற வழி செய்யப்பட்டுள்ளது. எழுபத்தைந்து ஆண்டுகளாக கிடப்பில் போடப்பட்டிருந்த சேது கால்வாய்த் திட்டம், செயலாக்கத்திற்கு வந்துள்ளது. தமிழ் செம்மொழி ஆக்கப்பட்டுள்ளது. இப்படி எத்தனையோ சொல்லலாம். இவை என்னால் மட்டுமல்ல, காங்கிரஸ் கூட்டணியின் தமிழகத்தை சேர்ந்த பன்னிரண்டு அமைச்சர்களாலும்தான்!"

**சேது திட்டம், தமிழ் செம்மொழி போன்றவற்றிற்கு தாங்களே காரணம் என்பதுபோல் தி.மு.க. பிரசாரம் செய்கிறது. இதனால் கூட்டணியில் பிளவு ஏற்படுமா?**

"நிச்சயமாக எங்கள் கூட்டணியில் பிளவு ஏற்படாது. தவிர, தி.மு.க.வினரும் அவர்களது தலைவர் டாக்டர் கலைஞரும் தங்கள் கடமையை சரிவரச் செய்கிறார்கள். ஆனால், தமிழக காங்கிரஸ் தங்கள் கடமையைச் சரிவரச் செய்யவில்லை என்பதே உண்மை. ஆனால், விரைவில் தமிழக சட்டமன்றத் தேர்தல் வருவதால், தமிழக காங்கிரஸில் நல்ல மாற்றம் ஏற்பட்டு உற்சாகமாகப் பணியைச் செய்யும்."

**அதாவது வாசன், தலைமைப் பொறுப்பிலிருந்து மாற்றப்படுவார் என்கிறீர்களா?**

"அகில இந்திய காங்கிரஸ் தலைவர், அன்னை சோனியா காந்தியின் கையில்தான் அந்த முடிவு இருக்கிறது."

**தமிழகத்தில் மூன்றாவது பெரிய கட்சியாக காங்கிரஸ் உள்ளது. உட்கட்சிப் பூசல்களின்றிச் செயல்பட்டு மிகப்பெரிய கட்சியாக வளர வேண்டும் என்ற எண்ணம் தமிழக காங்கிரஸில் யாருக்கும் இல்லையா?**

"காங்கிரஸ் ஒரு பேரியக்கம். இங்கே ஜனநாயக உரிமை, கருத்துச் சுதந்திரம் அதிகம் உண்டு. ஆகவே கோஷ்டிகள் இருப்பது போலத் தோன்றும். மற்றபடி பிரச்னை ஏதும் இல்லை."

ப. சிதம்பரம் காங்கிரஸ்

வாசன் பதவி சோனியா கையில்!



...ருக்குப் பிடித்த குணம் எது?

மக்களின் எண்ணங்களை தமிழக முதல்வர் இன்றைக்கு இருக்கும் சூழ்நிலையில் பிரதிபலிக்கத் தவறிய முதல்வராக செயல்பட்டுக் கொண்டிருக்கிறார். இதற்கு மேல் என்ன பதில் கூறுவது?

**காங்கிரஸு‍டன் கூட்டணி ஏற்படுத்தத் தான் இந்த நடவடிக்கைகள் என்கிறார்கள். காங்கிரஸ் இதை எப்படி உணர்கிறது?**

"தமிழகத்தில் காங்கிரஸ் இடம் பெற்றிருக்கும் கூட்டணி பலமானதாக மக்களின் நம்பிக்கையைப் பெற்றதாக, மத்திய அரசுக்கு அடித்தளமாக விளங்குகிறது. இந்நிலையில் எதனையும் உணர வேண்டிய அவசியம் இருப்பதாகத் தெரியவில்லை."



# எனக்கும் இளங்கோவனுக்கும் பிரச்னையில்லை!

**ஜெ.வுக்குத் 'தங்கத் தாரகை' விருது கிடைத்திருக்கிறது. மகளிர் நலனில் அவர் காட்டின அக்கறை பாராட்டத்தக்கதா?**

"இன்றைக்கு தமிழகத்தில் எந்த நிலையிலுள்ள மக்களும் நிம்மதியாக இல்லை. காரணம், ஆட்சியாளர்கள் மக்களின் எண்ணங்களைப் பிரதிபலிக்கவில்லை என்பதுதான். இதில் பாராட்டு எங்கிருந்து வந்தது?"

**ஜெ. இப்போது பி.ஜே.பி அணியில் இல்லை. சோனியா எதிர்ப்பிலும் மாற்றம். ஜெ. அரசைக் கலைக்க, தமிழக காங்.**



**சார்பில் அமைச்சராக இருக்கிறார். ஆனால், அவரது காங்கிரஸ் ஜனநாயகப் பேரவை இன்னமும் காங்கிரஸில் இணையவில்லை. விரைவில் உட்கட்சித் தேர்தல் வரவிருக்கிறது. என்னதான் நடக்கிறது உங்கள் கட்சியில்?**

"ப.சிதம்பரம் காங்கிரஸில் இணைந்து விட்டார். அவரது கட்சியும் விரைவில் காங்கிரஸில் இணையும் என்று நம்புகிறேன்."

**நீங்கள் தமிழக தலைமைப் பொறுப்பிலிருந்து விடுவிக்கப்பட்ட பின், சத்யமூர்த்தி பவனுக்கு வருவதில்லையே. ஆக, வாசன் கோஷ்டிக்கு எதிர் கோஷ்டியாகத் தானே செயல்படுகிறீர்கள்?**

"அப்படி அல்ல! நாங்கள் ஈரோட்டில் நடத்தப்போகும் பொதுக் கூட்டத்துக்கு வாசனையும் அழைத்துள்ளோம். ஆகவே எங்களைப் பொறுத்தவரை 'கோஷ்டி' என்ற எண்ணமே இல்லை."

**சமீபத்தில் உங்கள் ஆதரவு மாவட்டச் செயலாளர்களை உங்கள் வீட்டிற்கு அழைத்து கூட்டம் நடத்தியிருக்கிறீர்கள். இது...**

"இதுவும் 'கோஷ்டி' என்கிறீர்களா? விரைவில் உட்கட்சித் தேர்தல் வரவிருக்கிறது. அது பற்றியும், உறுப்பினர் சேர்க்கை பற்றியும் பேசினோம். இது எப்படி 'கோஷ்டி' ஆகும்?"

**காமராஜர் அறக்கட்டளை விவகாரமாக, வாசன் மீது உங்கள் அணியினர் புகார் கொடுத்துள்ளார்கள் என்று ஒரு செய்தி...**

"அது உட்கட்சி விவகாரம். அது பற்றி பேச விரும்பவில்லை."

**- டி.வி.எஸ்.**

# அக்கப்போர்

**கட்சி மத்தியில் அதிகம் வலியுறுத்தாத தன் பின்னணி என்ன?**

"அது போன்ற செயலை காங்கிரஸோ, பிற கூட்டணிக் கட்சிகளோ ஒருபோதும் செய்யாது!"

**தமிழக கூட்டணியைப் பொறுத்த வரை, தான்தான் எல்லாம் என்கிற மனப்பான்மையோடு தி.மு.க செயல்படுவதாக காங்கிரஸார் மத்தியில் குறையிருக்கிறதே...?**

"யாரோ ஒருவர், இருவர் கூறும் கருத்தெல்லாம் ஒட்டுமொத்த தமிழக காங்கிரஸின் கருத்தாக இருக்க முடியாது."

**மத்திய அரசால் நிறைவேற்றப்படும் திட்டங்கள் அனைத்துக்கும் தமிழ்நாட்டில் தி.மு.க ஏகபோக உரிமை கொண்டாடி வருவதாகப் பேச்சிருக்கிறதே... இது காங்கிரஸார் மத்தியில் அதிருப்தியை ஏற்படுத்தாதா?**

"தி.மு.க தலைவர் கலைஞர் அவர்கள், தாம் கலந்து கொள்கிற கூட்டங்களிலும் சரி, வெளியிடுகிற செய்திகளிலும் சரி அன்னை சோனியா அவர்களுக்கும், மத்திய அரசாங்கத்துக்கும் நன்றி கூறுகிறாரே.. பிறகு எங்கிருந்து இதில் அதிருப்தி வரும்?"



**சேது சமுத்திர திட்டத்தில் காங்கிரசின் பங்கு மறைக்கப்படுவதாக உணர்கிறீர்களா?**

"காங்கிரஸ் தலைமையில், கூட்டணிக் கட்சிகளின் உதவியோடுதான் சேது சமுத்திர திட்டம் செயல்படுத்தப் படுகிறது. இதில் மறைக்கப்படுகிற கேள்விக்கே இடமில்லை."

**மத்தியில் காங்கிரஸ் ஆட்சி நடக்கிறது. தமிழகத்தில் அ.தி.மு.க, காங்கிரசுடன் அணி சேரத் தயாராக இருப்பதாக கூறப்படுகிறது. காங்கிரஸின் மதிப்பு கூடியுள்ள நிலையில், வரும் சட்டமன்றத் தேர்தலில் தி.மு.க.விடம் அதிகத் தொகுதிகள் கேட்பீர்களா?**

"தமிழகத்தில் காங்கிரஸ் பலமான கட்சியாக இருக்க வேண்டும் என்பதுதான் காங்கிரஸாரின் விருப்பம். தேர்தல் நேரத்தில் அகில இந்திய காங்கிரஸ், கட்சிக்கு ஏற்றவாறு, கட்சியின் உணர்வுகளுக்கு ஏற்றவாறு நல்லதையே செய்யும் என்கிற நம்பிக்கை எனக்கு இருக்கிறது."

**மதுரை மாவட்ட காங்கிரஸ் கூட்டத்தில் நடந்த ரகளையை, சன் டி.வி அட்டமாக அப்படியே ஒளிபரப்பியுள்ளது. உள்கட்சி விவகாரத்தை இப்படி வெளிச்சம் போட்டுக் காட்டுவது கூட்டணி தர்மமாகுமா?**

"தொலைக்காட்சிகள், பத்திரிகைகள் எல்லாம் அரசியல் கட்சிகளுக்கு அப்பாற்பட்டவை. அதையும் இதையும் என்றைக்கும் நாங்கள் சம்பந்தப்படுத்திப் பார்ப்பதில்லை."

**திராவிடக் கட்சிகளின் உதவியில்லாமல் காங்கிரஸ் என்றைக்குச் சொந்தக் காலில் நிற்கும்?**

"பலமான, வலிமையான, முதன்மையான கட்சியாக காங்கிரஸ் வர வேண்டுமென்பதுதான், காங்கிரஸ் தலைவர்களின், தொண்டர்களின் வேண்டுகோள். அதற்கேற்றவாறு தொடர்ந்து பணி செய்கிறோம். காலம் கனியும்போது எல்லாம் நடக்கும்."

**தமிழக காங்கிரஸின் கூட்டங்களில் ப. சிதம்பரம் புறக்கணிக்கப்படுவதாகவும், அவரின் ஜனநாயகப் பேரவை லேபிள்தான் அதற்குக் காரணம் என்றும் கூறப்படுகிறதே...?**

"தமிழகம் முழுக்க காங்கிரஸின் கூட்டங்கள் நடந்து கொண்டுதான் இருக்கின்றன. தலைவர்கள் கலந்து கொண்டு தான் வருகிறார்கள். நீங்கள் கூறிய செய்தியில் உண்மை இருப்பதாக எனக்குத் தெரியவில்லை."

**'வேலை எதுவுமின்றி சத்தியமூர்த்தி பவனுக்கு செல்ல மாட்டேன்' என்று ப. சிதம்பரம் ஒரு பத்திரிகை பேட்டியில் கூறியிருக்கிறாரே...? எனில் அங்கு வருகிறவர்களைப் பார்த்து அவர் முன் வைக்கும் விமர்சனம் என்ன?**

"நான் அந்தப் பேட்டியைப் படிக்கவில்லை. படிக்காமல் கருத்துக் கூறுவது நல்லதல்ல."

**தமிழக காங்கிரஸின் பலம், பலவீனம் என்ன?**



"தமிழக காங்கிரஸிற்கு ...றுமே பலவீனம் கிடை...து. மத்தியிலே நேரு ...ம்பம், மாநிலத்திலே ...மராஜர் போன்ற தலை...்கள் எல்லாம் இந்தக் ...சிக்காக தங்களுடைய ...ணிகளைச் செய்திருக்...ார்கள். அவர்களின் வழி...ல் என்றும் நாங்கள் சிறப்...ாகச் செயல்படுவதுதான் ...ே பலம்."

**தற்போது இடம் பெற்...ருக்கும் கூட்டணியில் காங்...ரஸ் கட்சி புழுக்கமாக ...ணர்கிறதா?**

"இப்போதிருக்கும் எங்கள் ...ட்டணி மக்களின் நம்பிக்கை ...யப் பெற்றது. இதில் புழுக்...த்திற்கு இடமில்லை."

**தமிழக காங்கிரஸின் காஷ்டிப் பூசலை ஒழிக்க ...ன்னதான் வழி?**

"கோஷ்டிப் பூசல் என்பது காங்கிர...க்கு மட்டுமல்ல, அகில இந்திய அளவில் ...த்தனை கட்சிகளுக்கும் பொருந்தும். ...ரும் காலங்களில் கருத்து வேறுபாடுகள் ...றையும் என்று நம்புகிறேன். அதற்கேற்ற ...டி எல்லோரது ஆலோசனைகளையும் ...கட்டு அனுசரித்துப் போக வேண்டு...மென்பதுதான் என் எண்ணம். தற்...போது அதைத்தான் செய்து வருகிறேன். ...தொடர்ந்தும் செய்வேன்."

**'எனக்கும் வாசனுக்கும் எந்தப் பிரச்னையுமில்லை' என்று ஈ.வி.கே.எஸ். இளங்கோவன் கூறியிருக்கிறாரே?**

"தமிழ்நாடு காங்கிரஸ் கட்சியில் எந்தத் தலைவர்களிடமும், தொண்டர்களிடமும், பொறுப்பிலுள்ளவர்களிடமும் எனக்கு எந்தவிதமான பிரச்னையுமில்லை. கட்சியை பலப்படுத்த எல்லோரின் ஒத்துழைப்...பும் துணையும் எனக்குத் தேவை."

**கருத்து வேறுபாடுகள் குறைய இளங்கோவனிடம் பேச முன் வருவீர்களா?**

"மூத்த தலைவர்கள் அனைவரையும் நான் ஒரே மாதிரியாகத்தான் பாவிக்கிறேன். எனவே தனிப்பட்ட முறையில் எனக்கு யாருடனும் எந்தக் கருத்து வேறுபாடும் இல்லை."

**தமிழக காங்கிரஸ் தலைவராக இருப்பதில் திருப்தியாக உணர்கிறீர்களா?**

"நிச்சயமாக. கட்சி வளர்ச்சி அடைய அடைய எனக்கு மகிழ்ச்சிதான். அந்தப் பணியை செய்யத்தான் என்னை நியமித்திருக்கிறார்கள். முழு திருப்தியுடன் இருக்கிறேன்."

**மத்திய அமைச்சர் பதவி கிடைக்க வில்லையென்ற வருத்தம் உங்களுக்கு உள்ளதா?**

"உயர்ந்த தலைவர்களெல்லாம் இருந்திருக்கிற தமிழக காங்கிரஸ் தலைவர் பொறுப்பில் தற்போது நானிருக்கிறேன். அன்னை சோனியாவின் நம்பிக்கை மற்றும் ஆதரவைப் பெற்று, இன்றைக்கு நான் கட்சிப் பணியாற்றுகிறேன் என்றால், இந்தச் சிறிய வயதில் இதைவிட எனக்கு வேறு பாக்யமும் மகிழ்ச்சியும் இருக்க முடியாது."

**தமிழக காங்கிரஸ் வளர்ச்சி பெற என்ன திட்டம் வைத்திருக்கிறீர்கள்?**

"தற்போது உறுப்பினர் சேர்ப்பு நடந்து கொண்டிருக்கிறது. அதுதான் ஒரு கட்சியின் அடிப்படை. சாதாரணத் தொண்டனை உறுப்பினராக்குவதுதான் கட்சிக்கு அடிப்படைப் பணி. மூன்று வருடங்களுக்கு ஒருமுறை இந்தப் பணி நடக்கிறது. அதிகமான உறுப்பினர்களைச் சேர்க்க வேண்டுமென்கிற எண்ணத்தின் விளைவாக மாவட்டத் தலைவர்களும், மாநிலத்தில் உள்ள தலைவர்களும் சுறுசுறுப்பாக இயங்க ஆரம்பித்திருக்கிறார்கள். இது முழு வெற்றியை அடையும் என்கிற நம்பிக்கை எனக்கு இருக்கிறது. மேலும் காங்கிரஸ் ஆட்சியின் சாதனைகளை விளக்கும் விதமாக, சைக்கிள் பேரணி நடத்துகிறோம். தொடர்ந்து பாடுபடுவோம்."

**வரும் சட்டமன்றத்தேர்தலுக்கான காங்கிரஸின் வியூகம் என்ன?**

"மக்களின் நம்பிக்கையைப் பெற்ற கட்சியாக விளங்கி, போட்டியிடும் தொகுதிகளில் எல்லாம் வெற்றி பெற வேண்டும் என்பதுதான் எங்களின் வியூகமாக இருக்கும்."

**- மு.மாறன்**

படங்கள் : **பாவை வின்சென்ட்**

குமுறல்

# "நான் சண்டைக் கோழியா?"

**ஒரு மாதத்துக்கு முன்பு தேசிய விருது பெற்று, வாழ்த்து மழையில் நனைந்து கொண்டிருந்த மீரா ஜாஸ்மின், இப்போது அனுதாப அலையில். கேரள முதல்வர் கலந்து கொண்ட பொது நிகழ்ச்சியில் "என்னை எனது குடும்பத்தினரிடமிருந்து காப்பாற்றுங்கள்" என்று மேடையிலேயே கண்ணீர்விட்டு மீரா அழ, விவகாரம் சட்டென பரபரப்பாகிவிட்டது. வீட்டைவிட்டு வெளியேறி, தற்போது வாடகை வீட்டில் தனியே வசித்து வரும் மீரா ஜாஸ்மினுடன் உரையாடினோம்.**



**இயக்குனர் லோகிதாதாஸின் கட்டுப்பாட்டில் இருக்கிறீர்கள் என்று உங்கள் குடும்பத்தினரே சொல்லியிருக்கிறார்கள். இதுதானே பிரச்னைகளின் மூல காரணம்?**

"பிரச்னையின் மூல காரணம் இந்த அவதூறு அல்ல. என்னிடமிருந்து பறித்துக்கொண்ட எதையும் நான் திரும்பக் கேட்கக் கூடாது. எனது டைரக்டர் எனக்கு உதவி செய்யக் கூடாது. நான் தனிமைப்படுத்தப்பட வேண்டும். நான் சினிமாவில் இனி சம்பாதிக்கவோ, பெயரெடுக்கவோ கூடாது - இதுதான் எனது சகோதரிகளின் விருப்பம். ஏனென்றால் நிஷா அக்காவும் இப்போது நடிக்க முயற்சிக்கிறார் என்று கேள்விப்படுகிறேன். மனரீதியாக எனது வளர்ச்சியும் புகழும், அவர்களை பாதித்திருக்கலாம்."

**உங்களுக்கு தேசிய விருது கிடைத்ததை உங்கள் குடும்பத்தினர் எப்படிக் கொண்டாடினார்கள்?**

"அதில் ஒன்றும் குறைச்சல் இல்லை.
கேக் வெட்டி கொண்டாடினோ
'பாடம் ஒன்று! ஒரு விளாபம்!' (ஒரு பா
மும் - ஒரு துயரமும்) படத்தில் நடித்த
காகத்தான் சிறந்த நடிகைக்கான தேசி
விருது கிடைத்தது. அந்தப் படத்தில், நா
ஒரு இஸ்லாமிய அபலைப் பெண்ண
நடித்திருந்தேன். மதம் போடும் வே
சடங்கு சம்பிரதாயங்களி
பிடியிலிருந்து விலகி, நன்றாக
படித்து முன்னேறத் துடிக்கு
கேரக்டர். ஆனால் அது முடிய
மல் போய், அக்காள் க
வருக்கே மணமாகி, குழந்
பெற்றுக் கொண்டு, தன
கனவுகள் பொசுங்கிப்போ
விடும் பரிதாபத்தைச் சந்திக்கு
கதை. இந்தப் படத்தைப் போ
இல்லாவிட்டாலும், இதற்
இணையான துயரத்தை எனக்
கொடுத்துவிட்டார்கள். என
குடும்பமே எனக்கு பாடம் க
றுக் கொடுத்துவிட்டது.

**உங்களுக்கும் லோகிததாஸுக்குமான உறவு பற்!
இன்னும் நீங்கள் விளக்
வில்லையே?**

"இது அபாண்டம்! இயக்கு
ரின் குடும்பத்தினரே இதை நம்பவில்லை. அவரது மனைவியே என்னை போனில் கூப்பிட்டு தைரியம் சொன்னார்கள். அவர் ஐம்பத்து எட்டு நான் இருபத்து நான்கு. வயது வித்தியாசம் கூட அவர்கள் கண்களை உறுத்தவில்லையா? எனது கவலையெல்லாம் குருநாதரை இத்தனை அசிங்கப்படுத்துகிறார்களே என்பதுதான்."

**மூன்று வருடமாகவே உங்களை அவரோடு தொடர்படுத்தி செய்திகள் வெளியானபடி இருந்ததாமே?**

"அப்படியெல்லாம் இல்லை. தந்தை



மகள் போன்ற எங்கள் உறவை பத்திரிகைகள் கொச்சைப்படுத்தவில்லை. எனது சகோதரிகள்தான் சில நிருபர்களை கூப்பிட்டுச் சொல்லி, வதந்தியை பரப்பியிருக்கிறார்கள் என்று கேள்விப்படுகிறேன். இந்தக் கொடுமையை நான் எங்கே போய் முறையிடுவது! அதனால்தான் முதல்வர் கலந்து கொண்ட நிகழ்ச்சி என்ற உணர்வுகூட இல்லாமல் கதறி அழும்படி ஆகிவிட்டது.

**பிரச்னை எப்போது, எப்படி வெடித்தது?**

"எனது வருவாய் முழுவதையும வீட்டில் கொடுத்தேன். ஏமாற்றமாட்டார்கள் என்ற நம்பிக்கையிருந்தது. ஒரு கட்டத்தில் அந்த நம்பிக்கை போய்விட்டது. சர்ந்தமான முறையில்தான் கணக்குக் கேட்டேன். அன்று முதலே என்னிடம் பேசுவதைக் குறைத்துக் கொண்டார்கள். ஒரே வீட்டுக்குள்ளேயே என்னைச் சந்திப்பதை தவிர்த்தார்கள். ஆனால் நான் கால்ஷீட்டின்படி சரியாக படப்பிடிப்புக்குச் செல்ல வேண்டும் என்பதில் மட்டும் கவனமாக இருந்து துரத்துவார்கள். இப்போது எனது காரைக்கூட பிடுங்கிக் கொண்டு விட்டார்கள். காதில் கம்மல், கழுத்தில் ஒரே ஒரு சங்கிலியோடு வெளியே வந்துவிட்டேன். 'இப்போதாவது வெளியே வந்தாயே' என்று நலவிரும்பிகள் எனது முடிவைப் பாராட்டுகிறார்கள்."

**லோகிதாதாஸ் தான் தயாரித்து வரும் படங்களுக்கு உங்களது நிதி உதவியை எதிர்பார்த்ததால்தான் பிரச்னை இந்த அளவுக்கு வெடித்தது என்று உங்கள் குடும்பத்தினர் சொல்லியிருக்கிறார்களே?**

"எனது பணத்தை நம்பி அவர் இல்லை. அவருக்கு நல்ல சம்பளம் கிடைக்கிறது. அதையும் மீறி அவர் என்னிடம் கேட்டால், கையில் இருக்கும் பட்சத்தில் தாராளமாக அவருக்கு கொடுக்கலாம். எனக்கு சினிமாவில் அடுத்தடுத்து வாய்ப்புகள் கொடுத்து, என்னை நிலை நிறுத்தியவர். அவரது இயக்கத்தில் நடிக்க, தமிழில் விக்ரம் போன்ற பெரிய ஹீரோக்களே தயாராக இருக்கிறார்கள். அவர் தமிழில் இயக்கினால் நான்தான் கதாநாயகி.

அவருக்கு இரண்டு மகன்கள் மட்டும் தான். எனவே என்னை அவரது மகளாகப் பார்க்கிறார். பாசம் காட்டுகிறார். அவரை நான் மதிக்கிறேன். அவரது அறிவுரைகளைக் கேட்டு நடக்கிறேன். இப்போது கூட 'உனது குடும்பத்தினரைப் பகைத்து கொள்ளாதே' என்கிறார்.

**இனி உங்களுக்கு யார் ஆதரவு?**

எனக்குத் திறமை இருக்கிறது. நிறைய ரசிகர்கள் இருக்கிறார்கள். மலையாளம் மட்டுமல்ல, கன்னடம், தெலுங்கிலும் நடித்து வருகிறேன். மீண்டும் சம்பாதிப்பேன். வாழ்ந்து காட்டுவேன்.

**நீங்கள் முன்கோபி... சண்டைக்கோழி என்கிறார்களே!**

பல சமயம் படபடவென்று பேசுவேன். சில சமயம் ரொம்பவும் கூலாக இருப்பேன். தப்பு செய்கிறவர்களை நேருக்கு நேராகக் கேட்டுவிடுவேன். இது கெட்ட குணமா? யாருக்காகவும் எனது குணத்தை மாற்றிக் கொண்டு நிஜத்தில் நடிக்க எனக்கு விருப்பமில்லை.



## –மீரா ஜாஸ்மின் கண்ணீர்

- **ஜோஸ்வா பாரதி**

அட்டை, படங்கள் :
**சங்கர் சத்தியமூர்த்தி**

## ஆனந்தம்

# "அவருக்கு கடவுள் பக்தி அதிகம்!"

## - அதிரடிபபடை விஜயகுமார் மனைவி

**அதிரடிப்படை கூடுதல் டி.ஜி.பி. விஜயகுமார் வீட்டில் தொடர்ந்து தொலைபேசி அடித்தவண்ணம் உள்ளது. வீரப்பன் வேட்டையை வெற்றிகரமாய் முடித்தற்கு இந்தியாவெங்கிலுமிருந்து வாழ்த்து மழை. கணவருடனான பிசியான ஷெட்யூல்களுக்கிடையேயும் நம்மிடம் பேசினார் திருமதி. மீனா விஜயகுமார்...**

"அவரோட சாதனையை இன்னிக்கு ஊரே பேசும்போது சந்தோஷமாயிருக்கு. வீரப்பன் தேடுதலில் அவர் முழு வீச்சாக ஈடுபட்டார். நிறைய யோசனைகள் செய்வார். மஞ்சள் நிற துண்டுக் காகிதங்களில் நிறைய எழுதுகிறார் என்றால் ஏதாவது நடவடிக்கையில் இறங்கப் போகிறார் என்று அர்த்தம். கடந்த வாரம் அவர் அப்படிச் செய்ததிலிருந்து ஏதோ நடவடிக்கை எடுக்கப்படவிருப்பதாகப் புரிந்து கொண்டேன். அன்று இரவு புறப்பட்டுச் செல்லும்போதுகூட 'முக்கியமான நடவடிக்கை ஒன்றுக்காகப் போகிறேன்' என்று மட்டுமே சொல்லிவிட்டுப் போனார். (திருமதி மீனா விஜயகுமார் மாதத்தில் பாதி நாட்கள் சத்தியமங்கலத்தில்தான் தங்கி இருப்பாராம்) தான் எடுக்கும் நடவடிக்கைகளில் பலன் கிடைக்காமல், அவர் மனம் நொந்து போகிற தருணங்களில், "உங்கள் கடவுள் பக்திக்கும், கடும் உழைப்புக்குக் நிச்சயம் பலன் கிடைக்கும்" என்று ஆறுதல் கூறுவேன். இந்த தடவையும் அப்படி ஏதாவது ஆனால் என்ன ஆறுதல் சொல்வது என நான் நினைத்துக் கொண்டிருந்தேன். வீட்டு டெலிபோன் வேறு வேலை செய்யவில்லை. கடைசியாக ஒரு போலீஸ்காரர் வந்து, அதிரடிப்படை நடவடிக்கையில் வீரப்பன் இறந்த செய்தியைச் சொன்னார். அப்போதுதான் நான் நிம்மதிப் பெருமூச்சு விட்டேன். கடவுளுக்கு நன்றி சொன்னேன்.





அதிகாலை ஐந்து மணிக்கு வீடு திரும்பியதும், அவர் உடனே என்னை அழைத்துக் கொண்டு பண்ணாரி மாரியம்மன் கோயிலுக்குப் போனார். மொட்டை போட்டுக் கொண்டு, தனது பிரார்த்தனையை நிறைவேற்றினார்.

அவரது பிரார்த்தனை இதோடு முடிந்துவிடவில்லை.

பண்ணாரியிலிருந்து சென்னை நங்கநல்லூர் ஆஞ்சநேயர் கோயிலுக்கு நடந்தே வருவதாகவும் வேண்டிக் கொண்டிருக்கிறார். விரைவில் அதையும் நாங்கள் இரண்டு பேருமாக நிறைவேற்றுவோம். என்னைவிட அவருக்குக் கடவுள் பக்தி அதிகம். நான் எதுவானாலும் விதிப்படி நடக்கும் என்று நம்புகிறவள். வாழ்க்கையை அதன் போக்கில் ஏற்கும் மனப்பக்குவம் எனக்கு உண்டு.

எப்போதும் அவர் சவால்களுடன் வாழ விரும்புகிறவர். அதனால் சிறப்பு அதிரடிப்படையின் பொறுப்பை அவர் ஏற்றபோது நான் வருத்தப்படவில்லை. இதற்கு முன் தேசிய பாதுகாப்புப்படையில், காஷ்மீரில் பணியாற்றினார். நான், தனியாக மகன், மகளுடன் டெல்லியில் வசித்தேன்.

என் பதினெட்டாவது வயதில் என் திருமணம் நடந்தது. அப்போது இவர் ஐபிஎஸ். பயிற்சி பெற்றுக்கொண்டிருந்தார். வாழ்க்கையில் நிறைய சவால்களை சந்திக்க வேண்டியதிருக்கும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. இதற்கு முன்பும் இப்போதும் எந்த விதமான எதிர்பார்ப்புகளும் இல்லாமல்தான் அவருடன் வாழ்ந்தேன். வாழ்கிறேன்.

எங்களுக்கு ஒரே மகன். பெயர் அர்ஜுன். திருமணமாகி, ஆஸ்திரேலியா சிட்னியில் இருக்கிறான். மகள் அஸ்வினி டெல்லியில் படிக்கிறாள். இரண்டு பேருக்கும் டெலிபோன் செய்து, தகவல் சொன்னபோது பாராட்டு தெரிவித்தார்கள். என் மகன் அவ்வப்போது அப்பாவுக்கு ஊக்கமூட்டுவதுபோல் பேசுவதுண்டு." என்று கூறிய மீனா விஜயகுமாரிடம்,

**'ஆபரேஷன் குக்கூன் பற்றி உங்கள் கருத்து என்ன?'** என்றதும்,

"அதிரடிப்படையினரது முழுமையான ஈடுபாட்டோடு கூடிய கடுமையான உழைப்புக்குக் கிடைத்த வெற்றி. வேறு என்ன சொல்ல?'' என்று முடித்துக் கொண்டார்.

சந்திப்பு : **மௌலி**
படம் : **கௌதம்**

**விஜயகுமாருக்கு முன்பு, அதிரடிப் படைத் தலைவராக இருந்த சென்னை நகர போலீஸ் கமிஷனர் நடராஜ் சொல்கிறார்?**

"பல மாதங்களுக்கு முன்பே, திட்டமிட்டு, காட்டு ஓரத்து கிராமங்களில் விவசாயிகளாக, துணி விற்பவராக, பஸ் கண்டக்டராக என்று போலீஸார் ஊடுருவினார்கள். போலீசுக்கு பயப்படும் தீவிரவாதிகள் என்ற போர்வையில், இரண்டு பேரை, ஒரு வக்கீலிடம் அனுப்பி வைத்தோம். அவ்வளவு ஏன், போலீஸ்காரர், வேர்க்கடலை வியாபாரம் கூட செய்திருக்கிறார். போராளியாக, வீரப்பனின் உள் வட்டத்துக்குள்ளேயே போய்விட்டார்.

# வியூகம் + பொறுமை= வெற்றி

## - கமிஷனர் நடராஜ்

வீரப்பன் மகா சந்தேகப் பேர்வழி. யாராவது தன்னைக் காட்டிக் கொடுத்துவிடக்கூடும் என சந்தேகப்பட்டால் தீர்த்துக் கட்டிவிடுவான். எனவே துளியும் சந்தேகம் ஏற்படுத்தாதபடி ஊடுருவல் நடந்தது.

வீரப்பன் காட்டில் ராஜா. எனவே காட்டுக்குள் போய் அவனைப் பிடிப்பது நடக்காத காரியம். காட்டைவிட்டு அவனை வெளியே வரவழைத்துப் பிடிக்கவும் வியூகம் வகுக்கப்பட்டது.

வீரப்பனுக்குப் பார்வைக் குறை இருப்பது தெரிந்ததும், அதை எங்களுக்குச் சாதகமாய் பயன்படுத்த முடிவு செய்தோம். ஒரு கிரிமினல் எப்போதாவது நிச்சயம் தவறு செய்தே தீருவான். அவன் அப்படி தவறு செய்யும் வரை பொறுமை காத்து, அந்தத் தருணத்தில் பிடிப்பதுதான் வெற்றிகரமான அணுகுமுறை. அதுதான் இப்போது நடந்துள்ளது.

இந்த நடவடிக்கையில் குறிப்பிடத்தக்க விஷயம் என்னவென்றால், உள்ளே ஊடுருவிய போலீசார், வீரப்பனின் கூட்டம் முழுவதையும் புத்திசாலித்தனமாய் வேனில் ஏற்றி அழைத்துக் கொண்டு வந்துவிட்டனர். எல்லாம் ஒரே இடத்தில் முடிந்துவிட்டது. சுருக்கமாய்ச் சொல்ல வேண்டுமானால் வியூகம் + பொறுமை = வெற்றி."

**- சி.எம்.**

## தொடர்கதை 26

"ஊரைக் கூட்டப் போவுறதில்லை. விழா எடுக்கப் போவுறதில்ல. பிள்ளைக்கு அப்பத்தாவையும், அய்யாவையுமாவது கூப்பிடோணுமில்ல?" என விசாலாட்சியின் அண்ணன் மாணிக்கம் கேட்டுக் கொண்டதற்கு இணங்க, தியாகராஜனுக்கு நாலுவரியில் ஒரு தபால் அட்டை மட்டும் பழனியப்பன் எழுதிப் போட்டார்.

மறுநாளே அவரிடமிருந்து தொலைபேசி அழைப்பு வந்துவிட்டது.

"திருஞானம் இல்லைங்குறதுக்காக சடங்கு, சாங்கியம் எதையும் விட்டிற வேணாம். தொட்டி கட்டறதுன்னாலும் கட்டுங்க. விளையாட்டு பெட்டி வேவு எறக்கறதுன்னாலும் செய்ங்க. புதுமை செய்யிறதானாலும் செய்ங்க. பேத்திக்கோ, மருமகளுக்கோ கொறை இருக்கப்படாது. நாங்க விசேஷத்துக்கு முதல் நாள் கோட்டையூரில் எங்க மாமனார் வீட்டில் வந்து எறங்கிட்டு, விசேஷத் தன்னிக்கு குன்னக்குடி வந்திடறோம்" என்றார்.

திருஞானத்திற்குத் திதி கொடுத்தபின் ஒரு வருடம் கழித்தே சுப காரியங்கள்



# வலம்புரி முத்து

சத்தியப்ரியன்

நடக்கட்டும் என சிவகாமி சொல்லி விட்டதால், இதோ ஆனி கழிந்து, ஆடியும் போய், ஆவணியில் சுப முகூர்த்தம் பார்த்து, குன்றக்குடியில் வைத்து முடி இறக்கவும், காது குத்தவும் ஏற்பாடானது.

ஆறுமுகங்களுடன் சண்முகநாதனாய் விளங்கும் முருகன் எழுந்தருளியுள்ள குன்றக்குடி, காரைக்குடியிலிருந்து தென்திசையில் எட்டு கிலோ மீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. செட்டிநாட்டின் வட்டகைப் பகுப்பு முறை குன்றக்குடியை மையமாகக் கொண்டே அமைந்துள்ளது. செட்டிமக்க என்றே அழைக்கப்படும் முருக நகரத்தாரின் கண்கண்ட தெய்வ

ஊருக்கு நடுவில் வடபுறமா முகமும், தென்புறமாக தோகையு கொண்டு நிற்கும் முருகனின் வாகனமான ஓர் அழகிய மயில் நிற்பது போல அமைந்திருக்கிறது. அந்த அழகிய மலை. சின்ன குன்றுதான். குறைவான எண்ணிக்கையில் படிகள். அடிவாரத்தில் மண்டபமும், சரவணப் பொய்கையும் அமையப் பெற்றுள்ளது. சரவணப் பொய்கையில் முடி இறக்க ஏற்பாடானது.

அம்மான் அருணாசலம் மடியில் மதுராவை அமர வைத்தார்கள். கண்களில்

மை; கன்னத்தில் திருஷ்டிப் பொட்டு; புது இடம்; வியர்வை; அந்நிய முகங்கள் என மதுரா அழ ஆரம்பித்துவிட்டாள். அருகில் இரண்டு பெண்மணிகள் மதுராவைப் பிடித்துக் கொள்ள, அது வேறு பிள்ளைக்கு எரிச்சலானது. எரிச்சல் அவளை மேலும், மேலும் உக்கிரமானவளாக



மாற்றியது.

"ஆத்தி! இந்தத் தள்ளு தள்ளறாளே" எனக் கூறிய அருணாசலத்திற்கு மருமகளின் ஆவேசம் மேல் மூச்சு, கீழ் மூச்சு வாங்க வைத்தது. அழுது, அழுது ஆவேசப் பட்ட பிள்ளை முடிவாகத் தூங்கிவிட்டது.

எல்லாவற்றையும் ஒரு பார்வையாளரைப் போலவே தாமரை பார்த்துக் கொண்டிருந்தாள்.

"வாங்க, மேல சாமி தரிசனம் செஞ்சிட்டு வந்திரலாம்" என தியாகராஜன் கூப்பிட்டார்.

அருணாசலமும், மாணிக்கமும் மட மட என, முன்னால் ஏறி விட்டார்கள். சீதை, நாச்சம்மை, விசாலாட்சி, சிவகாமி என, பெண்கள் சற்று பின்தங்கி ஏறிக் கொண்டிருந்தார்கள். பொதுவாக உலக வழக்கங்கள் பற்றியும், கோவில் திருவிழா பற்றியும், தொலைக்காட்சித் தொடர்கள் பற்றியுமே அவர்கள் பேச்சு இருந்தது.

பொதுவான விஷயங்களைப் பேசிக் கொண்டே வந்த தியாகராஜன் 'நீ சென்னைக்கே வந்து தங்கிடேம்மா" என்றார் மீண்டும்.

தாமரை மாமனாரைப் பார்த்தாள். நல்ல உயரம். அடர்த்தியான சிகை. அந்தத் திறமைக்கும், பதவிக்கும், செல்வாக்கிற்கும் கட்டியம் கூறும் கம்பீரமான குரல். காலையில் எழுந்து நடைப் பயிற்சி. அளவுச் சாப்பாடு. சைவம் தான். வறுத்தது, பொரித்தது கூடாது. தினமும் திருவாசகம் பாராயணம். பல்வேறு தர்மஸ்தாபனங்களின் தலைவர். திருஞானம் எப்படி வேறாகிப் போனான்? காலத்தின் முரணா?

"வேணாம் மாமா."

"ஏன்?"

"ஏற்கெனவே சொல்லிவிட்டேனே என்னை அடகு வைப்பதில் எனக்கு சம்மதமில்லைன்னுட்டு."

"நீ ஏன் அப்படி நினைக்கோணும்? மேல்கொண்டு படிக்கிறியா படி, வேலைக்குப் போறேன்னு சொல்லுறியா? ஏற்பாடு செஞ்சு தர்ரேன். உன் வெறுமையும், சூன்யமும் மாற்றப்படாத வரையில், அதுக்கு ஏதோ ஒரு விதத்தில் காரணமாயிட்ட என்னால் நிம்மதியா இருக்க முடியாதும்மா"

"நீங்க நிம்மதியா இருப்பதற்குத்தான் என்னை ஒங்களோட வந்து இருக்கச் சொல்றீங்களா?"

"அய்யோ ஆத்தா! படிச்ச புள்ளயா இருக்கியே, புரிஞ்சுக்குவன்னு கேட்டுப் புட்டேன் ஆத்தா. எங்க அப்பச்சி செஞ்ச வியாபாரத்தை நான் செய்யல. நா செஞ்சா மாதிரி என் புள்ளைங்க செய்யலை. வியாபாரமும் பெருத்துப் போயி, தனியா சிந்திக்கவே நேரம் இல்லாமப் போயிருச்சு. எனக்கு பல காரணம் காட்டி

# தொடர்கதை

உன்னைப் பத்தி நெனைக்காமலே இருப்பதா காட்டிற முடியும். பிள்ளையைப் பத்தித் தெரிஞ்சிருந்தும் என் வாழ்க்கையைப் பாழ் பண்ணிட்டீங்களேன்னு நீ கதறும் முகம்."

"மாமா! நான் அப்படியெல்லாம் கதறக் கூடியவ இல்லை" என்றாள் தாமரை சிரித்துக் கொண்டு.

தியாகராஜன் மேலும் அவளை வற்புறுத்த விரும்பவில்லை.

"வா! வா! சாமி தரிசனம் பண்ணப் போகலாம்" என்றார்.

கடவுள் என்றால் என்ன? பிரம்மாவா? பரம்பொருளா? மும்மூர்த்திகளா? ஆதி சக்தியா? சுயம்புவா? பஞ்சபூதமா? பிரபஞ்சமா? எது கடவுள்? இயற்கையா? எது தன்னால் தோன்றியது இல்லையோ அதை மனிதன் கடவுள் என்கிறானா? கோள்கள் கடவுளா? விதி கடவுளா? சூட்சுமக் கயிறு எது?

முருகன் சந்நிதியில் அவ்வளவாகக் கூட்டமில்லை. மூலவர் சண்முகநாதர் ஆறுமுகங்களும், பன்னிரு திரு முகங்களுடனும், அஞ்சேல் என அபய பாவத்துடன் நின்றான். மயில்வாகனன். முருகன். வலப்பக்கம் வள்ளியம்மை. இடப்பக்கம் தெய்வானை. தனித்தனி மயில் வாகனங்களில். எங்குமில்லாத் திருக்கோலம்.

எந்தாயும், எனக்கு அருள்
தந்தையும் நீ
சிந்தாகுலம் ஆனவை தீர்த்து
எனையாள்
கந்தா! கதிர்வேலவனே! உமையாள்
மைந்தா! குமரா! மறை நாயகனே!

அப்பச்சிதான் தமிழ் மூலம் எவ்வளவு பாடல்கள் சொல்லித் தந்திருக்கிறார். கந்தர் அநுபூதி; திருப்புகழ்; கந்தபுராணம்; காவடிச்சிந்து என முருகன் மேல்தான் மனமும், மெய்யும் உருகும் எத்தனை பாடல்கள். ஏன் ஒன்றுகூட முருகன் செவியில் விழாமல் போனது?

தீபாராதனை முடித்துக் கொண்டு அனைவரும் கீழே இறங்கினார்கள்.

"எங்க வூட்ல கை நனைக்கலாமில்ல?" என்றார் கீழிறங்கிய தியாகராஜனிடம் பழனியப்பன்.

"அது என்ன அப்படிக் கேட்டுப்புட்டீக. பேத்தி முத முடி இறக்கியிருக்கு பாப்பாவைப் பாருங்க. முடியைக் காணுமாம். தலையைத் தலையைத் தடவிப் பார்த்துக்கிட்டு வெக்கப்படுது. போடு கழுதய! விருந்து சாப்பிடாமப் போயிருவோமாக்கும்."

சைவ சமையலாகத்தான் சமைத்திருந்தார்கள். சாம்பார், இளங்குழம்பு, இரண்டு பொரியல், ஒரு கூட்டு, பாயசம், அவசர அவசரமாய் ஒரு கல்கண்டு வடை அப்பளம், ஊறுகாய். சம்பந்தி அசைவ உணவைத் தவிர்த்து விட்டது ஒரு காரணம். பிள்ளைக்கு முடி இறக்கிய விசேஷம். மற்றோர் காரணம்.

விருந்து சாப்பிட்டுவிட்டு வெற்றிலை போட்டுக் கொள்ளும்பொழுது தியா

## கப்சிப் சந்திப்பு!

சரியாக பத்து வருடங்களுக்கு பிறகு பத்திரிகையாளர்களைச் சந்தித்திருக்கிறார் இளையராஜா. எப்படியாவது பேட்டியெடுத்துவிடலாம் என்று பை நிறைய கேள்விகளோடு வந்தவர்களுக்கு பெருத்த ஏமாற்றம். "இந்தச் சந்திப்பு எனது உலக மெல்லிசைப் பயணம் தொடர்பானது. அது குறித்து மட்டும் இப்போதைக்குப் பேசுவோம், ப்ளீஸ்" என்று வேண்டுகோள் வைத்து எக்குத் தப்பான கேள்விகள் கேட்கத் தொடங்கியவர்களை தொடக்கத்திலேயே கத்தரித்துவிட்டார். மெல்லிசைக் கச்சேரிகள் நடத்துவதில் விருப்பமில்லாமல் இருந்த இளையராஜா, இப்போது மட்டும் எப்படி ஒப்புக் கொண்டார்.

"என்னை உயிருக்குயிராய் நேசிக்கும் ரசிகர்கள் உலகம் முழுவதும் இருக்கிறார்கள். அவர்களையெல்லாம் சந்திக்க வேண்டும் என்ற ஆவல் நீண்ட நாளாக உண்டு. தவிர, இந்த இசைப் பயணத்தில் கிடைக்கப் போகும் மொத்த நிதியையும் தமிழகத்தில் உள்ள பார்வையற்ற, பேச்சுத் திறன் இல்லாத, கருணை இல்லங்களுக்கு பகிர்ந்தளிக்க நிகழ்ச்சியை நடத்துகிறவர்கள் ஒப்புக் கொண்டிருக்கிறார்கள்.

கராஜன் மீண்டும் ஆரம்பித்தார்.

''ஏம்மா! உன் முடிவில் மாற்ற முண்டா?''

சிவகாமி பெயர்த்திக்கு எனக் கொண்டு வந்த தோடு, சங்கிலி, காப்பு, மோதிரம், தங்க அரைஞாண், அதில் கோக்க ஐம்படைத்தாலி என எல்லாவற்றையும் விசாலாட்சியிடம் காட்டிக் கொண்டிருந்தாள்.

அருணாசலம் தங்கை தியாகராஜனுக்குக் கூறப் போகும் பதிலை ஆவலுடன் எதிரபார்த்திருந்தான்.

''மாற்றமில்லை. நான் இங்கனயே இருக்கேன்'' என்றாள் அவள். அருணாசலத்துக்கு அவள் பதில் ரசிக்கவில்லை. சிதைக்கோ பொங்கிக் கொண்டு வந்தது.

''அவுகதான் அம்புட்டு ஆசையா பெத்த மகளைப் போல பார்த்துக்கிடறேன்னு கேக்குறாக. அப்பறம் என்ன வாம்?'' என்றாள் சிதை பொருமலோடு.

''இங்கன இருந்தா அப்படி இருக்க முடியாதுன்னா சொல்றீக?''

''யாரு அப்படிச் சொன்னது? வார்த்தைக்கு வார்த்தை குத்தம் கண்டு பிடிச்சிக்கிட்டிருந்தா, யாரு பேசுவாக ஒன்னோட?''

''நீங்க என்ன அவளை மக போல பார்த்துக்கிடறது. இங்கன அவ சந்தோஷமாத்தான் இருக்கான்னுல்ல சொல்லி இருக்கோணும்?'' என்றாள் தாமரை. தாமரையின் நேரடிக் கேள்வி சிதையை நிலைகுலைய வைத்தது. 'தராதரம் தெரியாத கழுதை' என வாய்க்குள் முனகிக் கொண்டாள்.

நிலைமை விபரீதமாவதற்கு முன்னால் ''உன் சந்தோஷம்தான் வேணும் தாமரை. நீ இங்கனயே இருக்கப் பிரியப்பட்டா இருந்துக்க. ஏற்கெனவே சொன்னது மாதிரிதான். எங்க வீட்டுக் கதவு உங்க ரெண்டு பேருக்கும் எப்பவும் திறந்தே கிடக்கும்'' என தியாகராஜன் சிவகாமியுடன் கிளம்பினார்.

இரண்டாவது சந்தர்ப்பமும் கை நழுவிப் போன உடன், அருணாசலம் கொதிக்க ஆரம்பித்தான். சிதையும் அவளுக்குத் தோன்றிய பரிமாணங்களையும், கோணங்களையும் சிருஷ்டித்து, தாமரையின் மாற்றங்களை அருணாசலத்துக்கு எடுத்துக் காட்டினாள். விசாலாட்சிக்கு ஏதோ இனம் தெரியாத ஒன்று தங்கள் வாழ்வை பாழ்படுத்தி வருவதாக பயம் ஏற்பட்டது. உமையாள் திருமணம் வேண்டாம் என பிடிவாதமாக மறுத்துவிட்டு, பிஹெச்டி பண்ண ஆரம்பித்தாள். பழனியப்பனின் சர்க்கரை அளவு கூடியதே தவிர குறையவில்லை. ''நான் எங்கனயாவது தண்டவாளத்தில் தலையைக் கொடுத்து உசிரைப் போக்கிக்கிறேன்'' என அருணாசலம் அலறுவதும், ''ஏண்டி எங்க நிம்மதியைக் குலைக்க என் வயித்தில வந்து பொறந்த'' என அவள் தாய் விசாலாட்சி ஓலமிடுவதும் வாடிக்கையானது. சிதையின் பிள்ளைகளுக்கு அயித்தை ஒரு ராட்சஸி என்ற பிம்பம் நிறுவப்பட்டது.

இந்தச் சூழலில்தான் தாமரை, தான் வேலைக்கு மனு போடப் போவதாகத் தெரிவித்தாள்.

(தொடரும்)




இரண்டு நல்ல விஷயங்கள் நடக்கப் போகின்றன'' என்ற இளையராஜாவின் உலக இசைப் பயணத்தை 'டிரீம் மேக்கர்ஸ் கவண்ட்ஸ்' என்ற துபாய் அமைப்பு ஏற்பாடு செய்திருக்கிறது.

''இதுவரை இசைக் கச்சேரிக்கு ராஜா மறுத்து வந்தது ஏன்?'' என்றபோது ''அது வெட்டி வேலை. ஒலி நாடாவில் இருப்பதை மேடையில் பாடுவதில் என்ன புதுமை இருக்கிறது?'' என்று கேட்க... பத்திரிகையாளர்கள் கப்சிப்!

- ஸ்ரீ

# கல்கி

# தீபாவளி மலர் 2004

## அறுபதாண்டு
## பாரம்பர்யத்துடன் அண்மைக்கால பதிவுகள்
## இணையும் அரிய தயாரிப்பு



படம் : எம்.அமிர்தம்

மெய்சிலிர்ப்பூட்டும் தெய்வீக
ஓவியத் தொகுப்புகள் :
எஸ்.ராஜம், தனுஸு, வேதா

காணக் கிடைக்காத
புகைப்படப் பதிவுகள் :
ஷண்முகசுந்தரம், யோகா,
எம்.அமிர்தம், ஸ்ரீஹரி,
தேவமணி ரஃபேல்

தர முத்திரை தாங்கி வரும்
தங்க மின்னல் கவிதைகள் :
யுகபாரதி, தமிழன்பன்,
பொன்மணி வைரமுத்து,
மதிவண்ணன், சவகர்லால்,
திருப்பூர் கிருஷ்ணன்,
பூவை அமுதன்,
சௌந்தரா கைலாசம்,
கொ.மா.கோதண்டம்

விலை ரூ.80/- கூரியரில் பெற ரூ.30/- சேர்த்து அனுப்பவும்.
உள்ளூர் ஏஜெண்டிடமும் பதிவுசெய்து கொள்ளலாம்

மானேஜர், கல்கி, ஈக்காடுதாங்கல், சென்னை-600 032



கல்கி வழங்கும்



சென்னை ஸ்கேன்
கல்கி ஜன்னலில் ஒரு மின்னல்!
(சென்னை பெருநகருக்கு மட்டும்)





8 பக்கங்கள் 31, அக்டோபர் 2004 இதழுடன் இலவச இணைப்பு




# ஒரு பூனையின் புலிப் பாய்ச்சல்!

விஷாக்

**இ**ன்று பாரதி மட்டும் உயிரோடிருந்தால், விஷாக்கைக் கண்டு எல்லையில்லா இன்புற்றிருப்பார். வீரம், தீரம் கொண்ட அரிதான பெண்மணிகளில் ஒருவரான இவர், என்.சி.சி. சார்பாக இந்தியாவிலேயே சிறந்த வீராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு லண்டன் வரை சென்று வந்து தமிழ்நாட்டுக்குப் பெருமை தேடித் தந்திருக்கிறார். பார்க்க பூனை மாதிரி இருப்பவரின் புலிப் பாய்ச்சலைப் பாருங்களேன்...

**ஜோர் லண்டன்:** ம்... இந்த பாய் கட்டிங் ரொம்ப வசதியா இருக்கு. நான் இதுவரைக்கும் கூந்தல் வளர்த்து சடை பின்னல்லாம் போட்டதேயில்லை. அதே மாதிரி ஒரு பொட்டு நகை கூட போட்டுக்க மாட்டேன். ஏனோ பிடிக்கிறதேயில்லை.

**தைரியம்:** பயம்கிறதை என் வாழ்க்கையில அனுபவிச்சதேயில்லை. ராத்திரி 12 மணிக்கு ரோட்ல நடக்கச் சொன்னாலும் அதுக்குத் தயார்தான். லண்டன் போன போது தைரியமா நானே பைலட் உதவியோடு க்ளைடர் ஓட்டினேன். கராத்தேயில ப்ளாக் பெல்ட் வாங்கியிருக்கேன். யாராவது [illegible] செஞ்சா, தைரியமா எதிர்த்து நிற்பேன்.

**பெண்கள்:** பாவம், இன்றைக்கும் பெண்களுக்குக் கட்டுப்பாடுகள் இருக்கு. வீட்டுக்குள்ள பெண்களை அடைச்சு வைக்கறதால, எந்தப் பிரயோஜனமும் இல்லை. தைரியமா வெளியில வாங்க. வாழ்க்கையோட பக்கங்களை தெரிஞ்சுக்கலாம்.

**அரசியல்வாதி:** நாடு முன்னேறாம இருக்கறதுக்கு இவங்கதான் காரணம். காவிரியோ, காஷ்மீரோ அரசியல்வாதிகளின் சுயநலத்தாலதான் தீர்க்கப்படாம இருக்கு. கோர்ட்ல இருக்கிற பல பிரச்னைகளுக்கும் முட்டுக்கட்டை போடறது அரசியல்வாதிகள்தான். இந்த தலைமுறைக்கு எடுத்துக் காட்டா எந்த அரசியல்வாதியும் கிடையாது.

**ஆச்சர்யம்:** லண்டன் ட்ரிப்புல தான் ஷூட்டிங் போட்டியில கலந்து கொண்டு ஜெயிச்சேன். ஒரு பெண் ஜெயிச்சது அவங்களுக்கே ஆச்சர்யம். விக்ரம் ரதோர் மாதிரி வருங்காலத்துல ராணுவத்துல பணிபுரிந்த ஒலிம்பிக்லேயும் கலந்துக்க திட்டமிருக்கு.

**தமிழ்:** பத்திரிகைகளில் என் பேட்டியைப் பார்த்த பிறகு நிறைய லெட்டர்ஸ் வருது. இவங்களுக்கு பதில் போடறதுக்காகவே தமிழ் கத்துக்கிட்டிருக்கேன்.

**கனவு:** எத்திராஜில மைக்ரோபயாலஜி பண்றேன். ஆனாலும் விமானப் படையில சேர்ந்து பைலட் ஆகப்போறேன். அப்புறம் ராணுவத்துல சேர்ந்து போர்க்களத்துல எதிரிகளோடு போராடவும் ஆசை. ஆனா இன்னைக்கு வரைக்கும் பெண்களுக்கு போரிட வாய்ப்புகள் அளிக்கப்படலை.

**ஆண்கள்:** அடுத்தவர்களுக்கு உதவுவதும் நட்பு பாராட்டுவதும் ஆண்களுக்கே உரிய விசேஷ குணங்கள். பெண்களுடைய நட்பில் எப்பவும் ஈகோ இருக்கும். இந்த விஷயத்துல ஆண்கள் ரொம்ப சமர்த்து.

**சினிமா:** என்.சி.சி. வேலைகளில் மூழ்குவதால் சினிமாவில் கவனம் செலுத்துவதே கிடையாது. எப்பவோ பார்த்த சேதுவும் அதுல விக்ரமோட நடிப்பும் ரொம்பப் பிடிச்சது. அவ்வளவுதான்.

**திருமணம்:** ஃபாரினர்ஸ் போலவே எனக்கும் ஆச்சர்யமா இருக்கு. எப்படி எந்த அறிமுகமும் இல்லாத ஒரு ஆணை பெண்கள் திருமணம் செய்து கொள்றாங்க? பெண் பார்க்கும் சமயத்தில் மாப்பிள்ளை வேண்டிபேட் எப்படி வேண்டுமானாலும் நடிக்கலாம். அதனால் குறைந்தது ஆறு மாதமாவது குறிப்பிட்ட ஆணோடு பழகிவிட்டுத்தான் திருமணம் நிச்சயிக்கவே சொல்வேன். அப்பொழுதுதான் சரியான முடிவை எடுக்க முடியும்.

ச.ந.கண்ணன்

ராஜன்




முகில்

## எழுத்தாணி

# அணிந்துரை வாங்கலியோ அணிந்துரை!

இப்பொழுதெல்லாம் ஒரு எழுத்தாளர் தமது புத்தகத்தை எழுதி முடிக்கும் முன்பே அதற்கான அணிந்துரை தயாராகி விடுகிறது. சில சமயம் அச்சாகியும் வந்து விடுகிறது.

அணிந்துரை எழுதுவது ஒரு கலை. சிலர் ஷேக்ஸ்பியர் புத்தகங்களுக்குக் கூட விலாவாரியாக அணிந்துரை எழுதுவார்கள். "இவர் ஒரு ஆங்கில வேழம். புத்தகப் பித்தர். நாடகத் தாத்தா. கருத்துப் பெட்டகம்" இன்னும் என்னென்னவோ. அதோடு விடுவார்களா? "நான் தான் ஷேக்ஸ்பியருக்கு அணிந்துரை எழுதி கொடுத்தேன் தெரியுமா?" என்பார்கள். இவர்கள் சொல்வதை வைத்துப் பார்த்தால் ஷேக்ஸ்பியர் கப்பல் ஏறி அவரின் வீட்டிற்கு வந்து "அன்புடையீர், எனக்கு நீங்கள் அணிந்துரை தந்தால்தான் நான் இங்கிலாந்திற்குப் போவேன்" என்று அடம் பிடித்தாரோ என்ற சந்தேகம் நமக்கு வரும்.



ஒரு புத்தகத்திற்கு இவ்வளவு பக்கங்கள் தான் அணிந்துரை எழுதலாம் என்ற உச்ச வரம்பு இல்லை என்பதால், 40 பக்கங்கள் வரை கூட பலர் உரை எழுதுகிறார்கள். ஒரு வேளை இந்தப் புத்தகத்தில் உள்ள கருத்துகள் அவ்வளவு ஆழத்தில் புதைந்து போயிருக்கும் போலும். அதனால் தான் இவ்வளவு சிரமப்பட்டு தோண்டித் துருவி உரை எழுதியிருக்கிறார் என்றால் அப்படியும் இருக்காது. நாற்பது பக்க வாழ்த்துரையில் சம்பந்தப்பட்ட புத்தகத்தைப் பற்றிய ஒற்றை வரி கூட இருக்காது.

மாறாக, அந்த அணிந்துரைஞர் எங்கே படித்தார்கள், எந்தெந்த சங்கங்களில் தம்மை இணைத்துக் கொண்டார், எப்படி இலக்கியக் கடலுக்குள் தலை குப்புற குதித்தார் போன்ற அரிய விபரங்கள், தேதி வாரியாக துல்லியமாக பதிவாகியிருக்கும்.

ஒரு வேளை தமக்கு இட ஒதுக்கீடு செய்த புத்தக ஆசிரியரைப் பற்றி அணிந்துரைஞர் தப்பித்தவறி எழுதினாலும் "சிந்திக்கத் தூண்டும் கருத்துகள்" "ஆசிரியருக்கு தமிழில் இது ஒரு புதிய முயற்சி" என்று பட்டும் படாமலும் சொல்லி ஒதுங்கிக் கொள்வார். அப்படியானால் இதற்கு முன்பு வரை நூலாசிரியர் வேறு மொழியில் முயற்சித்துக் கொண்டிருந்தாரா என்ற சந்தேகம் வரும். இப்படியும் கூட சிலர் எழுதுவார்கள். "இந்நூலாசிரியர் சிறு வயதில் எனது பக்கத்தில் தான் எழுதுவார். அப்பொழுதே எனக்குத் தெரியும், இவர் ஒரு பெரிய எழுத்தாளராக வருவார் என்று" "அதை ஏன் ஐயா அப்பொழுதே சொல்லவில்லை?" என்று கேட்கக் கூடாது.

ஆங்கிலத்தில் இதை blurbing என்று சொல்வார்கள். மேலை நாடுகளில் இது மிகவும் பிரசித்தம். எப்படியென்றால், நியூ ஜெர்ஸிக்காரர்களுக்கு கலிபோர்னியாக்காரர்கள் பொதுவாக நல்ல அணிந்துரைகள் எழுதிக் கொடுப்பார்கள். பதிலுக்கு கலிபோர்னியாக்காரர்கள் நியூ ஜெர்ஸிகாரர்களுக்கு அதைவிடச் சிறந்த அணிந்துரைகளை வழங்குவார்கள்.

கூர்ந்து கவனித்தால், ஒரு உண்மை புரியும். ஒரு அணிந்துரைஞர் நூலாசிரியராக மாறும் பொழுது, அவர் இதற்கு முன்பு அணிந்துரை வழங்கிய நூலாசிரியர் இச்சமயம் அணிந்துரைஞராக மாறியிருப்பார்.

✍ மருதன்



## ஹாய் சென்னை..!

போக்கஸ் பிரச்னைகள், காலேஜ் புரோகிராம்ஸ், டேஸ்ட் காம்ஸ், உச்சாணி, ஸ்பெஷல் விழாக்கள் என சென்னை ஸ்கேனுக்கு பொருத்தமான விஷயங்களை எங்க போஸ்ட் பாக்ஸ், இன்பாக்ஸ், ஃபோன் ரிசீவர் என எதுக்கும் அனுப்பலாம். வந்தா வழிபோடு எங்க டிரும் ரெடி. உங்கள் கற்பனை காதல் கடிதங்களை 'லவ்-டப் லவ் லெட்டர்' என்று தலைப்பிட்டு அனுப்புங்கள்.

முகவரி:
சென்னை ஸ்கேன்,
47NP, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல்,
சென்னை - 600 032.
போன் : 22346622, 23, 24
E-mail : chennaiscan@kalkiweekly.com

## சிக்கு புக்கு சிக்கல்கள்!

திருவள்ளூர், அரக்கோணம் போன்ற இடங்களிலிருந்து ஜோராக் கிளம்பி வரும் ரயில் வண்டிகள், பேஸின் பிரிட்ஜ் வந்ததும் ஏதோ சோகமான ஞாபகம் வந்தது போல முடங்கிப் போய் உட்கார்ந்து விடுகின்றன. பயணிகள் சிக்னல் விழுந்து விட்டதா என்று ஒட்டகச் சிவிங்கிகள் போல தலைகளை நீட்டி நீட்டிப் பார்த்துக் கொண்டே இருக்க வேண்டியதுதான். பின்னர் ஒருவழியாக சிக்னல் கிடைக்க, லோக்கல் வண்டிகள் ஊர்ந்து ஊர்ந்து சென்ட்ரலை அடைவதற்குள் பயணிகளின் கனிவான கவனம் ஏகத்துக்கும் சிதறிப் போய் இருக்கும்.



சென்ற வாரம் மறுபடியும் ஃப்ளாஷ்பேக் நோய் வந்து சில வண்டிகள் பேஸின் பிரிட்ஜில் உட்கார்ந்து விட, பொறுத்துப் பொறுத்துப் பார்த்த சிலர், 'இது வேலைக்கு ஆவாது தலீவா' என்று வண்டியிலிருந்து குதித்து, விறுவிறுவென தண்டவாளத்தில் அமர்ந்து கொண்டனர். நாலு பேர் கும்பல் நாற்பது பேராக வளர்ந்து, நானூறாக முடிவடைந்தது. அதிகாரிகளின் சமரசத்திற்குப் பின் பயணிகள் மறியலைக் கைவிட்டார்கள்.

✍ கங்கா



## டாக்கீஸ் டாக்

கலாசாரத்திற்கு எதிரான கதை கொண்ட '7G ரெயின்போ காலனி' தறிகெட்டு ஓடிக்கொண்டிருக்கிறது. தேவி, சங்கம், உதயம், அகஸ்தியா திரையரங்குகள் இளைஞர்களின் படையெடுப்பில் திமிறிக் கொண்டிருக்கிறது. குறிப்பாக படம் விடும்பொழுது இந்த திரையரங்குகளின் முன்பு பலத்த ட்ராஃபிக் ஜாம் ஏற்படுகிறதாம். ஆனாலும் தீபாவளிக்கு ஒரு மாதம் இருக்கும்பொழுது எதற்காக இரண்டும்கெட்டானாக 7-G ரிலீஸாக வேண்டும் என்கிற கூக்குரல் அனைத்துப் பக்கங்களிலும் கேட்கின்றன.

பப்பி
ஷிவ்

## கிராஃபிக்ஸ் புத்தர்!



பெண்டாமீடியா நிறுவனம் சுஜாதா திரைக்கதையில், பரத்வாஜ் இசையில், 6.5 மில்லியன் டாலர் செலவில் 'தி லெஜண்ட் ஆப் புத்தா' என்ற இந்தியாவின் முதல் 2-D அனிமேஷன் திரைப்படத்தைத் தயாரித்துள்ளது. (ஆசைகளில்லா புத்தர் படத்திற்கு இத்தனை செலவா!) கதையில் கற்பனையும் கலந்துள்ளது என சுஜாதா சொல்லியது திரையில் அப்பட்டமாகத் தெரிகிறது காட்சிகளில். புத்தர் யசோதராவை திருமணம் செய்ய ஹீரோயிஸம் காட்டும் காட்சிகள், போதி மரத்தடியில் புத்தர் தியானத்தில் இருக்கையில், அனகோண்டா மாதிரி ஒரு பாம்பு ஒன்று அவருக்கு மழையில் குடை பிடிப்பது என 'மசாலா' காட்சிகளும் படத்தில் உள்ளன. ஹீரோ புத்தரை சத்யம் மற்றும் மாயாஜாலுக்குச் சென்று ரசித்து விட்டு வரலாம்.

முகில்

# ரஜினி சுழற்றியடித்த இயக்குனர்கள்!









உலகிலேயே ஒரு படம் பாக்ஸ் ஆபீஸில் முதலிடம் பிடித்து 'ஃப்ளாப்' என்கிற பட்டத்தையும் பெற்றுக் கொண்டது 'பாபா'வாகத்தானிருக்கும். "பாபாவின் வெற்றிக்குப் பிறகு நான் மீண்டும் நடிக்க மாட்டேன்" என்று பேச்சுவாக்கில் ரஜினி அன்று சொன்னது, பாபாவின் ஃப்ளாப் முத்திரைக்கு சாதகமாகி இன்று 'சந்திரமுகி' பிறந்துவிட்டது. சரி, பாபா முதல் சந்திரமுகி வரை ரஜினிக்கும் இயக்குனர்களுக்கும் இடையே நடந்த சம்பவங்களை மீண்டும் ஒளிரிப் பார்ப்போமா...

**தேஜா:** ரஜினி படங்களில் திறமையானவர்களுக்கு, குறிப்பாக வெற்றிப் படங்களில் பங்களிப்பு அளித்தவர்களுக்கே இடமுண்டு. இவ்வரிசையில் தமிழ்நாட்டிலிருந்து சென்று ஆந்திராவை கலக்கிக் கொண்டிருந்த இயக்குனர் தேஜா, ரஜினியின் பார்வையில் பட, அடுத்துப் போதுமளவிற்கு இருவரும் டிஸ்கஷன் செய்தனர். அரசியல் + காவிரிப் பிரச்னையை வைத்து தேஜா உருவாக்கிய கதை, ஏனோ இறுதிவரை சம்மதம் பெறவேயில்லை. வெறுத்துப் போய் ஹைதராபாத்துக்கு ஃப்ளைட் ஏறும்பொழுது "ரஜினிக்கு நிறைய குழப்பம் உண்டு. இனி சினிமாவில் நடிப்பது கடினம்" என்று சொல்லிவிட்டுப் போனார் தேஜா!

**எஸ்.ஜே.சூர்யா:** "10 வருடத்திற்கு முன் வந்திருந்தால் இந்தக் கதையை செய்திருப்பேன்" என்று ரஜினியை ஏங்க வைத்தது எஸ்.ஜே.சூர்யா கொண்டு சென்ற '20-40-60' கதை. சுவாரஸ்யமான திரைக்கதையால் ரசிகர்களைக் கட்டிப் போடும் திறமையுள்ள சூர்யா, பிறகு தாமே ஹீரோ வேஷம் கட்டிவிட்டதால் இனி, தான் சூப்பர் ஸ்டார் ஆவதற்குதான் பார்ப்பாரே தவிர, மீண்டும் ரஜினியைத் தேடிச் செல்வாரா என்பது சந்தேகமே.

**சுரேஷ்கிருஷ்ணா:** பாட்ஷா வெளிவந்து பத்து வருடங்களாகியும் அந்த பாதிப்பிலிருந்து இன்னும் மீளாத இயக்குனர், இன்னொரு பாட்ஷா தருவார் என்று உருவான பாபா எதிர்மறையாகிவிட, மீண்டும் ரஜினி - சுரேஷ்கிருஷ்ணா கூட்டணி உருவாவதற்கான வானிலை தெரிந்தாலும், வழக்கம்போல் பொய்த்து விட்டது.

**ஹரி & தரணி:** 'சாமி' வெற்றி விழாவில் ரஜினி பேசியது ஊரறிந்தது. தேஜாவிற்குப் பிறகு நீண்ட நாள் இவர்தான் 'ஐயா' படக் கதையோடு கேளம்பாக்கம் பண்ணையில் டிஸ்கஷன் நடத்தினார். விஜயகுமார் ரஜினியின் நெருங்கிய நண்பர் என்பதால், அவரது மருமகனான ஹரியின் ரஜினி படம் உறுதியாகியிருந்த சூழ்நிலையில், வழக்கம்போல் இம்முறையும் ரஜினிக்கு ஸ்கிரிப்டில் திருப்தியில்லாததால்... ஹரியின் நேரம்தான் வீணாகிப் போனது.

ரஜினியின் மகள்கள் தரணியின் ஸ்கிரீன்ப்ளே திறமையை ரெகமண்ட் செய்ய, அவரும் அழைக்கப்பட்டார். தரணியின் தில், தூள், கில்லி படங்களில் ஒரு வேளை ரஜினி நடித்திருந்தால், படங்கள் ஒருவருடம் கூட ஓடியிருக்கும் என்று எண்ணுமளவிற்கு ஒரே அலைவரிசையில் இருவரும் இருந்தாலும், ஏனோ பெரிய அளவில் அதிசயங்கள் நடைபெறவில்லை. ஆனாலும் இன்றைய தேதியில் ரஜினியின் மசாலாத் தளங்களுக்கு தரணிதான் சரியான சாய்ஸ் என்பது பலரது கணிப்பு.

**கே.எஸ். ரவிக்குமார்:** ரஜினியின் டிக்ஷனரியில் டைரக்டர் என்கிற வார்த்தைக்கு அர்த்தத்தைத் தேடினால் முதலிடத்தில் இவரது பெயர் இருக்கும். 'நாட்டாமை' வெற்றிக்குப் பிறகு ரஜினி பார்வையில் பட்டவர். அதன் பின்பு முத்து, படையப்பா என சில்வர் ஜூப்ளிகள் கொடுத்து, தமது அந்தஸ்தையும் உயர்த்திக் கொண்டார். காலையில் எழுவது முதல் இரவு கண் மூடும் வரை, ரஜினியின் அடுத்த படத்திற்காக ஒரு சிறு துரும்பையாவது நகர்த்தியிருப்பார்.



ஆனால் ரஜினியின் வாய்ஸ் போலவே இயக்குனர்கள் சாய்ஸும் அதிரடியாகவே இருக்கும். புதுமுகங்கள் கூட யோசிக்கும் அளவிற்கு, தமிழ் சினிமா பல வருடங்களாக ஒதுக்கி வைத்திருந்த பி.வாசுவை தமது 'சந்திரமுகி'யின் கேப்டனாக்கியிருக்கிறார் ரஜினி. சமீபகாலமாக ஓவர்டோஸ் சென்டிமென்ட் மற்றும் சர்வசாதாரணமான திரைக் கதைகளால் தமிழ் ரசிகர்களை நோகடித்திருந்தாலும், இது ரஜினி படம் என்கிற ஓயாத உள்ளுணர்வு பி.வாசுவை மேம்படுத்தியிருக்கும் என்று நம்பலாம்.

இத்தனை இயக்குனர்களையும் தாண்டி ரசிகர்கள் எதிர்பார்க்கும் சுவாரஸ்ய படத்தைத் தருவாரா பி.வாசு?

ச.ந.கண்ணன்



# இவ்விடம் இலவசக் கல்வி!

"அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல், ஆலயம் பதினாயிரம் நாட்டல், அன்ன யாவினும் புண்ணியம் கோடி - ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல்"

மேட்டுக்குடி மக்களுக்கு மட்டுமே என பட்டா போடாத குறையாக இன்றும் பெரும்பாலான இடங்களில் இருக்கின்ற கல்வியினை, பாரம் சுமக்கின்ற, நாற்று நடுகின்ற, ரிக்ஷா இழுக்கின்ற, செருப்பு தைக்கின்ற, ரோடு போடுகின்ற, பட்டினியால் வதங்குகின்ற, நம்மூர் குப்பன் - சுப்பன்களின் வாரிசுகளுக்கும் கொண்டு செல்ல இருக்கும் ஒரே மார்க்கம், இலவசக் கல்வி மாத்திரமே. இதைத்தானே அரசாங்கமும் செய்து வருகிறது என்கிறீர்களா? உண்மைதான். ஆனால் அது அவர்களை செம்மைப்படுத்துகின்றனவா - உபயோகமாக இருக்கின்றனவா என்பதுதான் மில்லியன் டாலர் கேள்வி. மேற்கண்டவற்றை சாத்தியப்படுத்த வேண்டுமானால், பள்ளி முடிந்து வெளிவரும் மாணவ - மாணவிகளுக்கு சிறப்புப் பாட வகுப்புகளை உண்மையான பொறுப்புணர்வுடன், காசுக்கு மயங்காமல் நடத்த வேண்டும். இதற்கெல்லாம் தற்போது யாருக்கும் மனதும் இல்லை - நேரமும் இல்லை என்று சொன்னால், உங்களுக்கு ஒரு தம்பதியை கட்டாயம் அறிமுகப்படுத்தியே ஆக வேண்டும். அவர்கள் சாவித்திரி கண்ணன் - கமலம் தம்பதியினர்தான்.

பள்ளி நேரம் போக எஞ்சியிருக்கும் நேரத்தில், தீவிரவாத - சமூகவிரோத செயல்களில் ஈடுபட எத்தனிப்பவர்களைத் திருத்தி - நல்வழிப்படுத்துவதற்காக 'பாரதி கல்வி அறக்கட்டளை'யை உருவாக்கியுள்ளனர். இதன்மூலம் பாரதி மாலை நேர பாடசாலையை ஏற்படுத்தி, சேரிகளிலும், குப்பங்களிலும் இருக்கும் மாணவ - மாணவிகளுக்கு கட்டணமற்ற கல்வியை அளித்து வருகின்றனர். முதலில் இத்திட்டத்தை பொது மக்களிடம் எடுத்து செல்லவே பகீரதப் பிரயத்தனம் செய்ய வேண்டியிருந்ததாம். பின்னர் ஒரு வழியாக சம்மதிக்க வைத்து, இன்றைக்கு ஒன்றாம் வகுப்பு முதல் பன்னிரண்டாம் வகுப்பு வரை இருவேறு இடங்களில் மொத்தமாக இருநூறுக்கும் மேற்பட்டோர் இந்த கட்டணமற்ற கல்விச் சாலைக்கு வந்து பயனுறுகின்றனர்.

மாணவ - மாணவியர்க்கு பாடம் எடுப்பதற்காக துவக்கத்தில் தன்னார்வத் தொண்டர்கள் வந்தாலும், அவர்களது நிலைமையும் கருத்தில் கொண்டு ஒரு சிலரை மிகக் குறைந்த சம்பளத்தில் ஆசிரியர்களாக நியமித்துள்ளனர். இதற்கான நிதியும், தற்போது பாடசாலை நடத்திவரும் இடத்திற்கான வாடகையும், இதுவரை இவர்களுடைய உற்ற நண்பர்களாலும், குடும்பத்தினராலும், உறவினர்களாலும் மட்டுமே தரப்பட்டு வருகிறது. கல்வியோடு நிறுத்திவிடாமல் அவ்வப்பொழுது விளையாட்டு, கைத்தொழில், பேச்சுப்போட்டி, நடனப்போட்டி, கணிப்பொறி பயிற்சி என்று மாணவ - மாணவியரை பல் துறைகளிலும் செம்மைப்படுத்த தங்களுடைய நேரத்தையும், உழைப்பையும், சிந்தனையையும் செலவிட்டு வரும் இவர்களுக்கு இத்தகைய உன்னதமான உணர்ச்சிபூர்வமான சிந்தனையை உருவாக்கித் தந்த வைர வரிகளே முன்னுரையில் இருப்பவை.

இந்தத் தன்னலமற்ற பணிக்கு ஊக்கமளிக்க வேண்டியது ஒவ்வொருவரின் கடமையாகும் என்பதில் யாருக்கும் மாற்றுக் கருத்து இருக்காது என நம்புகிறோம். இதற்கு பதிலளிக்கும் விதமாக சென்னை திருவான்மியூர் காமராஜ் நகரில் இருக்கும் இந்த மாலை நேர பாடசாலைக்கு, ஒருமுறை விஜயம் செய்யுங்கள். அடுத்து நீங்கள் செய்ய வேண்டியதை அங்கு படித்துக் கொண்டிருக்கும் பிஞ்சுகளின் முகங்கள் சொல்லும்!

✍ இரா. முத்துக்குமார்

# பொலிட் பீரோ



முக்கிய தமிழ் இயக்கமொன்றின் சார்பில் 'தமிழகம் எழுகிறது' என்ற அடைமொழியுடன் ஒரு மெகா பேரணி நடத்தப்பட இருக்கிறது. சென்னையிலிருந்து துவங்கி தமிழகம் முழுமைக்கும் செல்ல உள்ள இப்பேரணியின்போது ஓய்விலிருக்கும் ஒரு சில தமிழ்த் தலைவர்கள் இக்கட்சியில் சங்கமிக்க உள்ளார்களாம். இது எந்த வகையில் இக்கட்சியின் எழுச்சிக்கு உதவப் போகிறது என்பதுதான் அக்கட்சியினராலேயே எழுப்பப்படும் சந்தேகம்...

சென்னையில் இருக்கக்கூடிய ஒரு சில தமிழ் அமைப்புகள் திமுகவின் பினாமி அமைப்புகள் என்றும், அவற்றின் சார்பாகவே தி.மு.க. தலைவருக்கு பாராட்டு விழாக்கள் நடத்தப்படுகின்றன என்றும் எதிர்முகாமிலிருந்து கேலிக்குரல்கள் எழுப்பப்பட்டனவாம். இதைக் கண்டு கொஞ்சம் லேட்டாக வெகுண்டெழுந்த சம்பந்தப்பட்ட அமைப்புகள், மான நஷ்ட வழக்குகளைத் தொடர திட்டமிட்டுள்ளனவாம்.

தானாகவே முன் வந்து உதவி செய்யும் வகை, கட்சிப் பேரணிக்கு பயன்படுத்திய சென்னையை சேர்ந்த மா.செ.வுக்கு மேலிடத்திலிருந்து முறையான 'டோஸ்' தரப்பட்டதாகவும், இதனால் மிரண்டு கடுப்பாகிப்போன அந்த மா.செ. இதற்குக் காரணமான தனது கைத்தடிகளை ஆத்திரம் தீர அர்ச்சித்துவிட, இப்போது இதுவும் மேலிடத்துக்கு புகாராக அனுப்பப்பட்டுள்ளதாம்.

கடந்தவாரம் கத்திப்பாராவில் உள்ள ஒரு நட்சத்திர ஓட்டலில் நடைபெற்ற மாநாட்டுக்கு அம்மா வந்தபோது, அவரை வரவேற்க எந்த கலரில் பேனர் வைப்பது என்பதில் பெரிய குழப்பமே ஏற்பட்டுவிட்டதாம். பின்னர் ஒரு வழியாக பச்சை - நீலம் என இரண்டு கலரிலும் பேனர் வைத்து வரவேற்று, அம்மாவை குஷிப்படுத்தி அனுப்பினார்களாம் அ... சமயோசிதப் புலிகள்.

சென்னையில் உள்ள முக்கியச் சுவர்களில் எழுதப்பட்டிருந்த கட்சி விளம்பரங்கள் அழிக்கப்பட்டு, அந்த இடங்களில் 'தி.மு.க. சாதனை' என எழுதி ரிசர்வ் செய்யப்பட்டுள்ளது. தி.மு.க.வின் இந்த திடீர் மூவ் எதற்கான முன்திட்டமாக இருக்கும் என்று சந்தேகத்துடன் விவாதித்து வந்தார்களாம் ரத்தங்கள். இறுதியாக ரத்தங்களும் சுவர்களை ரிசர்வ் செய்ய படு சுறுசுறுப்பாக களமிறங்கியுள்ளார்களாம்.

✍ கலை





# ஐம்பூதங்களும் நானே!

அழகிப் போட்டிகளில் ஜெயிப்பவர்களுக்கான தலைவிதி நடுவர்கள் கேட்கும் கேள்விகளுக்கான பதிலில்தான் இருக்கிறது.

சென்ற வாரம் நடந்த மிஸ். சென்னை டாப் மாடல் போட்டியில் "...ஞ்ச பூதங்களில் எதை உங்களுக்கு தெரிவு செய்வீர்கள்?" என்று கேட்டு வைக்க, விவரமான ரித்தி "நீர், நிலம், காற்று, வானம், நெருப்பு என ஐந்தும் என் குணங்களுக்குப் பொருந்தும்" என உஷாராக பதிலளிக்க, போட்டி நடந்த மாயாஜாலில் குழுமியிருந்த ஆயிரக்கணக்கான ரசிகர்கள் மத்தியில் மிஸ்.சென்னை டாப் மாடலாகத் தேர்வு செய்யப்பட்டார் ரித்தி.

எஸ்.ஜே.சூர்யா, ஜெய் ஆகாஷ், போன்ற திரை நட்சத்திரங்களோடு இதன் சென்ற போட்டிகளில் ஜெயித்து நேரடியாக கோலிவுட்டில் நுழைந்த சுபா புஞ்சா, அபர்ணா இருவரும் நிகழ்ச்சிக்கு கூடுதல் வண்ணம் அளித்தனர்.

"ஓ.கே. கோடம்பாக்கத்துக்கு இன்னொரு ஹீரோயின் ரெடியா?" என்றால் அலறுகிறார் ரித்தி. "சார், நான் பி.ஈ. படிச்சுட்டு இப்போ சாப்ட்வேர் கம்பெனியில் மார்க்கெட்டிங் எக்ஸிகியூடிவா வேலை பார்த்திட்டிருக்கிறேன். இந்த தொழிலில் மேலே மேலே செல்ல ஆசையே தவிர சினிமாவுல நடிக்கிறதுல கொஞ்சம் கூட இஷ்டமேயில்லை" என்கிறவருக்கு மாடலிங் கூட ஹாபி தானாம். பூர்வீகம் குஜராத் என்றாலும், தமிழ் சரளமாய் வருகிறது. "...எல்லாம் மார்க்கெட்டிங் புண்ணியம்" என தமிழிலேயே சிரிக்கிறார் ரித்தி.

✍ செந்தில்

ஷோ கேஸ்




தெரிந்தவர்கள் எல்லோரிடமும் கேட்டு விட்டேன். யாருக்கும் சரியாகத் தெரியவில்லை. இண்டர்நெட் என்னென்னவோ சொல்கிறது. ஒன்றும் புரியவில்லை. கிரீட்டிங் கார்ட் ரொம்பவே செயற்கையாய் நிறைய அம்புகள், நிறைய இதயங்கள் எல்லாம் போட்டு... எனக்கே பிடிக்கவில்லை. உனக்கு எங்கே பிடிக்கப் போகிறது.

நான் உன்னைக் காதலிப்பது உனக்கு நன்றாகத் தெரியும் என்று எனக்குத் தெரியும். ஆனால் நீ என்னைக் காதலிப்பது உனக்கு மட்டும்தான் தெரியும். எனக்கும் சொல்லிவிடேன்.

தெரியும். நீ என்ன சொல்வாய் என்று தெரியும். நமது நீண்ட கால நட்பு காதலில் தான் முடிவடைய வேண்டுமோ என்று கேட்கிறாய். மிகச் சரியான கேள்வி. நமது காதல் நட்பில் முடிவடைய வேண்டியதில்லை. நட்பில் தொடங்கலாம் இல்லையா?

இதோ நானே முதலில் தொடங்கி விட்டேன், நீ சம்மதிப்பாய் என்ற நம்பிக்கையுடன்.

சம்மதித்து விடு...

அன்புடன்,
**கார்த்திக்,**
அண்ணா நகர்.



# நோபல் நாயகனும் மந்திர விதைகளும்!

நுங்கம்பாக்கம் லாண்ட்மார்க்கிற்கு சென்ற வாரம் வந்திருந்தார் வி.எஸ். நைபால். வாசகர்கள் கூட்டம் திரண்டிருந்தது. "இலக்கியம், புத்தகம் இவை பற்றி மட்டும் கேள்விகள் இருக்கட்டுமே, ப்ளீஸ்" என்று லாண்ட்மார்க்காரர்கள் கேட்டுக் கொண்டாலும், கிரிக்கெட், சினிமா, வரலாறு என்று கேள்விகள் விலகியே சென்றன. ஆனால் உற்சாகமாக எல்லோருக்கும் பதிலளித்தார் நைபால்.

"நான் ஒரு புத்தகத்தை எழுதி முடித்து விட்டேன். என்ன செய்யலாம்?" என்று கேட்டார் ஒருவர். "பேசாமல் பதிப்பித்து விடுங்களேன்" என்றார் நைபால்.

"முன்பெல்லாம் கிரிக்கெட்டில் எனக்கு நிறைய ஆர்வம் இருந்தது. இப்பொழுதெல்லாம் எப்பொழுது வீட்டிற்குப் போனாலும், யாரோ யாருடனோ விளையாடிக் கொண்டே இருக்கிறார்கள்" என்று சலித்துக் கொண்டார் அவர்.

நைபாலின் புத்தகத்தை வைத்து "அருமையாக" ஒரு படம் எடுத்திருக்கிறார்களாம். அதை இன்னமும் அவர் பார்க்கவில்லையாம். "என் மனைவி பார்க்க வேண்டாம் என்று சொல்லி விட்டார்" என்றார் சிரிப்புடன். உடன் வந்திருந்த அவர் மனைவி பதிலுக்கு புன்முறுவல் செய்தார்.

நைபாலின் நாவல்களை விட அவரது பயணப் புத்தகங்கள் செழுமையானவை. அதற்கான காரணங்களை அவர் பிரயாண பொழுது சேகரித்துக் கொள்ள முடிந்தது. "பயணப் புத்தகங்கள் எழுதுவது சுலபமான காரியம் அல்ல. மக்களிடம் பொறுமையாகப் பேச வேண்டும். தெளிவாக கேள்விகளை முன் வைக்க வேண்டும். உங்கள் கருத்துகளை அவர்கள் மீது திணிக்காமல், அவர்களிடமிருந்து நிறைய கேட்டுக் கொள்ள வேண்டும்" என்றார் அவர்.

"எழுத்தாளர்கள் எல்லோரும் புத்தகப் புழுக்கள் கிடையாது. சிறு வயதில் நான் புத்தகங்களே படிக்க மாட்டேன். என் கண்களில் எந்தக் கோளாறும் இல்லை. அப்பொழுது எனக்குக் கிடைத்த புத்தகங்கள் அப்படி" என்று அவர் சொன்ன பொழுது பார்வையாளர்களிடமிருந்து பெருத்த சிரிப்பு.

அவரது சமீபத்திய புத்தகமான 'மந்திர விதைகளி'லிருந்து (மேஜிக் சீட்ஸ்) சில பக்கங்கள் வாசிக்கப்பட்டன. தலையை ஆட்டி ஆட்டி கேட்டுக் கொண்டிருந்தார் நைபால். நிகழ்ச்சியின் முடிவில் வாசகர்கள் ஆளுக்கொரு மந்திர விதையை எடுத்துக் கொண்டு, நீண்ட வரிசையில் காத்திருந்து நைபால் கையெழுத்தைப் பெற்றுக் கொண்டார்கள். எந்த மந்திரத்தைப் போட்டு இத்தனைக் கூட்டத்தை அவர் தன் பக்கம் இழுத்தார் என்பது புரிந்தது.

✍ மருதன்

Registered with the Registrar of Newspaper of India under No. 1641/57 " Registered No. TN/PMG (CCR) 575/03-05" Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 358/03-05"
Registered as a Newspaper in Sri Lanka Supplement to the Kalki Issue Dated 31.10.2004

